# பாரதஸாரம்

4608



இது

கல்குளம் - குப்புசாமி முதலியார், பி. ஏ.,

இயற்றியது





முதற்பாகம்



சென்னை:

மினெர்வா அச்சுக்கூடத்திற்

பதிப்பித்தது



1901

# PREFACE.

THIS BOOK is an adaptation of Mrs. Annie Besant's Mahábhárata—"The Story of the Great War." I have undertaken the translation of the work at the suggestion of *Mr. C. Muttukumaraswami Mudaliyar, B.A., Zamindar of Chunampet.* Mrs. Besant's permission was obtained at the annual Theosophical convention at Adyar, in December 1899, through the *Hon'ble Justice Sir S. Subrahmanya Aiyar, K.C.I.E.,* who suggested the publication of the book in parts in a monthly magazine. Accordingly the first four chapters of the book appeared in the *Jnana Bodhini*, one of the leading Tamil magazines in this Presidency.

It would take nearly two years if the remaining portion of the work were to be completed in the above magazine. As this would entail long delay, I have, at the instance of many of my friends, decided to bring out the whole in book form at once. The present book is a reprint of the chapters that have already appeared in the magazine, with additions and several other improvements; and it com-

prises the A'di Parva and the Sabhá Parva, the first two Parvas of the Mahábhárata; and two other parts, which are now in the Press, cover the ren ain-the portion of the great epic.

My thanks are due to Mr. T. T. Kanakasundram Pillai, B A., Head Clerk, Educational Department of the Government Secretariat and to Mr. V. G. Surya-náráyana Sastriyar, B. A., Head Tamil Pandit of the Madras Christian College for revising the proofs and for many valuable suggestions which they made while this work was going through the Press.

MADRAS,
*August* 10, 1901.

K. K. M.

———

# நூன்முகம்.



ஆங்கில மொழியில அனிபெஸன்ட் அம்மை யவர்கள் இயற்றிய மகாபாரதத்தை மொழி பெயர்த்துச் சிற்சில விடங்களில் மிகவும் இன்றியமையாத சிலவற்றை நமமவர் சுவைக்கிணங்க இயைத்து யாவரும் விரும்பத்தக்கவாறு யாம் எம்மாலியன்றவளவு இந் நூலினைச் செய்துளேம். யாவரும் படித்து மாபாரதக் கதையின் உண்மைப்பொருளை அறியவேண்டு மென்பதே முதனூலாசிரியர் கருத்தாகலின் வழி நூலியற்றிய யாமும் அவர் கருத்திற்கேற்ப இதனை மிகவுந்தெளிவான நடையில அமைத்திருக்கின்றேம்.

இது, குறும்பேட்டு ஜாகீன்தார் ம-m-m ஸ்ரீ முத்துக் குமாரசுவாமி முதலியாரவர்களது வேண்டுகோட்கிணங்கி மொழிபெயர்க்கப் பெற்று, 1899ல் முதனூலாசிரியா உத்தரவுகொண்டு சனமபொருந்திய ஜஸ்டிஸ் ஸர். எஸ். சுப்பிரமணிய ஐயரவர்கள் கே. ஸி. ஐ. இ. குறிப்பித்தவாறு தமிழ்ப் பததிரிகைகளுள் தலைநின்ற வற்றுளொன்றாகிய **ஞானபோதினி** என்னும மாதாந்தத் தமிழ்ப்பத்திரிகையின் வாயிலான் அவ்வக்காலத்துச் சிறிது சிறிதாக வெளிப்போந்தது. மாதந்தோறும் சிறிது சிறிதாக வெளிப்படுத்துவதிற் காலநீட்டிக்கின் றமைபற்றி எமது நண்பர் பலரும் நூல் முழுவதையும்

ஒருங்கே அச்சிட்டு வெளிப்படுத்துதலே நலமென்ற தற்கேற்ப இந்நூலைத்தனித்து அச்சிடப்புகுந்த யாம், பலரும் எம்மைக் கேட்டுக் கொண்டவாறு நூலை மூன்று பாகங்களாகப் பிரித்து ஆதிபருவமும் சபா பருவமும் அடங்கிய இம்முதற்பாகத்தை அன்னேரைத் திருப்தி செய்யும் வண்ணம் வெளியிடுகின்றேம். மற்றையிரண்டு பாகங்களும் கூடிய சீக்கிரத்தில் வெளிவரும்.

இந்நூலை அச்சிடுமவழி உடனின்றுதவிய எமக்குற்ற நண்பராகிய ம-ா-ா-ஸ்ரீ **திரு. த. கனகசுந்தரம் பிள்ளையவர்க**ளது நன்றி ஒருபொழுதும் மறக்கற்பாலதன்று.

யாம் மேற்கொண்ட தொழிலுக்கிடையே அவ்வக்காலங்களிற் கிடைத்த அவகாசங்களில் இதனை எழுதினேமாதலின் இதன்கண் சில பிறழ்வுகளிருப்பின் அறிவுடையோர், அவற்றைத் திருத்தி அமைத்துக் கொள்வாராக.

இந் நன்முயற்சியின்கண் எம்மைத்தூண்டி நூல் முற்றுப் பெறுமாறு செய்தருளிய எல்லாம் வல்ல முழுமுதற்கடவுளை மனமொழி மெய்களிற் றொழுகின்றனம்.

10 - 8—'01.
சென்னை.

**க. குப்புசாமி முதலியார்.**

# பொருளடக்கம்.



## முதற்பாகம்.

பக்கம்.





# பாரதஸாரம்.

## விநாயகர் வணக்கம்.

நேரிசை வெண்பா.

வேதந் தொகுத்த வியாசர்முனிவர் செய்தருளு
மேதமின்மா பாரதத்தை யெவ்வெவரு—மோதச்
சுருக்கி யுரைத்தமிழாற் சொல்லத் துணையாந்
திருக்கரிதன் மாமுகத்தெந் தே.

## அத்தியாயம்—I.

## முகவுரை.

வேதம், ஆகமம், இதிகாசம், புராணம் என்னும் பெரியநூற்பிரிவில், பாரதம் இராமாயண மென்ற இரண்டும் இதிகாசத்துளடங்கும். பாரதம் உலகத்தி லுள்ள அரிய பெரிய கிரந்தங்களுள் ஒன்றாகும். † "பாரதஃபஞ்சமோவேதஃ" என்று இதை வேதத் தோடு சேர்த்து ஐந்தாவது வேதமென வழங்குத லால் இதன் பெருமை நன்குவிளங்கும். இதைச் சற் றேனும் ஆய்ந்தறியாது இக்காலத்தவரிற் சிலர், இதன்

† भारतः पञ्चमो वेदः ஸாரத: பஞ்சமோவேத: ।

பெருமையைக் குறைக்கவெண்ணுதல் அறியாமையே யாம். இதனை வாசிக்கப்புகுவோர் வெறுப்பென்பதை யொழித்து, மேலானவர்களாற் செய்யப்பட்ட நூலா தல்பற்றி அதற்குரிய கௌரவமும் வைத்து, அதிக ஊக்கத்துடனும் விருப்பத்துடனும் அதனை அனுசி னொலொழிய அதிற் பொதிந்திருக்கும் உண்மைகள்யா வும் எளிதிற் புலப்படா. யாதேனுமொரு பொருளின் சிறப்பை நன்கறியவேண்டுமாயின் நமதுகண்கொண்டு அதை நன்றாய்ப்பார்த்தல் வேண்டுமன்றோ? கண்ணை மூடிக்கொண் டிருந்தாற் பொருளின்னதென எப்படி அறிதல்கூடும்? அதுபோலவே, நூல் நுவலும்பொரு ளையும் நன்கறியவேண்டுமாயின் மனக்கண்ணையும் நன் றாய்த் திறந்துபார்த்தால்தான் பொருள் நன்கு புலப் படும். ஒருவன் தன் மனம் வெறுப்பெனும் வழி ஒழி த்து விருப்பெனும் நெறிப்பட்டவுடன் இந்நூலை எவ் வாறு வாசித்தல் தக்கதெனப் பார்த்தல்வேண்டும். இந்நூலின் பிரிவாகிய பதினெண் பருவங்களுள் ஒவ் வொன்றிலுமிருக்கும் முக்கிய விஷயங்களைத் திரட் டிப் பார்ப்போம். அஃதாவது, இந்நூலி லடங்கிக் கிடப்பன யாவை? இந்நூல் போதிக்கும் நீதிகள் யா வை? இதிற் சொல்லப்படும் பல்வகைச் சனங்களின் நடையுடைபாவனைகள் யாவை? அவர்கள் செய்தன வும் செய்யமுயன்றனவும் யாவை? தேவர்கள் அவர் களுக்கு எவ்வெவ் வமயத்தில் எவ்வெவ்வாறு உதவி செய்து கொண்டுவந்தனர்? எவ்வெவ்வாறு இடை யூறியற்றிக்கொண்டு வந்தனர்? இவற்றையெல்லாம் நன்காராய்தல் வேண்டும்.

அக்காலத்தில் தேவர்களும், தேவதைகளும் தாம் நேரேவந்து மனிதர்களுக்கு உதவி புரிந்து போயினர் என்று சொல்வது,* இக்காலத்திற் சிலர்க்குப் பரிகசிக்கத் தக்கதெனத்தோன்றும். அதற்குக் காரணம் அன்னோர்க்குத் தம்மதத்தினுண்மை சிறிதேனுந் தெரியாமையே யன்றி வேறில்லை. இந்து சமயத்தவர்களே இப்படி யிருப்பார்களாயின் மற்றும் புறச சமயத்தவர்கள் அறிவின்மையாலும் அழுக்காறாலும் தாம் வேண்டியவாறு பிதற்றுதலுக்கோர் அளவுமுண்டோ?

எவ்விதமாக உற்றுப்பார்க்கினும் பாரதம் பெருமையுடையதாகவே காணப்படுகின்றது; காவியமாக எடுத்து நோக்கினும் அதற்குரிய உறுப்புக்களெல்லாம் பொருந்திப் பொலிந்து விளங்குகின்றது. ஒவ்வொரு ஜாதியாரிடத்தும் பலநூல்களுள்ளன. சில ஜாதியாரிடத்தில் அவை அதிகமாகவும், வேறு சிலரிடத்திற் கொஞ்சமாகவு மிருக்கின்றன. நம்மவர்களிடத்திற் காவியங்களும், சரித்திரங்களும், சாதாரண கதைகளும், தத்துவம், மதம் இவைகளைக் குறித்த நூல்களுமுள. உயர்ந்த ஜாதியாரென்று உலகத்தோரால் நன்கு மதிக்கப்படுவதும், தாழ்ந்த ஜாதியாரென்று சொல்லி யிகழப்படுவதும், அநேகமாய் அந்தந்த ஜாதியிலுள்ளோராற் செய்யப்பட்டுத் தொன்று தொட்டு வழங்கிவரும் அருமையான நூல்களின குணத்தாலும் இனத்தாலுமே யன்றி வேறில்லை. ஆய்ந்து பார்க்குமளவில் இந்தியர்களிடமிருக்கும் கிரந்தத்தைப் பார்க்கினும் சிறப்புடையன வேறெந்த

ஜாதியாரிடத்தும் இல்லையென உறுதியாய்ச் சொல்ல வியலும்.

எவற்றையும் விசேஷமாயெடுத்துச் சொல்வதில் வான்மீகி, வியாசர் இவர்களுக்குச் சமானமான †ஹோமர் என்னும் கவி கிரேக்கருடைய சரித்திரத்திலுள்ள பத்து வருஷ *யுத்தத்தைக்குறித்துச் செய்த காவியத்தையும், இன்னும் தத்துவங்கள், சரித்திரங்கள் முதலியவைகளைக் குறித்தெழுதியிருக்கும் அக்கிரேக்கநாட்டுப் பெரியவர்களைப்பற்றியும், அவர் செய்த நூல்களிற் சிலவற்றையும், நம்மவரிற் சிலர் கற்றும் கேட்டு மிருக்கின்றார்கள். அவர்களாற் செய்யப்பட்ட கிரந்தங்களை வாசிப்பவர்கள், மிகவும் சிறந்த காவியங்கள் செய்யுந் திறமையுடைய கவிகளும், தத்துவ சாஸ்திரிகளு மிருந்திருக்கிறபடியாற் ‡ கிரேக்க தேசமானது அக்காலத்து எவ்வளவு சிறப்புற்றிருந்தலவேண்டுமென்று ஆச்சரியத்துடன் வினவுகின்றார்கள். மேலுநாட்டிலுள்ளவர்களுக்குக் கொஞ்சக் காலத்திற்குமுன்புதான் சம்ஸ்கிருத பாஷையின் பரிமள வாடை யடித்தது. அதன் பின் அவர்களிற் சிலர் அதன் வாசனையை நன்குணர்ந்து, அதிலுள்ள சிறந்த நூல்கள் சிலவற்றைக் கற்றறிந்து, இத்தகைய நூல்களைசசெய்த இந்தியர்கள் அக்காலத்து மிகவும் சிறந்த நிலைமையிற்று னிருந்திருத்தல் வேண்டுமென வூகித்து, இவர்களைப்பற்றி விசேஷித்துச் சொல்லத் தொடங்கினார்கள். மஹாபாரதம் உலகத்திலுள்ள கிரந்தங்களனைத்தினும் மிகவும் சிறப்புள்ளது. மற்

† Homer. * Trojan war. ‡ Greece.

றைப் புத்தகங்களுள் ஒன்றேனும் நாமறிய விரும்பும் விஷயங்களனைத்தையும், நமக்குறுதி பயத்தற்குரிய அருமையான விஷயங்களேயும், ஒருங்கே பொருந்தி னதன்று. பாரதத்தின் பாஷை நடையோ மிகவுஞ் சிறந்தது. அதிற் சொல்லப்பட்ட கதைகளோ அத னினும் சிறந்தன. ஆகையால் நம்முன்னோருடைய பிரயோஜனத்தை நாடியும் நம்பிரயோஜனத்தைக் கருதியும் நம்முன்னோரால் செய்யப்பட்டுள்ள இப்பெரிய நூலுள் ஒருசிறு பாகத்தையேனும் நம்மவர்கள் கற் றுக்கேட்டுத் தெளியாதிருத்தல் மிகவு மாச்சரியமான விஷயம்.

இதனருமையும் பெருமையும் முக்கியமாய் மூ ன்று விஷயங்களிலடங்கி யிருக்கின்றன. அவையா வன:—(1) அதிலுள்ள நீதிகள். (2) அது போதிக் கும் தத்துவம். (3) அதிலடங்கியிருக்கும் சரித்திரம்.

(1) நன்னடக்கை யின்னதெனவும் அதற்குரிய விதிகள் இவையெனவு மெடுத்துச் சொல்வது நீதி யின் பாற்படும். கணக்குக் கற்பானொருவனுக்கு அதற் குரிய விதிகளும் காட்டியிருக்கிறபடியால் அவற்றைக் கொண்டு கணக்குகளேயும் தப்பிதமின்றிப் பூர்த்திசெ ய்கின்றான். நடக்கையும் இது விஷயத்திற் கணக்கைப் போன்றதுதான். இதற்கும் விதிகளுள்ளன. அவற் றைக் கைப்பற்றினல்தான் நல்வழியில் நடத்தல் கூடும். நீதி சாஸ்திரமானது ஒருவனைப்பார்த்து, "நீ நல்வழியில் நட; துன்மார்க்கத்திற் செல்லாதே" என்று சொல்லுகிறதில்லை. ஆனல் நல்லதின்னதென்பதும்

கெட்டதின்னதென்பதும், ஒருவன் செய்யத்தகுவன இன்னவென்பதும், செய்யா தொழிக்கத் தக்கன இன்னவென்பதும் அஃது எடுத்துக் கூறுகின்றது.

**மகாபாரதம்,** நாமெப்படி நடத்தல் வேண்டுமென்பதை எடுத்துக்காட்டி நன்னெறியை நன்றாய்ப்போதிக்கும் குருவைப் போன்றுளது ; இளஞ்சிறார்க்கேயன்றி வயதின் முதிர்ந்தோர்க்கும் அறிவு புகட்டுகின்றது; குழந்தை, புதல்வன், புதல்வி, ஆண், பெண் என்னும் இவர்கள் தத்தம் நிலைமையிற் செய்யவேண்டுவனவற்றை எடுத்துரைக்கின்றது. பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்று சொலலப்பட்ட நான்கு வருணத்தாரும் இவருட் சேராத பஞ்சமர்களும் நாடோறும் நடந்துகொண்டு வரவேண்டிய மார்க்கங்களும் அதில விரிவாய்க் கூறப்பட்டுள்ளன; வாணிகத்தைத் தனக்குத் தொழிலாகக் கொண்டானொருவன் நடக்கவேண்டிய மார்க்கங்களும் விளக்கப்பட்டுள. குடும்பத்திலுள்ள ஸ்திரீ புருஷர், மகன் தந்தை, தாய் மகள், இவர்கள் ஒருவர்க்கொருவர் நடக்கவேண்டியமாதிரியும் அதில் நடத்திக்காட்டப்பட்டுள; ஒவ்வொரு நாளும் உலக வாழ்க்கையிற் சாதாரணமாய் நிகழும் விஷயங்களும் விரிவாயும் சாதுரியமாயும் கதாரூபமாகக் காட்டப்பட்டுள்ளன.

அஃதெப்படியெனின் ஒருவனைப்பார்த்து "வாய்மையே வழங்கல்வேண்டும்" என்று சொல்வதற்குப் பதிலாக, அரிச்சந்திரனைப் போன்று சத்தியத்தில் நின்றவர்களைப் பற்றியும், அதனால் அவர்களுக்கு

வந்த நற்கதியைக் குறித்தும் வற்புறுத்துகின்ற அநேக கதைகள் சொல்லப்பட்டுள்ளன. "நீ பொய்சொல்லலாகாது" என்று சொல்லுவதற்குப் பதிலாகப் பொய்சொன்னவர்களுக்கு நிகழ்ந்த துன்பங்களை எடுத்துக் காட்டும் கதைகளும் அதில் அனேகம் பொதிந்துள்ளன. இதில் இவைபோன்ற பற்பலநீதிகளைத் தெரிக்கும் கதைகள் இன்னும் பலவுள. நன்னடக்கையின் விதிகள் இவையெனவும், அவைகளை அனுட்டிக்குமாறு இன்னவெனவும் பாரதம் நன்கு புலப்படுத்துகின்றது. நன்னடைக்குரிய விதிகளை மாத்திரம் எடுத்தெழுதி யிருப்பின் அதனுண்மை அவ்வளவு நன்றாய் விளங்குவதரிது. அதைப் பார்ப்பவரிற் பலர்,

* " சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல்."

என்னுந் தேவர்குறளை ஒருவாறு நோக்கி, சொல்லுதல சுலபம நடத்தல் கஷ்டமெனச் சொல்லிப்போவார்களேயன்றி அவ்வாறு நடக்க முயலார். அத்தகையர்களுக்கு அந்தந்த விதிகளைத் தம் வாழ்நாளில் மேற்கொண்டு நடந்து காட்டியவர்களின் சரித்திரங்களையுமுரைத்து விதிகளையுமெடுத்துக் காட்டினால் அவர்கள அவ்விதிகளை முன்னினும் நன்கு நிரகிப்பதுமன்றி நடக்கவும் முயல்வார்கள்.

அறிவிலார் சிலர் நினைப்பது போலாது, ஒருவனது நன்னடை அவனுக்கும் பிறர்க்கும் அத்தியாவசியகமானது. ஜயாபஜயமும், சுகதுக்கமும், செல்வமும் வறுமையும் ஒருவனுக்கு நடையால்வருவன.

* திருக்குறள்.

இதைக்குறித்து ஒரு கதையுமுண்டு. பிரஹ்லாதன் தன் நன்னடையின் பலனாக ஒரு காலத்துத் திரிலோக சாம்பிராஜ்ஜியத்தையு மடைந்திருந்தான். அப்போது இந்திரன் ஒரு வேதிய வேடங் கொண்டு அவனிடம் சென்று, அவன் சீடனாக அநேக நாளிருந்து, அவனுக்கு அதிக பிரீதிவருமாறு ஒழுகிக்கொண்டு வந்தான். ஒருநாள் தனது சீடனிடத்து அதிக விசுவாசம் பிறக்கவே அவனை அழைத்து 'உனக்கு வேண்டிய வரத்தைக்கேள்; நான் தருகின்றேன்' என்ன, இந்திரனும் 'உன் நன்னடையை யான் விரும்புகின்றேன்' என்றான். பிரஹ்லாதன் என் செய்வானினி! தன்னுடைய பிரதானமான இக்குணத்தைத் தானஞ் செய்துவிடுவதனால் யாது விளையுமோ என்று மச்சமுடையவனாயிருந்த போதிலும் தான் வாக்களித்து விட்டபடியால் வேறொன்றுஞ் செய்வதற் கியலாது தடையின்றிக் 'கொடுத்தே' னென்றான். நிகழ்ந்ததைக் குறித்துப் பிரஹ்லாதன் மனக்கவலையுற்று யோசித்துக் கொண்டிருக்கு மளவில் அவனது தேகத்தினின்றும் ஒருஜோதி அருநிழ லுருவத்தோடு வெளிப் போந்தது. அதைப்பார்த்து பிரஹ்லாதன் நீயாரென்ன, அஜ்ஜோதியானது 'நான் உன் நன்னடையின் ஸாராம்சம், நீ என்னை எறிந்து விட்டாயாதலின் உன்னைவிட்டுப் பிரிந்தேகுகின்றேன்; உன்றன் சீடனாகிய அந்தப் பிராமண னிடத்து வாசஞ்செய்யப் போகின்றேன்' என்றது. அதன்பின் வேறொரு ரூபம் முன்மாதிரியாகவே வெளித் தோன்றியது. அதை யாரென வினவியபோது அது, 'நான் நேர்மை என்னும் பெயர்

பெற்றவன்; எப்போதும் நன்னடையோடு குடிகொண்டிருப்பவன். அந்தனன்னை விட்டேகவே யானும் புறப்படவேண்டியிருக்கிறது' என்று சொல்லிப்போய் விட்டது. இம்மாதிரியாகவே அவனிடம் குடிகொண்டிருந்த வாய்மை, பொறுமை, வீரம் முதலிய சகலகுணங்களும் சென்று விட்டன. ஐசுவரியம் அவனை விட்டுப் பிரியும்போது அவனை நோக்கி 'ஓ பிரஹ்லாதா! உன்குணத்தினால் மூன்றுலகினையும் உனக்குட்படுத்தி ஆண்டனை. இதனை அறிந்து தேவர்களுக் கரசனாகிய ஆயிரங்கண்ணன் பிராமணவேடம் பூண்டு சீடனாய் உன்பிரீதியைச் சம்பாதித்து உன்குணத்தைக் கவர்ந்துகொண்டான். சிறந்த அறிவும் ஆண்மையும் பொருந்தின பிரஹ்லாதனே! எனக்கும மற்றவைகளுக்கும் மூலாதாரம் நலவொழுக்கமாகிய நடையே யன்றி வேறில்லை' யெனக்கூறி அக்குணம போனவிடத்துத் தானும் சென்றது. *

மகாபாரதத்துப் பொதிந்துள்ள அநேக கதைகளினின்றும் நாம் அறியக்கூடியது இன்னுமொரு விஷயம் உளது. அஃதாவது, எது ஒருவனுக்கு நன்னடையெனக் கொள்ளப்படுகிறதோ அதுவே மற்றொருவனுக்கும் நன்னடையாக வேண்டுமென்பதில்லை. ஒருவன் நடக்கவேண்டிய முறை அவனுடைய நிலைமைக்கியைந்தது. ஒருவன் மாணாக்கனா யிருந்தால் அவனுடைய கடமை உபாத்தியாயர் சொற்படி நடக்கவேண்டுவது; உபாத்தியாயராக விருக்கும் பக்ஷத்தில்

* வியாசபாரதம், சாந்திபருவம் § 124.

மாணவர்கள் இவ்வாறு நடத்தல் வேண்டுமென்று அவன் அவர்களுக் கறிவுறுத்துவது நியாயந்தான்; தகப்பனு யிருக்கும்பக்ஷத்திற் பிள்ளைகளை அப்பிவிருத்திக்குக் கொண்டுவரத்தக்க காரியங்களைச் செய்தல் அவனுடையகடன். பிள்ளையோ தன்தகப்பனார் சொற்படி,

* "தந்தை சொன்மிக்க மந்திர மில்லை"

என்னு மூதாட்டியின் முதுமொழிக்கிணங்க நடத்தலே தகுதி. ஒருவன் தன்னிலைமை யின்னதென்றும் அதற்குரிய நடையுடையனுதல் வேண்டுமென்றும் அறிந்து நடந்தாலொழிய அவன் தனக்கும் பிறர்க்கும் பயன்படான். கல்விகற்கும் சிறுர்கள்மாணவர்க்குரிய கடமைகளைப் பூர்த்திசெய்து கொண்டுவர வேண்டுமேயன்றி, ஸம்ஸாரத்தைத் தாங்குவோனுடைய கடமைகளைத் தாங்கள் தலைமேற் கொள்ளல் தமக்கும் பிறர்க்கும் துன்பத்தை விளைவிக்கும். மகாபாரதம் அநேக சந்தர்ப்பங்களில் ஒருவனுடைய நடைக்கும் நிலைமைக்கும் இருக்கும் சம்பந்தத்தைப் பற்றியும், தாரதம்மியத்தைக் குறித்தும் வற்புறுத்துகின்றது.

மேலும், ஒவ்வொருவனும் தானறிந்து நடக்க வேண்டிய நானுவித நடைகளைக் குறித்தும் கூறுகின்றது இப்புத்தகம். மற்றவைகளோ அப்படியல்ல. சில புஸ்தகங்கள் சிலர்க்கே பயன்படும். கடின நடையில் எழுதப்பட்டவை கற்றவர்க்கன்றி மற்றவர்க்குப் பயன்படா.

* கொன்றைவேந்தன்.

மதவிசாரணை செய்யும் சில புத்தகங்கள், இலக்கணம், இலக்கியம், தர்க்கம், முதலியவைகளிற் பாண்டித்திய முடையார்க்கே உபயோகமாகும். கிரகஷீர குட்சிக்கு யாது பிரயோசனம்? பாரதமென்னும் புத்தகமோ அப்படிப்பட்ட தன்று; எல்லோர்க்கும் பயன் படத்தக்கது. ஒருவன் கற்றது எவ்வளவு குறைவாயிருந்த போதிலும், அவன் தனது சக்தியால் அறிந்து கொள்ளக்கூடிய விஷயங்களும் இதிற் பலவுள; கல்லாதவர் கேட்டறியலாம்; கற்றவர் ஒவ்வொருவரும் கற்றுங்கேட்டு மறியலாம்; அதனால் மிக்க பயனையு மடையலாம். வேறு நூல்கள் கல்லாமற்போன போதிலும, கற்றறிய அவகாச மில்லாமற் போயினும், இந்தப் புத்தகத்தை யாயினும் வாசிப்பார்களாயின் தாம் உய்வதற்குரிய மதஞானமும் குணஞானமும் எளிதில் அடையலாம்.

(2) அதிற் சொல்லப்பட்ட தத்துவங்கள் புத்தியைக் கொண்டு அறிய வேண்டியவைகள். மனிதனுடைய புத்தி மிருகம முதலிய ஜெந்துக்களுடைய புத்தியைக் காட்டிலும் விசாலமும் கூர்மையு முடையது. பகுத்தறிவும் சேர்ந்து ஆறறிவுடையனாதலின் இவனது புத்தி மிகவும சிறந்தது. மேலே தத்துவ மறியக்கூடிய புத்தி யென்றது இப்பகுத்தறிவும் சேர்ந்த புத்தியைத்தான். தத்துவ நூல் என்பது, கடவுள், மனிதன், பிரபஞ்சம், இவற்றின் சொரூப முதலிய குணங்களையும், ஒன்றற்கொன்றுள்ள சம்பந்தத்தையும் எடுத்துச் சொல்லி அவற்றை யெல்லாம் ஓரொ

மூன்று படுத்திக் காட்டுவதாம். மகாபாரதமும் ஒரு பெரிய தத்துவத்தைக் கற்பிக்கின்றது. ஆய்ந்து பார்க்கின் அதுதான் இந்துமத முழுதும் பரந்திருப்பது. எல்லாவற்றிற்கு மொரு முதல்வன் உண்டென்றும், அவனைத்தான் ஈசுவரன், பரப்பிரமம் முதலிய பெயரிட்டு வழங்குகிறார்களென்றும், ஒவ்வொரு ஜெந்துவினிடத்தும் ஒவ்வொரு வஸ்துவினிடத்தும் குடிகொண்டிருப்பவன் அவனேயென்றும், போதிக்கின்றது. சூரியசந்திரர் தாம தினந்தோறுஞ்செய்துவரும் வேலைகளைச் செய்யும்படி செய்கிறவனும் அவன்தான். புல், பூண்டு, மரம், கொடி, செடி, பறவை, மிருகம், ஊர்வன, நீர்வாழ்வன முதலிய பல்வகைப் பிராணிகள், தேவர்கள், மனிதர்கள் இவர்களின் உயிருக்குயிராயிருப்பவனும் அவன்தான்.

* "புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராயச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்து
ளெல்லாப் பிறப்பும்"

பிறந்திளைத்த உயிருக்கு உயிராயினன் எனவே, இறைவனில்லாதவிட மொன்றுமில்லை என்பதும், அவனெங்கு மிருக்கின்றானெனவே எல்லாவற்றிலுமிருப்பது ஒருயிரே, அவ்வுயிர்தான் கடவுளுமென்பதும் போதரும். இவ்விதமாய்ப் பார்க்கும்போது எல்லா ஜெந்துக்களும் ஒன்றேயாம். இதனால் நமக்கு எல்லா ஜெந்

* திருவாசகம்.

4608



துக்களிடத்தும் அன்பும் ஆர்வமும் அருளுமிருத்தல் வேண்டுமென்பது புலப்படுகின்றது. எல்லா வுயிர்களிடத்தும் ஒருபொது உயிர் பொருந்தியிருப்பதனால், பிறவுயிருக்கு எவ்விதத்துன்பஞ் செய்தாலும் நாம் நமக்கே துன்பஞ் செய்து கொண்டதுபோ லாகின்றது; ஆதலால்தான் மன்னுயிரையுந் தன்னுயிரைப் போற் பாதுகாத்தல் வேண்டு மென்பது. இதைக்குறிததும் ஒருகதையுளது. உசீநரன் என்னும் மறு பெயர்பூண்ட சிபிச் சக்கிரவர்த்தி இராஜ்ஜிய பரிபாலனஞ் செய்துகொண்டு வந்தான். மன்னர்களுக்குத் தன்னாட்டிலுள்ள ரனைவரையும் தன்னுயிரைப் போற் பாதுகாத்தல் கடமையாதலின், அதைச் சிபிச்சக்கிரவர்த்தி சரியாய்நிறைவேற்றிக்கொண்டு வருகின்றனா, இல்லையா என்று சோதித்துப் பார்க்கும் பொருட்டு, தேவேந்திரனும அக்கினிபகவானும் பருந்தும் புறவுமாக வேடந்தரித்தார்கள். பருந்து புறவைத்துரத்திக் கொண்டேகவே புறா அரசனிடம் அதிவேகமாய்ப் பறந்துபோய்ச் சேர்ந்தது. பின்சென்று சேர்ந்த பருந்து தன் இரையாகிய புறவைத் தன்னிடம் சேர்க்கும்படி அரசனைக்கேட்க, அரசன் தன்னிடம் சரண் புகுந்த ஜெந்துவை அநாதரவாயாக விடுதல் தர்மமன்று; ஆகையாற் கொடுக்கமாட்டே னென்றனன். பருந்து இராஜனை நோக்கி, "ஓ அரசனே! உன்னுடைய கடமை எல்லாரையும் காக்கவேண்டுமென்பதென் றல்லவோ சொல்லுகிறாய். அப்படியாயின் நான் விரும்பிப் பின்பற்றிய இரையின்றிப் பசியால் யான்வருந்தி அதனால் மரணமடையின் அதுவும்

பாவமாகாதோ? ஒன்றைக் காத்து மற்றொன்றைக்
காவாதிருத்தலின் பயன்யாது?" என்று விதண்டா
வாதம் செய்தலும் அவ்வனப்பருந்தை நோக்கி 'உனக்கு
ஆகாரம் வேறென்ன வேண்டுமானாலும் தருகின்றே
னென்ன, மற்றவற்றினிடத்துத் தனக்கு விருப்ப
மில்லையெனப் பருந்து முறையிட்டது. மேலும
அது அரசனை நோக்கி, "ஐயா! புறாவைகொடுக்க
மனமில்லாதபக்ஷத்தில், அப்புறா எவ்வளவு நிறையுள்
ளதோ அவ்வளவு உன்னுடைய மாமிசமாயினும்கொ
டுத்தால்தான் எனக்குத் திருப்தியாகுமே யொழிய
வேறொன்றும் திருப்தி செய்யாது" என்றது. அதற்
கோ அரசன் அகமகிழ்ச்சியுடன் சம்மதித்தான்.

அதிசக்களிப்புடன் துலையின் ஒரு தட்டிற் புறா
வை வைத்து, மற்றொரு தட்டில் தன் தேகத்து மாமி
சத்திற் கொஞ்சம் சேதித்து வைத்தனன்.

* "மெலியது மேன்மே லெழச்செல்லச் செல்ல
வலிதன்றே தாழுந் துலைக்கு."

என்பதற்கொப்ப, புறா இருந்த தட்டு, தரையைவிட்
டெழும்பவேயில்லை. இவன் தன் தேகத்திலிருந்த
தசையை யெல்லாங் கொஞ்சங் கொஞ்சமாக அறுத்
தறுத்துத் துலைத்தட்டில் வைத்துப் பார்த்தும், அதி
லிருந்தது அக்கினி பகவானாதலின், அத்தட்டு மே
லெழவேயில்லை. அஸ்திமாத்திர மிருந்த அவ்வரசன்
அந்தத்தில் ஒன்றுந் தோன்றாமல் தானும் தராசின்த
ட்டில் ஏறினன்; உடனே ஆனந்தமடைந்தான், இரு

*நீதிநெறிவிளக்கம்.

தட்டும் ஒரு நிலையினின்றனவாதலின். இவன் தன் தேகத்தின் மீதும் அபிமானமில்லாது தன்னைச்சரண் புகுந்தது எவ்வளவு அற்பமான ஜெந்துவாயிருந்த போதிலும் அதை எப்படியாயினுங் காத்தல் தலையெனக் கடைப்பிடித்து நிறைவேற்றியதற்கு மிகவும் சந்தோஷமும் அன்பும் ஆர்வமு முடையராய்த் தேவேந்திரனும் அக்கினிபகவானும் தங்கள் நிஜஸ்வரூபத்தை அவனுக்குக் காட்டி ஆசீர்வதித்து வேண்டிய வரமுங் கொடுத்துப் போயினர். *

(3) இவ்விதமான தத்துவோப தேசங்களிற் சிறந்ததன்றியும், மகாபாரதம் ஒரு பெரிய சரித்திரமாகவு மிருக்கின்றது. சிலவிஷயங்களிற் சரித்திரத்திற்கு வேண்டுவனவற்றைப் பார்க்கினும் அதிக குணங்கள் பொருந்தி யிருப்பினும், ஒரு பெரிய சரித்திரமென்பதற்கையமேயில்லை. பதினெண் பருவங்களடங்கிய இப்பெரிய புத்தகம் ஏறக்குறைய ஐயாயிர வருஷங்கட்குமுன் நடந்தனவற்றை நடந்தவாறே சொல்கின்றது. ஐயாயிர வருஷங்கட்குமுன் ஸ்ரீ கிருஷ்ணபகவான் மனுஷ காயத்தைவிட்டுத் தம் நிஜஸ்வரூபத்தையடைந்தார். அவரது மனுஷ ரூபம் இவ்விடத்தினின்று சென்றதும், கலியுகம் பிறந்தது. இதிலுள்ள சரித்திரமும் சற்றேறக்குறைய அதனோடே முடிவாகின்றது. முதலில் இஃது உண்மையான சரித்திரமென்றும் கட்டுக்கதை யன்றென்றும் ஒருவன் தெளிந்து அறிதல்வேண்டும். இப்பாரத யுத்தத்தில் இந்தியாவி

* ஆரண்ய பருவம். §. 130. 131.

யிருந்த க்ஷத்திரிய வம்சத்தின் வேர் அடியோடே அறுந்துவிட்டது. இந்தியாவுக்கு யாதொரு பழுதும் வாராது, ஓரிருப்புமதில்போ லிருந்து காத்துக்கொண்டுவந்த க்ஷத்திரிய வம்சம் அநேகம் இதில் அடியோடே மாண்டுபோயின. அப்படி யிதிற் சென்றது போக எஞ்சிநின்றது பலமற்று இளைப்புற் றிருந்தது. வச்சிர கவசம் போன்றிருந்த இச்சாதியார் மடிந்ததனால் இந்தியா எளிதில் இழிவடைவதற் கேதுவாயிற்று.

கலியுகமாகிய இக்காலத்திலேயோ ஜனங்கள் சாதாரணமாய்த் தெய்வங்களிடத்தும அவை நடத்திவரும் காரியத்தினிடத்தும் நம்பிக்கை குறைந்தவர்களாக இருக்கிறார்கள்; ஐம்பொறிகளால் நுகரும் விஷயங்களில் அமிழ்ந்து விடுகின்றார்கள்; பஞ்சேந்திரியத்தாலறியக கூடியவற்றை மாத்திரம் நம்பத் துணிகிறார்கள். அநேகர்க்குத் தாங்கள் தங்கள் கண்ணினாற் பார்க்கக் கூடாதவற்றிலும், அல்லது பரிச முதலியவற்றால் அறியக்கூடாதவற்றிலும் நம்பிக்கையில்லை. அப்படிச் சொல்லுதல் அவர்க்குக் காக்கை வெளிதென்பது போலாகும். கடவுளும் அவர்கள் புலனுக்ககப்படாராதலிற் கடவுளென்பவ ரொருவ ரிருக்கிறாரோ வென்று கூடக் கேட்கத் தலைப்படுகிறார்கள். இதுவே சிலர்க்கு ஐயவினாவாயிருக்கின்றது. அவர்கள் முழுதும் நம்பமாட்டோம் என்று சொல்லத் துணிகிறதுமில்லை; முற்றும் நம்பி நடக்கிறதுமில்லை. அவர்கள் நடை மாத்திரம் நாஸ்திகருடைய நடை

போன்றுளது. பிரதிதினமும் கடவுளாலாகும் ஒவ்வொரு காரியமும் அவராலானதாக நமது கண்ணுக்குத் தோன்றவில்லை. அதனை ஆய்ந்தறிவதும் கஷ்டமாய்த் தோன்றுகின்றது. இதை யறியாத ஜனங்கள் எல்லாவற்றிற்குங் காரணம் பிரபஞ்சத்தின் இயற்கை வல்லமை யென்கின்றார்கள். சூரியன் உதிக்கிறானென்றும், சந்திரன் தனது குளிர்ந்த கிரணங்களோடு கூடிய நல்ல பிரகாசத்தைத் தருகின்றானென்றும், ஜலம் ஓடுகிற தென்றும், நெருப் பெரிகிற தென்றும் சொல்லுகிறார்கள். இப்படி இவைகள் நடப்பது இவற்றின் சுபாவமென்றும் சொல்வார்கள். ஆயினும் ஆய்ந்து பார்க்கின் ஒவ்வொன்றிலு மொரு தேவதை யிருந்து காரியத்தை நடத்திக்கொண்டே யிருக்கின்ற தெனப்புலப்படும். நெருப்புவீட்டிலெரியினும் காட்டிலெரியினும் அதுவும் ஒரு தெய்வத்காலன்றித் தானே யெரியாது. கடவுளிவ்விடத்தில் தீயின் ரூபமாயிருக்கின்றார். அக்கினி பகவான் இவ்விடத்து அவ்வெரியுருவாய்க் காட்டுகின்றார். கங்காநதியின் ஜலமானது ஒரு பெரிய அடங்கா வெள்ளமாக வருவதும் ஒரு தேவதையின் காரியமேயன்றி வேறன்று. கங்கையானவள் தேவலோகத்தில் வேறு ரூபத்தோடு கூடியிருந்தபோதிலும் இவ்விடத்து ஓர் நதி ரூபமாயிருக்கிறாள். இதை நம்பாவிட்டால் மகாபாரதம் நம்மறிவிற்கு என்றும் புலப்படாது; மயக்கத்தையே விளைவிக்கும். எல்லாவிஷயங்களும் நமக்கு இப்போது எப்படிப்புலப்படுகின்றனவோ அப்படியே பாரதத்திற் சொல்லாமல், அந்நாளில் எப்படி நடந்தனவோ அப்

படியே கூறப்பட்டுள்ளன. காண்டவவனம் தீயினாலழி
ந்தது என்று சொல்வதற்குப் பதிலாக அக்கினி பக
வான் எரித்தழித்தாரென்று சொல்வது மரபாயிருந்
தது. தேவர்கள் வருகிறார்களென்பதும் போகிறார்க
ளென்பதும் தேவதைகள் இதை ஆக்குகின்றனரென்
பதும் அதை அழிக்கின்றன ரென்பதும் அதிற்சொல்
லப்பட்டிருக்கின்றன. தெய்வத்தில் நம்பிக்கை யில்
லாதவர்கள், இப்படிச் சொல்வதெல்லாம் கற்றோர்
தம் சாமர்த்தியமே யன்றி உண்மையாய்ப் பார்க்கும்
போது ஒன்றுமில்லை யென்பார்கள். அன்றைக்கு
நடந்தது இன்றைக்குந்தான் நடந்து வருகின்றதெ
ன்று சொன்னால் அநேகர் நம்பார்கள். இவர்கள் நம்
பினாலென்? நம்பாக்காலென்? அன்றைக் கெவ்வளவு
நடந்து கொண்டுவந்ததோ அவ்வளவு இன்றைக்குந்
தான் நடந்துகொண்டு வருகின்றது. அக்காலத்திலோ
கடவுள் தாம் எதிர்நின்று காரியம்நடத்துவதை ஜனங்
களும் பார்க்கச்செய்தார். இப்போதோ அப்படிச
செய்கிறதில்லை. ஏனெனின் மனிதர்கள் விஷயங்க
ளுக்கு அடிமையாய்ப்போய் இறைவனை விருப்புடன்
நாடுகின்றாரில்லை. பரமனுடைய பாததாமரையைப்
பணியும் பரிசுத்தமனமுள்ள ஞானிகளுக்கே பரம
னைப் பார்த்தல எளிது. அத்தன்மை யானவர்கள்
இப்போது மிருக்கிறார்கள். அவர்கள் இப்புத்தகத
தில் அதிக நம்பிக்கையுடையவர்கள். அவர்களுக்கு
இதிலுள்ள கதைகள் விந்தையாகத்தோன்றா.

பிரபஞ்சத்தினது கண்ணுக்குப் புலப்படாப் பா
கத்தை, சுபாவாதீதமென்று சிலர் சொல்லுகிறார்கள்.

அது பிழையேயாகும். பிரபஞ்சத்தின் பெரும் பாகத்தினும் நமது கண்ணுற் காணக்கூடாத எத்தனையோ லோகங்கள், அண்டங்கள், பிராணிகள் இருக்கின்றன. அவைதாம் நாமிருக்கும் இப்பூமியை இயக்குகின்றன. ஆதலின் சுபாவாதீத மென்பது பொருந்தாது.

அந்நாட்களிற் கடவுளர் வந்து மனிதர்களுக்கு உபதேசம் செய்து போயினார்கள். சில சமயங்களில் நேரேயும் சில சமயங்களில் ருஷிகள் மூலமாயும் அறிவு ஊட்டுவித்தார்கள். மனிதர்கள் உபயோகத்திற்கு மந்திரங்களும் கொடுக்கப்பட்டிருந்தன. மந்திரமென்பது ஒரு வார்த்தை அல்லது ஒரு வாக்கியம்; அதனுடைய சப்தம் நமது கண்ணுக்குப் புலனாகாத லோகங்களில் அதிக வல்லமை பெற்றிருக்கிறது. அம்மந்திரத்தை உச்சரித்த மாத்திரத்திலேயே அருமையான காரியங்களெல்லாம் சாத்தியமாகின்றன. ஆழ்ந்தாலோசிப்பதற்கு அக்காலத்து மனிதர்களறிந்திருந்தார்கள். ஆகையினால் அவர்கள் எண்ணங்களே எண்ணியவாறு நிறைவேற்றத்தகுந்த வன்மையுடையனவாயிருந்தன. மனிதன் கடவுளைப்பற்றித் தியானித்ததாகவும் அவர் அவனிடம் வந்ததாகவும் அனேக விடங்களிற் சொல்லப்பட்டிருக்கிறதை நாம கற்றுங்கேட்டு மிருக்கிறோம். ஒருவன் ஓர் அஸ்திரத்தைப்பற்றிநினைத்தான், நினைக்க அவ்வஸ்திரம் அவன் கைக்கு வந்தது என்று சொல்லப்பட்டிருப்பதை யாம் அறிந்திருக்கிறோம். எண்ணத்துக்கு அப்போதிருந்த சக்தி இப்போது மிருக்கிறது. மேற்புல விஞ்ஞானிகள அதன் சக்தியைச் சில நாளாகப்பரீக்ஷை செய்து

கொண்டு வருகின்றார்கள். அக்காலத்தும் அம்மந்தி ரங்களைக்கொண்டு கடவுளை யழைக்கவாவது அல்லது ஓரஸ்திரத்தை அடையவாவது எல்லா மனிதராலுமு டியவில்லை. தக்க ஞானமுள்ளவர்கள் உபயோகித்தாற் பலனுண்டேயன்றி மற்றவர்களால் யாதொன்றும் முடியாதிருந்தது. இக்காலத்திலும் யோகிகளிற் சிலர் தாம் தம் எண்ணத்தை இவ்வாறு உபயோகிக்கலாம். ஏனெனின் அப்போதிருந்த கடவுளர்தாம் இப் போது மிருக்கிறார்கள். அவர் தாம் வேறுருவராய் மாறவுமில்லை. அவர் அன்று ஏற்படுத்தின விதிகள் மாறுபடவுமில்லை. மனம் மாறிப்போனவர்கள் மனி தர்களேயன்றிக் கடவுளரலலர். மனிதர்கள் சக்தி யற்றவர்களாய்ப் போய்விட்டார்கள். அதற்குக்கார ணம் அவர்களுக்குக் கடவுளிடத்து நம்பிக்கையும் பக்தியுமில்லாமையே யாம்.

தேர்ப்பாகன் தன் இரதத்திற் பூட்டியிருக்கும் குதிரைகளை எப்படிச் செலுத்துகின்றானே அப்படி யே இவ்வுலகைக் கடவுளும் நடத்துகின்றார். பாகன் தன்னிடத்திலேயே இருந்து கலினத்துப் பூட்டியிருக் கும் வாரை எபபடி யிழுக்கின்றானோ அதற்கியையப் பரிகளும் இரதத்தை யிழுத்துச் செல்லுகின்றன. அதைப்போன்று கடவுளும் உலகமாகிய இரதத்தின் மீது உட்கார்ந்து நானாவித சக்திகளாகிய குதிரைக ளைத் தன் இச்சாசக்தியாகிய வார்கொண்டிழுக்க உல கமும் செல்லவேண்டியவழிச் செல்கின்றது. எப்ப டிச்சென்றால் நலமோ அப்படியே நடத்தப்படுகின் றது. உலகும் இம்மாதிரித் தன் பிரயாணத்தையே

செய்துகொண்டிருக்கின்றது. இப்படிச் செல்வதற்கோர் நேர் பாதையுண்டு. அதற்குக்கிளைவழிகளுமுண்டு. உலகம் தன் பிரயாணத்தின் உத்தேச இடத்தைச்* சீக்கிரமடைய வேண்டுமெனின் மேற்சொன்ன நேரிய வழியாய்ப் போதல்வேண்டும். பார்வைக் கினிமையாய்த் தோன்றுங் கிளைவழிகளிற் போதற்கே மனிதருக்கிஷ்டம். கடவுள் நேரிய வழிக்கிருபுறத்திலும் ஆழ்ந்த கால் வெட்டி வழிகாட்டு மரங்களும், பள்ள மிருப்பதைத் தெரிவித்தற்குத் தம்பங்களும் நாட்டுவித்திருக்கின்றார். இவ்வளவு ஏற்பாடு செய்தும் மனிதர்கள் கண்ணை மூடிக்கொண்டு வேண்டுமென்று தாமெனு மகங்காரத்தோடு நன்னெறியினின்றும் விலகிப்போனும் பள்ளத்தில் விழுந்து தம் பத்திற் றுக்கி, கைக்கால்களை முறித்துக் கொள்ளுவார்கள். அதைத்தான் அவர்கள் துன்ப மனுபவிக்கிறார்களென்று நாம் சொல்லுகிறோம். இத்துன்பங்களும் கஷ்டங்களும் அகப்படுதற்கரிய அருமருந்தாகும். பார்வைக்கு மாத்திரம பரிமளம் பிரகாசத்தோடு கூடியிருக்கும் அக்கிளை வழிகளில் இறங்கும் போதே இவ்வளவு துன்ப முள்ளனவாகச் செய்துவையாவிடின் மனிதர்கள் தாம் கதிபெறுவதற்காகச் செல்லவேண்டிய நேரிய வழியைவிட்டுப் பற்பல கிளைவழிகளிற் சென்றுவிட்டால், அவர் கதிபெறுதற்குரிய நேர்வழிக்குத் திரும்பிவருவ தருமை.

சில காலங்களில் ஒரு ஜாதியார் முழுதும் நேர் வழிதப்பிச செல்கின்றார்கள். அவர் போம் குறுக்குவழியிற் கடவுள் நின்றுகொண்டு ஒரு பெரிய யுத்தத்தை

யாவது, பஞ்சத்தையாவது, அல்லது ஒரு கொள்ளைநோயையாவது வருவித்து இவர்களை மருட்டி நன்னெறிக்குத் திரும்புமாறு செய்கிறார். ஒரு பெரிய ஜாதியார் துன்மார்க்கத்திற் போவதற்குப் பிரயத்தனம் பண்ணினால் போகவிடாது தடுத்தல் வேண்டும். போய்விட்டார்களாகில மறுபடியும் இதற்கு வரமாட்டோம் என்று சொல்லும் புத்திவரும் வரையில் துன்பப்பட்டுத் தீரவேவேண்டும். இனி மேலத்தியாயத்தின்கட் கூறப்படும் பாரத யுத்தமானது தேவர்களால உண்டாக்கப்பட்டது. இந்தியர் துன்மார்க்கத்தினின்றுந் திரும்பி மேலே கூறப்பட்ட நேர்மையான வழியடைந்து கதிபெறுவதற்கு இந்த யுத்தம் இன்றியமையாததாக இருந்தது.

யாதேனு மொரு யுத்தத்திற் குத்துண்டிறந்த குதிரையின் தொகையையும் போர்வீரர்களின் தொகையையும் கவனிக்கும்போது மிகப் பயங்கரமாயிருக்கின்றது. மரண தத்துவத்தைப்பற்றி யோசிக்கும் பொழுது அப்படிப் பயப்படுவதற்கு நியாயமில்லை. மனிதர்களும் மற்றுமுள்ள ஜெந்துக்களும் தாமிருக்கும் தேகம் தமக்கு இனி யிருக்கத்தகாத நிலைமையை அடைகிறபோது அவ்வுடலைவிட்டு நீங்குகிறார்கள். இதைத்தான் மரணமென்றும், மனிதர்கள் சாகிறார்கள் விலங்குகள் சாகின்றன என்றும் நாம் சொல்லிக்கொள்கின்றோம்.

இவ்வுடலம் விழுந்தபிறகு அதிலிருந்த ஆத்மா தான்செய்த இருவினைக்கேற்ப முன்னிருந்த தேகத்திலும் சிறந்ததோர் தேகத்தையாவது இழிந்ததோரு

டலையாவது தனக் கிருப்பிடமாகக் கொள்கின்றது. நாம் தரிக்கும் அங்கி நாம் வளர வளர நமக்கு அளவு சரிப்படாது கிழிந்து போவதுபோல் நமதுடம்பும் வளரும் ஆத்மாவுக்குச் சரிப்படாது போம்போது அழிந்து போகின்றது. இக்கருத்தை யுட்கொண்டன்றே,

"பாலையாந் தன்மை செத்தும் பாலனாந் தன்மை செத்துங்
காளையாம் பருவஞ் செத்துங் காமுறு மிளமை செத்து
மீளவின் மொய்ம்பு செத்து மேல்வரு மூப்பு மாகி
நாளுநாஞ் சாகின் றாமா னமக்குநா மழாத தென்னோ"

என்று குண்டலகேசியினுங் கூறுவாராயினர். மரணத்துக்கு அதிபதியான கூற்றுவனைக் கொடியவனென்று எண்ணாது நமக்கு நன்மை நாடுபவனாகவே எண்ணல்வேண்டும். ஏனெனின் இருந்த உடம்பிலேயே அழுகச்செய்து ஆத்மாவை உபத்திரவஞ் செய்யாது தக்க காலத்தில் ஆத்மா விருத்தியாகும்படி விடை கொடுக்கின்றானாதலின். இப்பெரும் பாரதயுத்தத்தில மாண்டோர்பலர் சுவர்க்கத்தில் மாட்சிமை பெற்றார்.

ஈசுவரனுடைய இச்சை நிறைவேற்றுவதே மற்றெல்லாத் தெய்வங்களுடையவேலையும். அவ்வீசுவரனே பிரமன், விஷ்ணு, ருத்திரன் என்று சொல்லப்பட்ட திரிமூர்த்தி ஸ்வரூபமாயுள்ளவன். பிரபஞ்சமுழுவதும் தன் ஸ்வரூபத்தை யடையவேண்டு மென்பது ஈசுவரனுடைய இச்சை. அவ்விருப்பத்தை நிறைவேற்றுவதற்காகவே மற்றைத் தேவதைகள் பாடுபடு

வனவேயன்றித் தத்தம் சுயநன்மையைக் கருதியன்று. இத்தேவதைகளெல்லாம் தமக்கென ஒன்றின்றிப் பகவானுடைய விருப்பத்தைச் செய்து முடிக்க வேண்டியிருத்தலின் இவர்களுடைய கடமைக்கும் மனிதர்கள் தாம் நடக்கவேண்டிய முறைமைக்கும் வித்தியாசமுண்டு. தேவதைகள் மனிதர்களைப் பரீக்ஷிக்க வேண்டியிருக்கின்றது. ஆகையால் இவர்கள் போம்வழியிற் கஷ்டங்களையுந் துன்பங்களையும் உண்டாக்கி விடுகின்றார்கள். அவர்களப்படிச் செய்வது, இவர்களிதற்கெல்லாம் பயப்படாமல தைரியமுடையவர்களாய் அதிக பலமும் நல்லறிவும் வாய்த்து நேரியவழிக்கு வரவேண்டுமென்பதேயன்றி வேறோரெண்ணத்தினாலன்று. இவ்விஷயத்தில் தேவர்கள் செய்யத்தக்கன மனிதர்கள் செய்யத்தகாதனவாம். ஏனெனின் நியாயாதிபதி குற்றஞ்செய்த வொருவனைத் தண்டிக்கின்றான்; அவன் தண்டனை செய்யும்போது நாம் ஏன் செய்யலாகாதென அக்குற்றவாளியை நாம் தண்டித்தல் தகுமோ? தகாது. ஒருவன் ஒரு பொருளைத் திருடினால் அத்திருடனை அதற்காகக் காவற்சாலையி லடைக்கின்றார்கள். களவாடிய பொருள் உன்னுடையதாயிருந்தபோதிலும் நீயவனை அப்படித் தண்டித்தலாகுமா? நீ அப்படிச் செய்தால் அது பிழையெனக் கொள்ளப்படும். பிழையெனக் கொள்ளப்படுகிறவைகள் ஏன் அப்படி எண்ணப்படுகின்றன? சுயகாரியம் சுயேச்சை அல்லது அகங்கார மமகாரம் என்னுமிவற்றை நாடிச்செய்தலின். ஒருவன் ஆண்டவன் ஆக்ஞைப் பிரகாரம் செய்யாது தன்னைத்

திருப்தி செய்துகொள்ளும் பொருட்டுத் தன் மனம் போனவாறு நடப்பானாயின் அவன் செய்யுங் காரியமும் அநேகமாய்ப் பிழையாகவே முடிகின்றது.

எந்த ஜாதியாயினும் நன்மார்க்கத்தை விட்டுத் துன்மார்க்கத்திலேயே சென்று கொண்டிருந்தால் அஃது அவசியம் அதிகத் துன்பத்தை யடையுமென்னும் உண்மையானது பாரதப் படிப்பிலும நன்கறியக் கூடியது. இப்பலனை அடையும்படி செயது வருவனவும தேவதைகள் தாம். இந்தியர்களுக்கு முன்னமிருந்ததுபோலவே நற்குணமும், சுத்தமான இருதயமும், தெயவபக்தியுந் திரும்பிவந்தால் தான் இந்தியாவிற்கு முன்னொரு காலத்திருந்த சம்பத்தும், பலமும் சுயேச்சையும இப்பொழுது முண்டாகும். இதைத் தவிர வேறொருவழியுங் கிடையாது. எந்த ஜாதியாரும பெருமை சிரேஷ்டம் இவைகளை யடைவது அவர்களுடைய சற்கருமத்தின் பலனேயன்றி வேறில்லை. ஒரு ஜாதியார் தகாதன செய்துகொண்டு வருவார்களாகில் அவர்களுடைய பெருமையும் தாழ்ந்து கொண்டே வரும். எந்த ஜாதியார் தகுந்தனவற்றைச் செய்துகொண்டு வருகிறார்களோ அவர்கள் பெருமையிலும் வளர்ந்துகொண்டே வருகிறார்கள்.

ஒரு ஜாதியில் ஒரு பெரியமாறுதல் உண்டாகிறதற்குத் தக்க காலம் வரும்போது அந்த ஜாதியிற் பெரியவர்கள் தோன்றுகின்றார்கள். அத்தகைய காலம் இந்தியாவிற்கு ஏறக்குறைய ஐயாயிரவருஷத்திற்குமுன் வந்தது. இத்தருணத்தில் இதற்காகப் பிறந்பவர்களிற் சிலர் நற்குணத்திற் பெரியவரா யிருக்கி

ுார்கள் ; சிலர் தீக்குணத்திற் சிறந்தவராயிருக்கிறா கள். அந்தந்தச் சாதியார் கிருதார்த்த ராவதற்கு இத்தகையர்கள் பிறக்கவேண்டியிருக்கின்றது. இவர் கள் இத்தருணத்தில் இவ்வேலைக்கென்றே, முன்ஜன் மங்களிலேயே தங்களைச் சன்னத்தஞ்செய்து கொண் டிருக்கிறார்கள். நற்குணத்திற் பெரியவருக்கும் தீய குணத்திற் சிறப்புற்றோருக்கும் இதுதான் முதல ஜன் மமென்பது வேண்டுவதில்லை. நல்லவர்கள் தேவதை களுக்குத் தக்க தருணத்தில் இப்பூமியில் வந்து பிறந் து உதவி புரியவேண்டியதுபற்றி முன் ஜன்மத்தில் நலத்தையே நாடி அதிகமாய்த் தேடிச சம்பாதித்து வைத்துக்கொண்டிருக்கிறார்கள். துஷ்டர்களிற் சிறந் தோரும் முன் ஜன்மத்தில் வேண்டிய துர்க்கிருத்தி யஞ்செய்து அதற்குப் பலனாக இத்தருணத்திற் பிற ந்து, கடவுளரும் நற்குணமுடையாரும் செய்வனவற் றிற்கு விரோதமானவைகளையே செய்துகொண்டு வரு வதனாற் கஷ்டங்களை விளைத்துக்கொள்கிறார்கள். அப் போது அந்த ஜாதியார் தாம் போய்க்கொண்டிரு ந்த வழி தவறென்று தெரிந்து நன்மார்க்கத்தை நாட ஆவலுள்ளவர்களா யிருக்கின்றார்கள். நல்ல வர்களும் தீயவர்களும் தங்கள் வினையைத் தாங்களே யாக்கிக்கொண்டு அப்படியானவர்கள்.

" தீங்குவர் தடையுமாறு நன்மைதான் சேரு மாறுந்
தாங்கள்செய் வினையினாலே தத்தமக் காய வல்லா
லாங்கவை பிறரால் வாரா வமுதநஞ் சிரண்டி னுக்கு
மோங்கிய சுவையின்பேத முதவினார் சிலரு முண்டோ?"

என்றார் கந்தபுராண முடையாரும். நல்லவர் தேவ

தைகளுக்கு உதவியும் தீயவர் அவர்கள் செயலுக்கு விரோதமும் செய்துகொண்டு வருகிறார்கள். ஒருவரைத் தாழ்த்தியும் ஒருவரை யுயர்த்தியும் வைக்கவேண்டு மென்ற எண்ணமோ கடவுளுக்கில்லை. மனிதர்கள் தாம் தம் வினைப்பயனின்படி வரவேண்டிய இடத்திற்குத் தேவதைகள் அவர்களைச் செலுத்தவே அவர்கள் அதில் வந்து பிறக்கிறார்கள்.

முதற்பருவமாகிய ஆதிபருவத்தின்கட் பாரத யுத்தத்தின் பொருட்டுச் சுவர்க்கத்தில் நடந்த ஏற்பாடுக ளின்னவென்று எடுத்துரைக்கப்பட்டிருக்கின்றன. இதற்காகத் தேவர்களெல்லாம் ஒருங்குசேர்ந்து யோசனை செய்தார்கள். யுத்தத்தைநடத்தும்பொருட்டுச் சிலர் பூமியிற்போய்த் தலைவராகப் பிறக்கவேண்டியதற்கு நான்குபேரை நியமித்தார்கள். இந்நால்வரும் முன்னொருகாலத்து இந்திரரா யிருந்தவர்கள். தேவர்களுடைய அரசனுக்கு இந்திரனென்றும தேவேந்திர னென்றும் அநேகம் பெயர்கள் உண்டு. அப்போதிருந்த இந்திரன் சற்றே கர்வம் அடைந்திருக்கவே அஃது அடங்கு நிமித்தம் அவனுடைய பட்டம் சிலகாலம் வரையில் நீங்கும்படி சர்வேசுவரன் செய்து விட்டார். இந்திரனைப்பார்த்துக் கோபித்து'உன்னைப் போன்றுமமதை உடையவர்கள் என்னுடைய கிருபைக்குப் பாத்திரராகார்கள்' என்று சொல்லி, 'நீயும் இன்னும் உனக்கு முன்னிருந்த நான்கு இந்திரர்களும் பூமியிற் போய் மனிதராய்ப்பிறந்து நான் சொல்லுங் காரியத்தைமுடித்து மறுபடியும் சுவர்க்கம்வந்து சேரலாம்' என்றார். இவர்களில் நால்வர்

ஈசுவரனைப் பார்த்து, " நாங்கள் மானுட கர்ப்பத்திற பிறந்தபோதிலும் தேவதைகள் எங்களுக்குத் தந்தையரா யிருத்தல்வேண்டும்" என வேண்டிக்கொண்டார்கள். ஐந்தாவ திந்திரன் தனக்குப் பதிலாகத் தன்னிடமிருந்து ஒருவனை உற்பத்திசெய்து இதன் பொருட்டு விடுவதாகச் சொல்லவே அதையும் அங்கீகரித்தார். தக்க தருணம் வந்தபோது நான்கிந்திரர்களும தர்மர், பீமன், நகுலன், சகாதேவன் என்பவர்களாகப் பிறந்தார்கள். யமதர்மராஜாவுக்குப் பிறந்தவர் தருமர்; வாயுவினுடைய புத்திரன் பீமன்; அசுவினி தேவதைகளுக்குப் பிறந்தவர்கள் நகுல சகாதேவர்கள். அருச்சுனனோ முன் ஜன்மத்தில் நரன் என்னும் ஒரு பெரிய இருஷியாயிருந்து அப்போதிருந்த தேவேந்திரனுக்குப் பிள்ளையாய்ப பிறந்தவன். இவ் வைவருடைய சரித்திரந்தான் மேலத்தியாயங்களிற் கூறப படும். இவர்கள் தாம் பாரதயுக்தத்தில் ஜயம்பெற்றுப் பயனடைந்தவர்கள்.

இந்த யுதததத்திற்குப் பிறகு வேறுயுகம் பிறகக வேண்டியிருத்தலின், ஸ்ரீ மகா விஷ்ணுவும் கிருஷ்ணனென்னும் நாமதேயத்தோடு அவதாரஞ்செய்தார். தம்முடைய ஆதிசேஷனையும் உடன் கொண்டுவந்தார். இவருடைய தமையனார் பலராமர் தாம் ஆதிசேஷாம்சம். உலகம் தான் போகவேண்டிய நன் மார்கத்தினின்றுந் தவறித் துன்மார்க்கத்திலேயே அதிகமாய்ப் பிரவேசித்துப் பாபங்களுந் தீமைகளும் அதிகரித்துப் பூமிதாங்காத நிலைமைக்கு வந்துவிடுந் தருணத்தில் தீமையை ஒழித்து நன்மையை நிலைநாட்டும்

வண்ணம் சர்வேசுவரனே பூதவுருவங்கொண்டு இங்குப் பிறப்பதுண்டு. இப்பிறப்பிற்குத்தான் அவதாரம் என்று பெயர்.

பரதனுடைய வமிசத்தாரைக் குறித்துச்சொல்லுஞ் சரித்திரமாகையால் இதற்குப் பாரதமெனப் பெயர். பரதன் துஷ்யந்த மகாராஜாவுக்குச் சகுந்தலையினிடமாகப்பிறந்தவன். "மஹா" என்பது "பெருமைபொருந்திய" என்றும், "பாரதர்" என்பது "பரத வமிசத்தார்" என்றும பொருள்படும். ஆகவே "மஹா பாரதம்" என்பதற்குப் பரதவம்சத்தாரைக் குறித்துச்சொல்லும் சரித்திரமென்பது பொருள். இவ்வமிசத்திற் * குரு வென்னும் ஓர் அரசனிருந்தான். அவன் தான் சந்நியாச ஆசிரமத்தை அதிகமாய் வகித்தவன். அவன் தானிருந்து ஜப தப யாகமுதலியவற்றை நிறைவேற்றிய இடத்திற்குக் குருக்ஷேத்திரமென்று பெயர். இவ்விடத்திற்றான் பதினெட்டுநாள் யுத்தமும் நடந்தது. குரு சந்ததியாரில் மூன்று சகோதரர்களிருந்தார்கள். அவர்களில் மூத்தவனுக்குத் திருதராஷ்டிரனென்று பெயர். அவன் பிறவிக்குருடன். அவனுடைய பிள்ளைகள்தாம் பாரதயுத்தத்தில் தர்மமில்லாப் பக்கத்தி

* சந்திரகுல திலகனாகிய சவ்வருணன் ஒருநாட் சூரியன் மகளாகிய தபதியை நினைந்து வருந்தியிருத்தல் கண்ட வியாழபகவான சூரியனிடஞ்சென்று பேசித் தபதியைச் சவ்வருணனுக்கு மணஞ்செய்வித்தார். இவ்வாறு குருவருளாற் கூடிய மணத்திற் பிறந்த மகனுக்குச் சவ்வருணன் 'குரு' என்றே பெயரிட்டான்; அவனுண்ட நாடு குருநாடு.

ருந்து யுத்தஞ்செய்தவர்கள். இரண்டாவது பிள்ளைகருப் பாண்டுவெனப் பெயர். பாண்டுவின் புத்திரர் தாம் திருதராஷ்டிர னுடைய பிள்ளைக்கு விரோதமாய்ச் சண்டை செய்தவர்கள். மூன்றுவது பிள்ளைக்கு விதுர னென்று பெயர். இவன் மிகவும் சன்மார்க்க நெறியிலிருந்தவன்; இராஜ்ஜியத்தி லுயர்ந்த வேலையிலிருந்து கொண்டிருந்தான். இவர்களுடைய சரித்திரத்தைக்குறித்துத் தான் பதினெண் பருவங்க ளெழுதப்பட்டுள்ளன. ஒவ்வொரு பருவத்து முரைக்கப்படும் முக்கிய விஷயத்தைநோக்கி அவ்வப் பருவத்திற் குப் பெயரிடப்பட்டுள்ளன.

இச்சரித்திரம் நைமிசாரண்ணியத்திற் சௌனகாதி முனிவர்களுக்கு உரோமஹர்ஷணர் என்பவருடைய புதல்வராகிய அக்கிரஸ்ரவர் அல்லது ஸூத புராணிகர் என்னும் பெயர் பூண்டவராற் சொல்லப்பட்டது. ஸூதபுராணிகர் வியாசருடைய மாணுக்கர். இவர் இந்த இருஷிகளிடம் வந்தவுடன் அவர்களிலொருவர் இவரைநோக்கி எங்கிருந்து எழுந்தருளுகிறீர்களென் றுபசரிக்கவே, ஜனமேஜய மகாராஜா செய்த சர்ப்ப யாகத்திற்குப்போய் வருகிறேனென்று சொன்னார். அவ்விடத்திற் சொன்ன மகா பாரதக்கதையைத் தாமுங்கேட்டு அறிந்தோமென்றார். கிருஷ்ண த்வைபாயன வேதவியாசர் என்னும் ருஷியால் இவ்விதிகாசம் செய்யப்பட்டது. கருநிற முள்ளவராகையாற் கிருஷ்ணரென்றும், தீபத்திற் பிறந்தபடியால் துவைபாயன ரென்றும், வேதங்களைக் காண்டமுதலியனவாகப் பிரித்தபடியால் வேதவியாச ரென்றும்,

இந்நூலாசிரியருக்குப் பெயர். நைமிசாரண்யத்து ருஷிகளும் விருப்பத்துடன் கேட்கவே இவரும் பாரகர்களுடைய சரித்திரத்தைசொல்லத்தொடங்கினர்.

முகவுரை முற்றிற்று.



## அத்தியாயம்-II.

### பாரதவீரர்களின் இளமைப்பருவம். *

மகாபாரதத்து ஆதிபருவத்தில் எடுத்தெழுதி யிருப்பனவற்றுள் முக்கியமானவைகளிற் சிலவற்றை உற்றுநோக்குவாம். அதிற் பாரதவீரர்களின் வாசி பத்தைப் பற்றியும் அவர்களுடைய மூதாதைகளைப் பற்றியும் உற்றார் பெற்றாரைப் பற்றியும் அவர்களு டைய நிலைமை, அவர்களுடைய கல்வி இன்னுமிவை போல்வன பிறவற்றைப் பற்றியும் நாமறியலாம். இதை நாம்வாசிக்கும் போதே மேல் முகவுரையிற் சொன்ன தர்மங்கள் அல்லது விதிகளெல்லாம் எவ் வாறு அநுபவத்திற்குக் கொண்டுவரப் பட்டிருக் கின்றன வென்பதையுங் கவனித்துப் பார்க்கவேண் டும்.

இப்பாரதவீரர்களில் அதிக சிரேஷ்டமானவர் பீஷ்மாசாரியர். ஆரியவமிசத்திற் பெருந்தன்மை பூண்டு ஒழுகியவர்களில் இவர் ஒருவர். இவ்வுலகி லுள்ள ரனைவர்க்கும் இவர் ஒழுக்கம் மேலவரிச்சட் டம் போன்றது. அநேகர் தெரிந்தும் தெரியாதும் விழுகிற பாவங்களில் ஒன்றிலேனும் இவர் விழுந்த தில்லை. இவர் வாழ்நாள் முழுதினும் எந்தக்காரி யத்தை எந்தக்காலத்திற்செய்தல் வேண்டுமோ அந் தக்காரியத்தை அந்தக்காலத்திலேயே செய்து மு டித்தவர்; நடுவு நிலைமைதவறினதேயில்லை. இவரே ஒரு பெரிய உபாத்தியாயர்; ஒரு பெரிய மந்திரி.

* ஆதிபருவத்தின் முற்பகுதி.

புத்திர லக்ஷணம், காவன்முறை, இராஜாங்க தந்திரம் இவற்றில் இவர்க்கு இணையானவர் ஒருவருமிலர். இவர் வாழ்நாளின் ஒவ்வொரு பாகத்திலும் தமக்குரிய கடமையைப் பழுதறச் செய்துகொண்டுவந்தார்.

பீஷ்மர் பிறக்க வெகு காலத்திற்கு முன் தேவலோகத்தில் ஒருதிருவிழா நடந்தது. அதற்கு அநேகதேவர்களும் ருஷிகளும் வந்திருந்தார்கள். அநேக அசுவமேதயாகஞ்செய்து அப்பலத்தினால் அமராவதியை அடைந்த மஹாபீஷ்மனென்னும் அரசனும் அவ்விடம் வந்திருந்தான். நதிபதியாகிய கங்கையும் வந்திருந்தனள். அவர்களெல்லாம் ஒன்றாய்க் கூடியிருக்கும்போது காற்றினால் கங்கையின் மார்பிலுள்ள வஸ்திரம் சற்றுவிலகவே தேவர்கள் இதைக் கவனியாது தலை குனிந்து கொண்டார்கள். மஹாபீஷ்மனென்னுமரசனோ அவ்வாறு தலைகுனியாது வணங்காமுடியனாயிருந்தான். அவனெண்ணத்தையுஞ்செயலையுங் கண்ட பிரமாவானவர் அவனைச் சபித்துவிட்டார். அஃதாவது அதர்மமான சிந்தையினாலும் ஒழுக்கத்தினாலும் அவனுக்கு இனிவரப்போகிற துன்பங்களையும் கஷ்டங்களையும் அவர் முன்னதாகச் சொன்னார். [நம்முடைய எண்ணம், செய்கை இவற்றின் பலன்தான் கர்மமெனப்படுகிறது. தேவர்கள் அல்லது ருஷிகளிடும் சாபந்தான் அப்படி அனுபவிக்கவேண்டிய கர்மத்தை முன்னதாகச்சொல்வது.] இவ்வரசன் கங்கையின் கற்பைப் பங்கப் படுத்துவதற்கு எண்ணங்கொண்டானதலின், சுவர்க்கத்தைத் துறந்து பூமியிற் போய்ப் பிறக்கும்படி ஆக்ஞாபித்

தார்; "கங்கையும் பூலோகத்திற் போயிருந்து உனக்கு அதிக துன்பத்தை உண்டாக்குவாள். உனக்கு எப்போது கோபம்வரும்படி செய்கிறளோ அப்போது உனக்கு நானிட்ட சாபந்தீருஞ்சமயம் வரும்" என்று பிரம்மா அவ்வரசனுக்குரைத்தார்.

மகா பீஷ்மன் இவ்வுலகில் திரும்பவும் போய்ப் பிறக்கவேண்டிய நாளும் வந்தது. சந்திரவமிசத்திற் கடவுட் பக்தியிற் சிறந்த பிரதீபனென்னும் அரசனுக்கு இவன் மகனாய் வந்துதித்தான். ஒருநாட் பிரதீபன் தவஞ்செய்து கொண்டிருக்கும்போது கங்கையானவள் திவ்யரூபமுடைய ஒரு கன்னிகை யுருவங்கொண்டு அவனுடைய வலத்தொடையில் வந்து உட்கார்ந்தாள். அவன் கண்விழித்துப்பார்த்ததும் அவள் தன்னை விவாகம் செய்து கொள்ளும்படி வேண்டினாள். அவன் அவளைநோக்கி "மருமகளும் மகளும் இருக்க வேண்டியது இத்தொடை; மனைவி யிருக்கவேண்டியது மற்றைத் தொடை; நீயிருப்பது வலத் தொடையாகையால் உன்னை மருமகளாகப் பாவித்தல் வேண்டுமே யன்றி மனைவியாக ஏற்றுக்கொள்ளவியலாது. வேண்டுமானால் என் மகனுக்கு உன்னை விவாகம் செய்விக்கின்றேன்" என்றான். அதற்கவள் "உன் பிள்ளையையே விவாகம் செய்து கொள்ளுகின்றேன். ஆனால் உன் புத்திரன் நான் செய்வன நல்லன வென்றும் நல்லன வல்ல வென்றும் அறிந்து நடப்பது அருமையாயிற்றே. அதுதான் என் மனதுக் கொருகவலையா யிருக்கின்றது. தகுதியான ஏற்பாடு செய்தால் நலம்" என்று

சொல்லிப்போய் விட்டாள். அரசனும் அவன்றன் மனைவியும் செய்த தவவிசேடத்தால் மஹாபிஷம னென்னும் அரசன் இவர்க்கொரு சற்புத்திரனாக வந் தவதரித்தான். அப்புத்திரனுக்குச் சந்தனு வென்னும் பெயரிடப்பட்டது. சாந்தகுண முள்ளவனுடைய பிள்ளையாதல் பற்றி இவனுக்கு இப்பெயர்வாய்த்தது. சந்தனுவுக்குத்தக்க பருவம் வந்தவுடன் அவனை வர வழைத்து "ஓ சற்புத்திரனே! தெய்வலோகத்திலிருந் தொரு கன்னிகை முன்னொருகால் என்னிடம் வந்து போனாள். அவள் இப்போது வந்து தன்னை விவாகஞ் செய்துகொள்ளும்படி உன்னைக்கேட்பாள். அதற்கு நீ யொன்றும் மறுத்துச் சொல்லாமற் சம்மதித்தல் வேண்டும்; அவளுனக்குப் பாரியையானதும் அவள் செய்யுங் காரியம் உனக்கு எப்படித்தோன்றினாலும் அவற்றைக் குறித்து யாதொன்றுங் கேளாதே. அவளை யாரென்றும், எவ்விடமிருப்பவ ளென்றும், எவ்விடத் திருந்து வந்தவளென்றும் நீ கேட்கலாகாது. தகப்ப னுடைய ஆக்ஞைப்படி அவளை நீ உன் மனைவியாகப் பெறுவாயாக" என்றான். பிரதீபன் தக்ககாலத்திற் பிள்ளைக்குப் பட்டாபிஷேகம் செய்வித்துத் தான் மான்தோல் மரவுரி சடைமுடி தரித்துத்தவஞ் செய் வான் புறப்பட்டு விட்டான். அதுமுதற் சந்தனுவும் தன்னாட்டை நன்றாக ஆண்டுகொண்டுவந்தான். ஒரு நாட் கங்கையாற்றின் கரையில் தான் உலாவிக்கொண் டிருக்கையில் தேவகன்னிகை ஒருத்தியைக் கண்டு காமுற்று அவளைத் தனக்கு நாயகியாக வேண்டு மென்று வேண்டினான். அவள்தான் கங்கை. அவள்

அவனை விவாகம் செய்துகொள்ளச் சம்மதித்தாள். ஆயினும் அவனை நோக்கி, "என்னுடைய காரியத்தில் தாங்கள் பிரவேசித்தல் கூடாது. இன்சொல்லேயன்றிக் கடுஞ்சொல் கிட்டவே வருதல் கூடாது. என்னைச் சுகமாய் வைத்திருக்கிற வரையில் உம்மோடு கூடியிருப்பேன். ஆனால், நான் செய்யுங் காரியங்களிற் பிரவேசித்தாலுஞ்சரி, கடுஞ்சொல் என் காதிற் பட்டாலுஞ்சரி, உம்மை விட்டு உடனே பிரிந்தேகுவேன். இது நிச்சயம்" என்று சொன்னாள். அப்படியே யாகட்டும் என்றுடன்பட்டான் சந்தனுமகராஜனும். அவர்களிருவருக்கும் மணம் முடிந்தபின் மணமுருது பல நாள் மிகுந்த சுகத்துடன் காதலரிருவரும் கருத்தொருமித்து வாழ்ந்துகொண்டு வந்தார்கள். முதற்குழந்தை பிறந்தவுடன் கங்கை அதை யெடுத்துக் கங்கையாற்றி லெறிந்துவிட்டாள். குழந்தையைப் பார்த்து அவள் "இப்படி யான் செய்வது உன் நன்மையை நாடியே" யென்முள். இரண்டாவது குழந்தைக்கும் அதே கதிதான். மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழாவது குழந்தைகளு மிப்படியே மடிந்தன. ஐயோ பாவம்! என் செய்வான் அரசன்? அவன் மனமோ பதைக்கிறது. உடலோ துடிக்கிறது. இவள் நடத்தையோ இது விஷயத்தில் இவனுக்குச் சிறிதேனுஞ் சரிப்படவில்லை. ஆசையென்னு மந்தகாரம் இவன் கண்ணைமூடி யிருந்ததனுல் வாய் திறந்து ஒன்றுஞ் சொல்வதற்கில்லை. ஆனுல் இவள் காரியமோ பொறுத்து முடியவில்லை. எட்டாவது பிள்ளை பிறந்தவுடன், கங்கையானவள் அதனையும் கங்கையிலெறிய

வெண்ணினுள். ஏதாவது சொன்னால் மனைவி பிரிந்து போய் விடுவாளோ என்னும் பயமிருந்தபோதிலும் குழந்தைகளின் கதியை நினைத்து இப்பயத்தைத் துறந்து •அவளை நோக்கி " நீ இதைக் கொல்லாதே? நீயார்? குழந்தை யாருடையது? உன்னுடைய குழந்தைகளை ஏன் இப்படிக் கொன்று கொண்டு வருகிறாய்? கொலைப்பாதகி! இப்பாவங்களுக் கென் செய்வாய்?" என்றான்.

சந்தனு மகாராஜன் என் செய்வான்! ஐயோ பாவம்! இருதலைக் கொள்ளியின் எறும்புபோல் இருந்தலைந்தான். கடைசியிற் பிதாவின் கட்டளையையும் மறந்தான். அவன் அவ்வாறு சொன்னபோது கங்கை அவனை நோக்கி " இனி உம்முடைய இந்தப் பிள்ளையைக் கொல்லவில்லை. நம்முடைய உடன்படிக்கைப் பிரகாரம் நான் உம்முடனிருக்கவேண்டிய காலம் முடிந்துவிட்டது. நான்தான் கங்கை, ஜந்நு முனிவர் புத்திரியாகையால் எனக்கு ஜாஙநவி யென்று வேறொரு பெயருமுண்டு. எனக்குப் பிறந்த எட்டுக் குழந்தைகளும அஷ்டவசுக்களே யன்றி வேறல்லர். இவர்கள் ஒருபெரிய இருஷியினிடமிருந்து நந்தினி யென்னும் காமதேனுவைக்களவாடிப்போய்விட்டார்கள். அவர்களில் தயா என்பவன்தான் இக்காரியஞ் செய்தவன். மற்றவர்கள் இதற்கு உதவிபுரிந்தவர்கள். இருஷி மிகவும் கோபங்கொண்டு எல்லாரையும் 'நீங்கள்செய்த பாவத்தின் பலனை அனுபவிக்கும் பொருட்டுப் பூமியிற் போய்ப் பிறக்கக்கடவீர்கள்' எனச்சபித்துவிட்டார். பிறகு அவர்கள் அவரைக்கெஞ்சிக் கூத்

தாடிக்கேட்கவே மனமிரங்கித் தயா என்பவன் தவிர மற்றவர்கள் உலகினிற் பிறந்த ஒருவருஷத்திற்குள் மானுட உடலம் விட்டு இவ்விடம் வந்துவிடலாமென் றும், தயா மாத்திரம் பூமியிலநேகநாளிருந்து உழன்ற பின்புதான் இவ்விடம் வரலாமென்றுஞ் சொன் ஞர். பிறகு அஷ்ட வசுக்களும் என்னிடம் வந்து எனக்குக் குழந்தைகளாய்ப் பிறக்கவேண்டுமென்றும், பிறந்தவுடனே தங்களைக் கங்கையி லெறிந்துவிட வேண்டுமென்றும் என்னை வேண்டிக்கொண்டார்கள். மானுடயாக்கையிலிருப்பது அவர்கட்குச்சிறையிலிரு ப்பதுபோலிருந்தது. இவ்வுலக வாழ்க்கையினின்றும் உய்விக்கும் வண்ணம் அவர்கள் விருப்பத்தின்படி செய்தேன். சாந்தமும் அருளும் வாய்ந்து அரசசிகா மணியாய் விளங்கும் ஓ சந்தனுமஹாராஜனே! இருஷியின் சாபத்தினுல் இவனொருவன்தான் இப்பூமியி லின்னுங்கொஞ்சக்கால மிருந்து மறுபடியும் சுவர்க்க மடையவேண்டியவன்" என்று சொல்லி அக்குழந் தையையும் தற்காலம் தன்னுடன் கொண்டு கங்கையா னவள் அரசன் கட்புலனுக் ககப்படாது போய் விட்ட னள்.*

சாதற்குச் சனங்கள் சாதாரணமாய்த் திகிலடை கிருர்கள். தேவதைகள் இவ்விடம் வந்து பிறந்திருக் கிறபோது தாங்கள் ஒரு சிறைச்சாலையி லகப்பட்டுக் கொண்டதுபோ லெண்ணுகிருர்கள்; மரணத்தை அச் சிறையினின்று தம்மை மீட்கிற ஒரு நண்பனைப்

* வியாசபாரதம், ஆதிபருவம் § 96-99.

போற் பாவிக்கிறாகள். இவ்வுலகிலுள்ள நாம் ஒரு குழந்தை பிறக்கும்போது அதிக ஆனந்தக்களிப்பிலாழ்ந்து ஒருவன் இறக்கும்போது சற்றேனும் யோசியாது அறிவீனத்தினால் அழுவதையே நம் தொழிலாகக் கொள்கிறோம். இஃது, நமது சிநேகிதனைச சிறையிலடைக்கும்போது ஆடல பாடல் சங்கீத முதலியவை கூடிய விழாவுடன் விருந்துண்டு, அவனைச் சிறையினின்று விடுக்கும்போது வருத்தத்துடன் அழுவதையொக்கும. எப்படி அஷ்ட வசுக்களையும் கங்கையானவள மானுடதேகமாகிய கூண்டினின்றும விடுதலை செய்தனளோ அதைப்போலவே ஒவ்வொரு மரணமும சமபவிக்குமபோது கடவுளொருவர், அடைபட்டிருக்கும ஆத்மாவை விடுதலை செய்கிறா. நமககு வருத்தத்தையுண்டாக்கித் தீங்கு விளைபபது போல் நமக்குப் புலபபடும் விஷயங்களெல்லாவற்றிலும் கருணையங் கடவுளுடைய கைவண்ணத்தைக் காணுமாறு இக்கதை நமக்கு நன்கு தெரிவிக்கின்றது. இவர்கள் நமக்குதீஙகு செய்வார்களென் றெண்ணுவது நமது அறியாமையேயாம்.

கங்கையானவள் தன்னெட்டாவது புத்திரனைத தன்னுடன் கொண்டுபோனதாக மேலே சொல்லப்பட்டிருக்கிறதன்றோ? அவன் யெளவனபருவமுற்றதும் அவனைச சந்தனுவினிடம் கொண்டுவந்து விட்டுப்போயினள. சந்தனு மகாராஜாவினிடம வந்தபோது அந்தப்பிள்ளை நான்குவேதம், ஆறுசாஸ்திரம், அறுபத்து நான்கு கலைகளிலும மிகக பாண்டித்திய முடையவனுய்க் காணப்பட்டான். அஃதாவது

க்ஷத்திரியருக்குரிய ஆயுதப்பயிற்சி, யானையேற்றம், குதிரையேற்றம் முதலியனவற்றிலும் சிறந்த வீரனுயினனென்க. அவனுடைய பலமும் பராக்கிரமமும அதிகம். சாஸ்திரஞானம் எவ்வளவு அதிகமாயிருந்ததோ அவ்வளவு சிறப்புற்றிருந்தன அவனுடைய தகப்பனுரிடமிருக்கவேண்டிய பக்ஷமும் பக்தியும். சமயம் வாய்த்தபோது மற்றவர்கள இவற்றை அறிந்து ஆச்சரியப்படவும் ஆயிறறு.

ஒருநாட் சந்தனு மகாராஜா வேடிக்கையாய் யமுனை யாற்றஙகரையில் உலாவிக்கொண்டிருந்தபோது பெண்களுக்குரிய எல்லா லக்ஷணமும் அதிக அழகும் வாய்ந்த ஒரு கன்னிகையை அவ்விடஙகண்டு அவளைத் தன் நாயகியாக்கிக்கொள்ள விருப்பஙகொண்டான். அவளோ அழகுவாய்ந்தவளா யிருந்த போதிலும் இழிகுலததவனுகிய மீன் வலைஞனுடைய பெண். அவள் பெயரோ மச்சகந்தி. பரிமளகந்தி யென்பது அவளுககுப பராசரராற் கொடுக்கப்பட்ட மறுபெயர். இவள் கன்னியா யிருக்கும்போதே இவருககு இவளிடமாகப் பிறந்தவா வேதவியாசர். அவருடைய தகபபன் அரசனை நோக்கி "நீ என் குமாரத்தியினிடம் உற்பவிக்கும புதல்வனுக்கு உனககுப் பிறகு பட்டங்கட்டி வைக்கிறேனென வாக்குததத்தஞ் செய்தாலொழிய, என் புதல்வியுனக்குப் பததினியாகாள்" என்றனன். முன்னமே இரத்தினம் போன்ற பிள்ளை யொருவனிருத்தலின், தான் அனுபவிக்க விரும்பிய சிற்றின்பத்தின் பொருட்டு அவனை நீக்க எண்ணமில்லாதவனுய் அதிக வருத்தத்தோடும

வீட்டுக்குத் திரும்பினான். தன் தகப்பனார் அதிக வருத்தமுற்றிருப்பதை அவர் முகக்குறிப்பாற்கண்டு, அதிக அன்புடன் அதற்குக் காரணம் யாதெனக் கேட்க அவர் தமதெண்ணத்தைத் தன்னிடம் ஒன்றும் சொல்வதற் கில்லாமையால், அவன் அரசனுக்கு அந்தரங்கமான மந்திரியினிடம சென்று அரசனுடைய மனக்கிலேசத்தை எப்படி நீக்கலாமென்றாலோசித்தான். அம்மந்திரியார் மீன் வலைஞனுடைய குமாரத்தியின் விருத்தாந்தத்தைச் சவிஸ்தாரமாய்ச் சொல்லவே தேவவிரதனெனும் பெயர் பூண்ட இப்பிள்ளையும் தன்னுடன் சில க்ஷத்திரிய வீரர்களை அழைத்துக் கொண்டு மச்சகந்தியின் தகப்பனிடம் சென்று, "உன் குமாரத்தியாகிய * மச்சகந்தியை அரசன் தன் பத்தினியாக்கிக்கொள்ள விரும்புகின்றான். தடையில்லாது கொடுத்தல் வேண்டும்" என்று சொல்லலும், சத்தியவதியின் தகப்பன் தேவவிரதனைநோக்கி "அரசனுக்கு இதற்கு முன்னமே ஒரு புத்திரனிருக்கின்றான். அவனுக்கு இராஜ்ஜியம் கிடைக்குமே யொழிய சத்தியவதிக்குப் பிறக்கும் புத்திரனுக்கு அஃதில்லாமற் போய்விடுமே. ஆகையினாற்றான் கொடுக்க எண்ணமில்லை" யென்றான். அதற்குத் தேவவிரதன் தன்னுடன் கொண்டு வந்தவர்களையும் வைத்துக்கொண்டு மீன்வலைஞர் தலைவனைநோக்கி "என் சபதத்தைக்கேள். நீவிரும்பியவாறெல்லாம் செய்கின்றேன். நான் தான் சந்தனு மகாராஜாவின் பிள்ளை. என்பெயர் தேவ விரதன்.

* இவளைப் பரிமளகந்தி, சத்தியவதி என்னலுமுண்டு.

இனி என் தந்தைக்கு உன் புத்திரியினிடமாகப் பிறக்கும் பிள்ளையே எங்களுக்கெல்லாம் அரசனாயிருக்கட்டும்" என்று தன் தகப்பனுடைய விருப்பத்தை நிறைவேற்றும் பொருட்டுத் தனக்குரிய இராஜ்ஜியத்தையும் எறிந்து விட்டான். இப்படிச் செய்தும் சத்தியவதியின் தகப்பன் திருப்தியடையாது தேவவிரதனைப் பார்த்து "நீ உன் வாய்மையை நிலை நிறுத்துவாய் என்பதில் எனக்குச் சிறிதேனும் சந்தேகமேயில்லை. ஒருவேளை உனக்குப் பிறக்கும் பிள்ளைகளும் அப்படியே யிருப்பார்களா வென்பது தான் சற்றே சந்தேகத்திற்கிட மாயிருக்கிறது" என்றான். அதற்கவன் வலைஞர் தலைவனை நோக்கி "நான் முதலில இராஜ்ஜியத்தைத் துறந்தேன். புத்திரர்களுடைய விஷயத்தைக் குறித்தும இப்போதே ஒரு முடிவு செய்து விடுகின்றேன். அந்தாவது இன்று முதலென்றும் பிரமசாரியாய் இருந்து விடுகிறேன். புத்திரனில்லாமல் யான் இறந்தபோதிலும் நான் புத் என்னும் நரகம் புகாது சுவர்க்கத்தையே யடைவேன். தகப்பனுடைய விருப்பத்தை எப்படியாயினும் நிறைவேற்றினால் போதும்" என்று சொன்னதும் எல்லோரும் மிகவும் ஆச்சரியமடைய, தேவர்கள் புஷ்பமாரி பெய்து இவன் தான் பீஷ்மன் இவன் தான் பீஷ்மனென்று ஆரவாரித்தார்கள். ஆம், இவன்தான் பீஷ்மன், இவனை யிப்படிச சொலவதற்கோரையமுமுண்டோ? மற்றவர்களெலலாம் எதைத் தம்முயிருக்குச் சமானமாகப் பாவிக்கிறார்களோ அதைத்துறந்து தான் வாய்மையையே ஆதிமுதற்

கடைப்பிடித்து அதனை நிறைவேற்றியவனல்லனோ இவன்? எல்லாம் முடிந்த பிறகு சத்தியவதியைப் பார்த்து "அம்மா! இந்த இரதத்தில் எழுந்தருளுக, நமது வீட்டுக்குப் போகலாம்" என்றான். ஏறினதும் தன் தந்தையின் முன்பாகச் சத்தியவதியைக் கொண்டுவந்துவிடவே தகப்பன் ஆச்சரியமும் ஆனந்தமும் அடைந்து பிள்ளையைப்பார்த்து,

*"தந்தையர்க் குதவு முதவியி னெனக்குச்
சதமடங் குதவினை யுனக்கு
மைந்தருக் குதவு முதவியிற் சிறிது
மாதவஞ் செய்திலே னுதவச்
சிந்தையிற் றுறக்கம் வேண்டுமென் றெண்ணிச்
செல்லுமன் றல்லதுன் னுயிர்மேன்
முந்துறக் காலன் வரப்பெறு னென்றே
முடிவிலா வொருவர மொழிந்தான்."

"ஓ! குழந்தாய்! நீ விரும்பினாலொழிய மரணம் உன்னை அணுகாதொழிக. பாவசிந்தை யென்பது சிறிதேனும் இல்லாத சற்புத்திரனே! உன்னுடைய உத்தரவின்பேரில்தான் யமன் உன்னை யணுகுவான்" என்று ஆசீர்வதித்தான்.

அங்ஙனம் தன்னருமைப் புதல்வனை ஆசீர்வதித்து நின்றதும்,

*"அம்புவி யரசன் மாமனு மரச
னடிபணிந் தவயவத் தழகா
லும்பரும் வியக்குங் கிளியைமுன் னிறுத்தி
யொடுங்கினன் வாய்புதைத் துரைத்தா
னெம்பெரு மானீ கேட்டரு ளுனக்கே
யிசைந்தமெய்த் தவம்புரி யிவளை

* வில்லிபுத்தூரார் பாரதம்.

வம்பவிழ்.மலர்மா றென்பதே யன்றி
வலைஞர்மா மகளெனக் கருதேல்.''

என்று சொல்லி மேலும் வலைஞர்தந் தலைவன் தன் மகளுடைய வரலாற்றை முற்றுஞ்சொல்லி முடித்தான். பிறகு சந்தனு மகாராஜா,

* " இன்று நற்றின மென்றிளந் தோகையை
மன்ற லெய்தினன் மாநிலம் வாழ்த்தவே.''

அவளுடன் சேர்ந்து அநேகநா ளின்புற்றிருந்து சித்திராங்கதன், விசித்திரவீரியன் என்னும் இரு புதல்வர்களைப் பெற்றான். இவன் இறுதிக்காலத்தில் இவ்விரு புத்திரர்களையும் பீஷ்மரிடம் ஒப்பித்து இவ்வுலகம்விட்டு விண்ணுலக மடைந்தான். இவரில் மூத்தவனாகிய சித்திராங்கதனுக்கு இவர் பட்டஞ் சூட்டுவித்து இருவரையும் எல்லாவிதங்களிலும் தாம் பாதுகாத்துவந்தார். கொஞ்சக்காலத்திற்குட் சித்திராங்கதன் ஒரு யுத்தகளத்தில் மடிந்தான். மடியவே அவன் சகோதரனாகிய விசித்திரவீரியனைத் தான் சிம்மாசனாதிபதியாக்கி அரசு புரியும்படி செய்துவந்தார். இவனுக்குத் தக்க பருவம் வந்து விட்டபடியால லக்ஷணமுள்ள ஒரு கன்னிகையைப் பார்த்து மணவினை முடிக்க வெண்ணினார் பீஷ்மர். அக்காலத்தில் மணமகள் ஸ்வயம்வரத்தில் வரனை அடைகிறது வழக்கமாயிருந்தது. அஃதாவது மணமகளே தன் கண்ணுக்கு ரம்மியமான புருஷனை அதற்காகக் கூடிய சபையினின்றுந் தேர்ந்தெடுத்து அவனுக்கு மாலை சூட்டுவது வழக்கம். இதற்குத்தான் ஸ்வயம்வர மென்னுபெயர். அத்தருணத்தில் அநேக ராஜராஜாக்க

* வில்லிபுத்தூரார் பாரதம்.

ருங்கூடித் தங்கள் தங்கள் புஜபல பராக்கிரமங்களை யெல்லாம் காட்டுவது வழக்கம். இவற்றிலெல்லாம் யார் சிறந்து விளங்குகின்றானோ அவன்தான் அப் பெண்ணை அடைதல்கூடும். அந்தக் காலத்திற் காசி ராஜாவின் புத்திரிகளாகிய அம்பை, அம்பிகை, அம்பா லிகை என்னு மூவருடைய கல்யாணத்திற்காக ஸ்வ யம்வரம் நாட்டப் பெற்றிருந்தது. விசித்திரவீரிய னோ அதிக இளம்பிராய முள்ளவன். ஸ்வயம்வரத் திற்கு வரும் எல்லா அரசர்களையும் வென்று கன்னி யரைக் கொண்டு வருவதற்கோ இவனுக்குப்போது மான சாமர்த்தியமில்லை. பீஷ்மர் இவனுக்குப் பதி லாகப்போய் மூன்று பெண்களையும் தம்மிரதத்தில் ஏற்றிவைத்துக்கொண்டு எல்லா அரசரையும் பார்த்து "ஓ அரசர்களே! ஸ்வயம்வரத்தில் எந்த அரசனும் மணமகளைத் தன் வலிமையினாற் கொண்டுபோகலாம். வேறு யாரேனும் அப்பெண்களை விரும்பும் பக்ஷத் தில் எவன் கொண்டுபோய் விட்டானோ அவனைப் புறங்கண்டு பெண்களை மீட்டுக்கொண்டு போகலாம். இதுவும் சாஸ்திரத்திரத்திற்கொத்த நடவடிக்கை தான். சாஸ்திரப்படி நான் இப்போது நடந்தேன். வேண்டுமானால் உங்களில யாவராயினும் என்னுடன் போர் புரிந்து இப்பெண்களைக் கொண்டுபோகலாம்" என்றார். உடனே அங்கிருந்த அரசர்களெல்லாம் அதிக கோபங்கொண்டு இவரை யெதிர்க்கவே தாம் தனியே நின்று எல்லாரையும் புறங்காட்டி ஓடும்படி செய்து காசிராஜனுடைய பெண்களைத் தம் தம்பி க்கு விவாகம் செய்யும்பொருட்டுத் தம்முடன்

கொண்டுவந்து விட்டார். ஒருவன் தன் மகளையும் மருகியையும் உடன்பிறந்தாளையும் பார்ப்பதுபோல் இவர் அவர்களைப் பார்த்தாரே யன்றி வேறு எவ்வித மான எண்ணங்களும் இவருக்கு ஜனிக்கவேயில்லை. இரதத்தைச் செலுத்திக்கொண்டு வரும்போது மூவரில மூத்தவளாகிய அம்பை என்பவள் இவரைநோக்கி "நான் வேறொரு புருஷனை என்மனத்திற்கொண்டேன். தயவுசெய்து என்னைவிடல் வேண்டும்" என்று வேண்டவே அவளை அனுப்பிவிட்டு மற்றிருவரையும் தம் தம்பிக்கு விவாகம் செய்வித்தார். விசித்திர வீரியன் சிலநா ளில்லறம் நடத்திப் புத்திர சந்தான மின்றி இறந்துபோய்விட்டான். புத்திரரில்லாம லிவன் இறந்துபோகவே வம்சம் க்ஷீணதசையடைந்து போகுமேயென்கிற எண்ணம் சத்தியவதியை மிகவும் பீடித்துக்கொண்டிருந்தது.

சத்தியவதி இதனா லதிக மனத்துயர மடைந்து ஏக்க முற்றிருந்தாள். பிறகோர்நாட் பீஷ்மரை யழைத்து "உன் தந்தையின் குலம் சந்ததியில்லாமல் நாசமாய்ப் போகலாமா? இனியாவது பட்டாபிஷேகம் செய்துகொண்டு விதந்துவாய்ப் போயிருக்கும் அம்பிகை அம்பாலிகை என்னுமிருவரையும் மணந்து புத்திரபாக்கியம் பெற்றுச் சந்தனுவம்சம் இடையறு வண்ணம் காப்பாற்றும்படி யான் உன்னை மிகவும் பிரார்த்தித்து அதிக விநயமாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன். நீ இதை மறாது உன் அன்னையாகிய என் வேண்டுகோளிற்கு இணங்கல் வேண்டும்" என வேண்டினாள். சிநேகிதர்களும் பந்துக்களும் சத்தியவதிவேண்

டிக் கொண்டதுபோலவே பீஷ்மரை மிக்க விநயத்துடன் தங்களுக்கும் தங்கள் நாட்டிற்கும் அரசராய்த் தங்களை அளித்துப் பாதுகாக்க வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். இல்லற வாழ்க்கையும் சிம்மாசனமும் தங்களை யேற்றுக்கொள்ளும்படி அவரை நோக்கிச் சென்றன. இவர் அன்று செய்த சபதந்தான் குறுக்கே நின்றது. சபதந்தான்; ஆயினும் என்? பீஷ்மருக்குச் சத்தியத்தினும் மேலான பொருள் வேறொன்றுண்டோ?

* "யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன்றும்
வாய்மையி னல்ல பிற"

என்பது இவர்க்கும் பொருந்தின தன்றோ? பீஷ்மர் தமது சிற்றன்னையை நோக்கி "அம்மா, தாங்கள் சொல்வது சரிதான். தர்ம சாஸ்திரத்திற்கும் ஒத்ததுதான். ஆயினும் பிரமசரியத்தையே நான் எப்போதும் விரதமாகக்கொண்டு ஒழுகுவேனென்று கூறிய சபதம் உங்களுக்குந் தெரிந்த விஷயந்தானே. என் சபதத்திற்கு விரோதமாய் நடக்கவும் எண்ணுவேனோ? திரிலோக சாம்பிராஜ்ஜியம் வருவதானாலும் சரி, அல்லது அதனினும் சிறந்த பதவி கிடைக்கிறதாயிருந்தாலுஞ்சரி, அவற்றை யொருபொருளாக மதிப்பேனோ? ஒருகால மண் தன் மணத்தை மாற்றினும் மாற்றும்; ஜலம் தன் குளிர்ச்சியை நீக்கினும் நீக்கும்; ஒளி தன் உருக்காட்டு மியல்பினை ஒழிக்கினும ஒழிக்கும்; வளி தன் பரிசம் மறைக்கினும் மறைக்கும்; அக்னி தன் சூட்டை யகற்றினு மகற்றும்; ஞாயிறு தன்

* திருக்குறள்.

னொளி யிழக்கினு மிழக்கும்; திங்கள் தன் தண்கதிர் விலக்கினும் விலக்கும். விண் தன் ஓசைசெய் யாற்றலை விடுக்கினும் விடுக்கும், விருத்திரனை வென்றோன் தனது ஆண்மை இழக்கினும் இழக்கும். தருமதேவதை நடுவுநிலைமை குன்றி ஒரு புடைச்சாரினும் சாரும். யானோ சொன்னசொற் பிறழேன். தாயே! என்னை மன்னிப்பாயாக" என்றார். சத்தியவதி எவ்வளவு வருத்தத்துடன் பிரார்த்தித்தும் பீஷ்மர் அவளுடைய வேண்டுகோளுக்கு இணங்காது மேலும் சொல்லத் தொடங்கினார், "அன்னாய்! சத்தியத்தினின்றும் தவறுதல க்ஷத்திரியனுக் கடுக்குமா? உன்னுடையமனவருத்தம் நீங்குமாறு ஒருயுக்தி சொல்லுகின்றேன். சந்தனு வம்சம் நாஸ்தியாய்ப்போகக்கூடாதென்பதுதானே என்னுடைய கோரிக்கை. அதுதான் என்னுடைய விருப்பமும். க்ஷத்திரிய வம்சம் இறுதியடையும்போலிருக்கும்போது தக்கவர்களைக்கொண்டு புத்திர சந்தானம் பெறுகிறது வழக்கம். இது தொன்றுதொட்டு வழக்கமாய் வந்துகொண் டிருக்கின்றது. இதற்கு ஸ்மிருதியினுடைய அத்தாக்ஷியுமிருக்கின்றது. வேண்டுமானால் பெரியவர்களையும் அழைத்து விசாரித்துத் தகுதியானவற்றைச் செய்யலாம். சந்தேகம் வேண்டுவதில்லை" யென்று அன்னையைத் தேற்றி "ஒருபெரிய இருஷியை வரவழைத்து விதந்துவாயிருக்கிற ராஜஸ்திரீகளிடமாகப் புத்திரருண்டாகும்படி செய்யலாம், அப்புத்திரர்கள் விசித்திர வீரியனுடைய புத்திரர்களாகவே மதிக்கப் படுவார்கள்" என்று சொல்லவே சத்தியவதிக்குப் பூர்வஞாபகம்

வந்தது. தான் கன்னிகையா யிருந்தபோது கன்னி டம் பராசரருக்கு ஒரு பிள்ளை பிறந்ததென்றும், பிறந்தவுடன் தன்னை விட்டுவிட்டு உடனே தன் தகப்பனருடன் அந்தப்பிள்ளை சென்றுவிட்ட தென்றும், அந்தப்பிள்ளைதான் கிருஷ்ண த்வைபாயன வேத வியாசரென்றும் சொன்னாள். தனக்கு எப்போதாவது கஷ்டகாலம் சம்பவிக்கும்போது அவர் தம்மை நினைத்தால், தாம் வந்து உதவி புரிந்து போவதாகக் கூறினாரென்றுஞ் சொன்னாள். தன் புத்திரனை நோக்கி "பீஷ்மா, நீ விரும்பும் பக்ஷத்தில் வியாசரைக் குறித்துத் தியானிக்கிறேன். அவர் உடனே வருவார்" என்று சொல்லி அவரை நினைத்ததும் உடனே வந்து தோன்றினார் வியாசர். அப்போதிருந்த அசந்தாப்பத்தை அவருடன் சொல்லவே அதற்கவர் "ஆமாம்! வேண்டுமாயின் புத்திர சந்தானம் உண்டாகும்படி செய்யலாம். அதற்கும் தக்க காலம் வேண்டாமா? திடீரென்று இப்போதே உண்டாகவேண்டுமென்பது உமது விருப்பமாயின் தம்பியினுடைய பத்தினிகள் என் விகார ரூபத்தைச் சகித்து என்னுடன் கலந்தால்தான் புத்திர சந்தானமுண்டாகும். இதைச்சகித்து என்னுடன் சேருவார்களாகில், அதுவே அவர்கள் அகோரதபஞ் செய்ததற்குச் சமானம்" என்று வேதவியாசர் தம் அன்னையினிடம் சொன்னார். சத்தியவதி தன் மருகியரை அதிக பிரயாசப்பட்டு அவருடன் சேர இணங்கும்படி செய்தாள். அப்படிச்செய்தும் மூத்தவள் அவருடைய கறுத்த முகத்தையும், தாமிரவர்ணம் போன்ற சடையை

யும், தீப்பொறி பறக்கும் கண்களையும், வளர்ந்து மார்பினிடம் புரளும் தாடியினையும் கண்டு அவர் தன்னை யணுகினவுடன் சகிக்க முடியாது பயந்து கண்ணை மூடிக்கொண்டனள். தன்னை அநுபவித்துப் போம் வரையில் மூடின கண்களைச் சற்றேனும் திறக்கவேயில்லை. ஆகவே அவளுக்குப் பிள்ளையாய்ப் பிறந்த ஆத்மாவோ தான் முன்செய்த கர்மசேஷத்தினால் கண்ணிலாத் தேகத்தில் இருந்துழலவேண்டி வந்தது. வியாசரும் அவளுக்குப் பிறக்கும் பிள்ளையானது பிறவிக் குருடாயிருக்குமென்று முன்னதாகவே சொன்னார். இப்பிறவிக் குருடன்தான் திருதராஷ்டிர மகாராஜா. அம்பாலிகையோ ருஷியைப்பார்த்ததும் பயந்து தேகம் வெளுத்துப்போய் விட்டாள். அவளிடமாகப் பிறந்த பிள்ளையோ வெண்குட்டம் பிடித்தவனாய்ப் போய்விட்டான். இவன் தான் பஞ்சபாண்டவர்களுடைய தந்தையான பாண்டு மகாராஜா. இவ்விரண்டு பிள்ளைகளும் இப்படிப் பிறப்பார்களென்த் தெரிந்தவுடன் ஒருபழுது மில்லாத பிள்ளை ஒன்று வேண்டுமெனச் சத்தியவதி வேத வியாசரை வேண்டிக்கொண்டு தன் மூத்தமருகியை அழைத்து இருஷியினிடம் மறுபடியும் போகச் சொன்னாள். அவள் தன் மாமியாருடைய வார்த்தைக் கிணங்காது தன் வேலைக்காரியாகிய ஒரு சூத்திர ஸ்திரீயைத் தனக்குப்பதிலாக அவரிடம் அனுப்புவித்தாள். அவளோ இவர்களைப் போன்று கர்வங்கொள்ளாது இருஷியினுடைய பெருமையை நினைத்துப் பயபக்தியுடனும் அதிக விசுவாசத்துடனும் நடந்து கொண்டாள்.

வியாசர் அவளை ஆசீர்வதித்து அவளிடம் செல்லவே தருமதேவதையே ஓருருவெடுத்து அவளுக்குப் பிள்ளையாய்ப் பிறந்தது. அந்தப் பிள்ளைக்குத்தான் விதுரனென்று பெயர். வேதவியாசருக்கு இத்தருணத்திற் பிறந்தவர்கள் மூவர். மூத்தவன் திருதராஷ்டிரன், இரண்டாவது புத்திரன் பாண்டு, மூன்றாவது புத்திரன் விதுரன். முதலிருவரும் பாரதயுத்தத்து இருதிறத்தார்க்கும் முறையே தந்தையராயினர். விதுரரோ திருதராஷ்டிரனுக்கு மந்திரியாயிருந்தார்.*

இம்மூவரையும் இளமைப்பருவத்திற் பீஷ்மர் தம் பிள்ளைகளைப் பாதுகாப்பதுபோற் பாதுகாத்து வந்தார். அம்மூவரும் தங்கள் குலாசாரத்திற்குத் தக்க சடங்குகள்செய்து முடிக்கப்பெற்றவுடன் வித்தியாப்பியாசஞ்செய்ய ஆரம்பித்தார்கள். அவர்கள் தாம் அறியவேண்டிய வேதத்திலும் பாண்டித்தியமடைந்தார்கள். வில்வித்தை, யானையேற்றம், குதிரையேற்றம், கதாயுதப்பயிற்சி, கத்தி விளையாட்டு, தர்ம சாஸ்திரம் இவைகளெல்லாவற்றிலும் மிக்க தேர்ச்சியடைந்தார்கள். சரித்திரம், புராணம், பற்பல கலைகள், வேதம், வேதாங்கம் என்னுமிவற்றிலும் அதிக விற்பத்தி உடையவர்களானார்கள். அக்காலத்திற் புத்திரர்களின் தேகப் பயிற்சியில் தாய் தந்தையர் எவ்வளவு கவனம் வைத்திருந்தார்களோ அவ்வளவு கவனம் அவர்கள் புத்திரர்க்கு வேண்டிய மதஞானம் குணஞானம் என்னுமிவைகளினும் பூர்த்தியாய் வைத்திருந்தார்கள்.†

---

* வியாசபாரதம், ஆதிபருவம். § 104—106. † § 109.

இவர்களில் மூத்தவன் பிறவிக்குருடனாய்ப் போய்விட்டபடியால் அவனுக்கு இளையோனாகிய பாண்டுவுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்தார் பீஷ்மர். திருதராஷ்டிரனுக்குச் சுபல தேசாதிபதியின் புத்திரியாகிய காந்தாரியைப் பாரியையாக்கினார். "கொல்லைக்குக்கள்ளி, குடிக்குச சகுனி" என்னும் பேர்பெற்ற குடிகேடனாகிய சகுனியின் சகோதரி இவள். ஆயினும் இவள் மகா பதிவிரதை. கல்யாண மாவதற்கு முன்னமே தனக்கு வாய்க்கும் புருஷன் கண்ணிலானெனக் கேள்விபுற்றதும் மிகப்பரிதபித்துப் பற்பல பொருள்களையும் பார்த்து அநுபவிக்கத் தனககுவரும் நாயகனுக்குக் கண்ணில்லாதபோது தனக்கு மாத்திரம் கண்ணிருக்கலாகுமோ வென்று தன் கண்ணையும் வஸ்திரங்கொண்டு கட்டிவிட்டதாக ஒரு கதையுமுண்டு. ஸ்திரீகள் * 'தங்கணாயகரிற் றெய்வம் தவம் பிறிதில வென்றெண்'ணி அவர்களிடத்து வைத்திருக்கும் பயம், பக்தி, விசுவாசம என்னு மிவற்றில் இந்து ஸ்திரிகளுக்கு நிகராக வேறு ஸ்திரீகளை ஒப்பிட்டுச் சொல்லுதல கூடாது.

யாதவர்களுக்கரசனாகிய சூரசேனன் மகள் பிருதா (குந்தி) என்பவளைப் பாண்டு பத்தினியாக்கினார் பீஷ்மர். இவள் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய தந்தையாகிய வசுதேவருடைய சகோதரி. இவளுடைய ஸ்வயம்வரத்திற் பீஷ்மருடைய விருப்பத்திற் கிணங்க இவள் பாண்டுவிற்கு மாலையிட்டாள். கொ

* கம்பராமாயணம்.

ஞ்சக்காலத்திற்குப் பிறகு மத்ர தேசாதிபதியாகிய சல்லியனுடைய சகோதரி மாத்திரி என்பவளையும் இவருக்கு மனைவியாக்கினார். பாண்டு மகாராஜா இரண்டாவது மனைவி வந்த ஒரு மாதத்திற்குள் அநேக ராஜ்ஜியங்களைச் செயித்து மிகுந்த திரவியங்களை அஸ்தினாபுரத்திற்குக் கொண்டு வந்தார். தம்மிரண்டு பத்தினிகளையும் தம்முடன் கொண்டு வேட்டையாடும் விருப்பத்துடன் காட்டிற்குச்சென்று அவ்விடத்திலேயே சிலகாலம் வாசஞ்செய்துகொண்டிருந்தார். *

ஒருநாள் இவர் வேட்டையாடும்பொருட்டு வெளியிற் சென்றதும அவ்விடத்தில் மானுருக்கொண்டு இன்பம் நுகர்ந்து கொண்டிருந்த இருஷியினதும் அவர் பத்னியின் மேலும் தம் மதிமயக்கத்தால் ஓர் அம்பு எய்தார். அருளிலராயிருந்தபடியால் இருஷியின் சாபத்திற் காளாகவேண்டி வந்தது. "உன் மனைவியுடன் இன்பம நுகர வெண்ணிச் சேர்வாயாயின் இறக்கக் கடவாய்" என்று சொல்லி, இருஷியும் அவர் பத்தினியும் பாண்டு மகாராஜா எய்த பாணத்தின் கொடுமைபொறுக்க முடியாது உயிர் துறந்தார்கள். இருஷியின் சாபத்தைக் கேட்டதுமுதல் சுகமற்று ஏக்கமுற்றிருந்தார் பாண்டுவும. இன்பமனுவிக்க முடியாமற் போயிற்றே என்னு மெண்ணத்தினாலுண்டான துக்கமன்று இது; புத்திரசந்தான மில்லாது சாகவேண்டுமேஎன்னும் வருத்தந்தான். இவ்வருத்தம நாளுக்கு நாள் அதிகரிக்கவும் தம்முடைய பொருளையெல்லாம தானஞ் செய்து விட்டு வனசஞ்சாரம்

* வியாசபாரதம், ஆதிபருவம். § 111-114.

செய்யும் பொருட்டுப் புறப்படவே குந்தி, மாத்திரி, என்னுமிரண்டு மனைவியரும் அவருடன் சென்றார்கள்.*

பாண்டுவிற்குப் பிள்ளையில்லா ஏக்கமே பெரிய ஏக்கமாயிருந்தது. இதற்கென் செய்யலாமெனக் குந்தியினுடன் ஆலோசிக்கவே அவள் தன் புருஷனைப்பார்த்து "நான் கன்னிகையாயிருந்தபோது தூர்வாசமகர்ஷிக்குப் பணிவிடை செய்யும்படி என் தாய் தந்தையர் என்னை நியமித்தார்கள். அவருக்கு நான் அப்படியே தொண்டு செய்து கொண்டு வருநாளில் அவர் என் பணிவிடைககு மிகவும் சந்தோஷப்பட்டு எனக்கு ஒரு மந்திரம் உபதேசித்துப் போயினார். அந்த மந்திரத்தை எந்தத் தேவதையைக் குறித்து உச்சரிக்கின்றேனே அந்தத்தேவதை பிரசன்னமாய் என்னுடைய எண்ணத்தை நிறைவேற்றும். வேண்டுமானால் அவர்களாற் புத்திர சந்தானம பெற்றுப் புத் என்னும் நரகத்தினின்றும் தப்பித்துக்கொள்ளலாம்" என்றாள். இதைக்கேட்டதும் அரசன் மிகவும் மகிழ்ந்து "அப்படியானால தர்மதேவதையை வரவழைத்து அவரிடமாக ஒரு புத்திரனைப் பெறுவாயாக" என்றான். அப்படி அறக்கடவுளுக்குப் பெற்ற பிள்ளைதான் தர்மர்; யுதிஷ்டிரர் என்பது அவருக்கு மறுபெயர். அதற்குப் பிறகு பர்த்தாவினது வேண்டுகோளுக் கிணங்கி வாயுவினருளாற் பீமனைப் பயந்தாள். பின்பு தேவேந்திரனை நினைத்தமாத்திரத்தில் அவன் வரவும் அவனுக்கு அர்ச்சுனனை யீன்றாள்.

* வியாசபாரதம், ஆதிபருவம். § 118—119.

தன் கணவனுடைய விருப்பத்தின்படி அந்த மந்திரத்தைத் தன் சக்களத்தியாகிய மாத்திரிக்கும் உபதேசிக்க அவள் அசுவினி தேவதைகளுக்கு நகுலசகாதேவரென்னும் இரட்டையரை யீன்றாள். இவர்கள் தாம் பஞ்ச பாண்டவர்கள்; தேவதைகளுக்குப் பிறந்தவர்கள். இவர்களும் தேவர்கள் தாம்; இவ்விஷயம் முகவுரையிலேயே முன்னமே கூறப்பட்டுளது. இவர்களில் நாலவர் முன் இந்திரராயிருந்தவர்கள். அர்ச்சுனன் ஒருவன்தான் நரன் என்னும் ருஷியாயிருந்து இப்போது இப்பெயர் வகித்து இந்திரனுக்குப் பிள்ளையாய்ப் பிறந்தவன். பாண்டு மகாராஜா தனக்கு நேர்ந்தசாபத்தை மறந்து ஒரு நாள் மாத்திரியொடுங்கூடி முயங்க முயன்றான். அவள் என்ன சொல்லித்தடுத்தும் கேட்கவேயில்லை. அவளிடம் இன்பம் நுகர எண்ணங்கொண்டு அவளைத் தொட்ட மாத்திரத்திலேயே அவன் பிராணன் போய்விட்டது. மாத்திரியின் மடியின்பேரில் அவன் உயிர் விட்டதும் இவள் தேம்பித்தேம்பி அழுங் குரலைக் கேட்டுக் குந்தி ஓடிவந்து பார்த்து, தன் கணவன் இறந்து கிடப்பதைக் கண்ணுற்று இவளும் அவளுடன் சேர்ந்து அழ ஆரம்பித்துவிட்டாள். இவர்களிருவரும் தாம் தாம் தங்கணவருடன் போகவேண்டுமென்னும் விவாதம் உண்டாயிற்று. கடையில் ஒருவாறான முடிவும் ஏற்பட்டது. மாத்திரியின் மடியில் உயிர்விட்டபடியால் அவளே அவருடன் போகவேண்டியது நியாயமென்றும், அதற்குக் குந்தி யிணங்க வேண்டுமென்றும் மாத்திரி வேண்டிக்கொள்ளவே

குந்தியும் அரைமனத்துடன் சம்மதித்தாள். உடனே தனனிரண்டு பிள்ளைகளையும் குந்தியினிடம் ஒப்பித்துத் தானுந் தன் கணவனுடன் போய்விட்டாள். குந்தி நகுல சகாதேவர்களையும் தன் புத்திரர்களைப் போலவே அதிககவலையுடன் பாதுகாத்து வளர்த்துக்கொண்டு வந்தாள். உடனே சில இருஷிகள் குந்தியினிடம் போய் அவளையும் ஐவரையும் அஸ்தினபுரிக்குக் கொண்டுபோகிப் பீஷ்ம திருதராஷ்டிராதிகளிடத்து ஒப்பித்துச் சென்றார்கள். பாண்டுவிற்குரிய ஈமக்கிரியைகளும், சிராத்தச் சடங்குகளும், தகுதியாய் நிறைவேற்றப்பட்டன. *

திருதராஷ்டிர மகாராஜாவுக்கும் காந்தாரியினிடமாக நூறு புத்திரரும் ஒரு புத்திரியும் பிறந்தார்கள். இவர்களில் மூத்தோனாகிய துரியோதனன் பீமன் என்றைத்தினம் பிறந்தானோ அன்றைத் தினத்திலேயே அவனிமிசைத் தோன்றினான். ஆயினும் துரியோதனன் பிறந்தபோது துர்க்குறிகள் பற்பல காணப்பட்டன. காற்றும் மழையுங் கலந்து வீசின. நாயும் நரியும் குரைத்து ஊளையிட்டன. காகமும் கழுதையும் கரைந்து கத்தின. இத்தகைய துர்க்குறிகள் அநேகம் நிகழ்ந்தன. நல்ல காலத்திற் சேதனப் பிரபஞ்சமும் அதிலுள்ள வஸ்துக்களும் ஆனந்தமடைந்து அலங்காரமாய்த் தோன்றும். காலம் கெடுதியா யிருந்தால் அதற்குத் தக்க கெட்ட குறிகளையும் தோற்றுவிக்கும். இக்குழந்தையாலே குலம் நாசமாகப் போகவேண்டி யிருக்கின்றதன்றோ? அதற்குத்

* வியாசபாரதம், ஆதிபருவம். § 120 - 127.

தக்கபடி அசர பதார்த்தங்களுங்கூட ஏக்கமுற்றிருந்தன. அவனுடைய ஜாதகத்தை விதுரர் பார்த்து உலகத்திற்கு நாசம் வருமென்றெண்ணி இவனை யெறிந்து விடுவதே உத்தமமென்று திருதராஷ்டிரனுக்குப் புத்தி சொன்னார். அவனுக்குத் தன் முதற்புத்திரனை எறிந்து விடுவதற்குச் சிறிதேனும் மனம் வரவேயில்லை. தன்னுடைய நாசத்திற்கும் தன் தேச மழிவதற்கும் துரியோதனன் காரணனாயினான். இதற்கெல்லாம் காரணம் தகப்பனுடைய அறிவீனமே யன்றி வேறில்லை. புத்திர வாற்சல்லியத்தை மாத்திரம் பார்த்தானே தவிர தானோர் அரசனென்பதையும் தன் குடிகளுடைய க்ஷேமத்திற்குக் கடமைப்பட்டிருக்கின்றா னென்பதையும் அவன் முழுதும் மறந்தான் போலும்! *

நன்னெறி விட்டுத் துன்மார்க்கத்திற் பிரவேசித்த உலகிற்கு நன்னெறியைக் காட்டுமபொருட்டெண்ணங்கொண்ட தேவர்களுடைய தொழிலுக்கு உதவியாகும்பொருட்டுப் பிறந்தான் துரியோதனன். முன் ஜன்மாந்தரத்தில் தான் செய்த செயலுக்குத் தக்கபடியும், தன் னெண்ணங்களுக்குத் தக்கவாறும் இத்தகைய வேலைக்குரியனாய் இவன் இத்தருணத்திற் பிறக்கவேண்டி வந்தது. இவன் மிகக பலமுடையவன். அதிக தைரியசாலி. கடவுளிடத்தும் சிறிது பக்தியுள்ளவன். அரசனுக்குரிய கடமைகளிற் பெரும்பான்மையவற்றை அநுஷ்டித்துக்கொண்டும் வந்தான். ஆயினும் தன்னயத்தையே கருதுபவன்

---

* வியாசபாரதம், ஆதிபருவம். § 115.

"நானே எல்லாவற்றிற்கும் முதன்மையாக வேண்டும். நானே அரசனாகவேண்டும். நான் எண்ணியவாறு எல்லாமியங்க வேண்டும்" என்னு மித்தகையனவே அவனுடைய எண்ணங்கள். தன்னைப் பார்க்கினும் வேறொருவன் ஏதேனுமொரு காரியத்தை நன்றாய்ச் செய்தால் மனம்பொறான்.

* "அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்"

என்பதைச் சிறிதேனும் ஓரான். பொறுமை மேற்கொண்டெழுவே மனவமைதி யென்பதே அவனுக்குத் தெரியாது போயிற்று. அழுக்காறுதான் அவனுக்கு அந்தத்தில் அந்தகனாய் வந்து தோன்றியது. துரியோதனனைப் பார்க்கினும் யுதிஷ்டிரர் வயதினும் முதிர்ந்தவரானதனால் இவர்தாம் நியாயப்படி அரசு செய்வதற்குரியவர்.

பாண்டவர்களும் துரியோதனாதியரும் ஒரேயிடத்தில் வளர்ந்துகொண்டு வந்தார்கள். பீமன் அதிக பலவான். காளையர் குறும்பு அதிக முடையவன். விளையாடும் போதே அவனுடைய துஷ்டத்தனம் முன்னிற்கும். மற்றெல்லோரையும் மூக்கைப்பிடித்து ஆட்டுவான். அனேகம்பேரை ஒருகாலத்தில் ஜலத்தில் அழுத்தி மூச்சுத் திணறும்படி செய்து விடுவான். மற்றவர்களெல்லாம் ஆற்றங் கரையிலுள்ள மரத்திலேறிப் பழம் பறிக்கும்போது இவன் கீழிருந்துகொண்டு சண்டமாருதம்போல் மரத்தை அலைக்கஎத்தனித்த மாத்திரத்தில் மரத்திலுள்ள பழங்களும்

* திருக்குறள்.

அதைப் பறிப்பவர்களும் பொத்துப் பொத்தென்று கீழே விழுவார்கள். இவன் பலமோ அவ்வளவு அதிக மானது. கெட்ட எண்ணத்துடன் இவன் இப்படிச் செய்யாமற்போன போதிலும் இந்த முரட்டாட்டம் மற்றவர்களுக்குப் பிடிக்கவேயில்லை. பல முள்ள பிள்ளைகள் யோசனை செய்யாது தங்கள் பலத்தை உபயோகிப்பதனால் எல்லாருடைய விரோதத்தையும் சம்பாதித்துக்கொள்ளுகிறார்கள். பீமனுடைய பலத்தைப்பார்க்கப் பார்க்கத் துரியோதனனுக்கு அழுக்காறு அதிகரித்துக் கொண்டே வந்தது. அவனைக் கொன்றுவிடவும் தீர்மானித்து விட்டான். தன்னெண்ணத்தை நிறைவேற்றும் பொருட்டுக் கங்காநதி தீரத்தில் ஒரு வசந்த மாளிகை சமைப்பித்துப் பாண்டவர்களை விருந்துண்ண வரும்படி வேண்டினான். விருந்து நடத்தும் நாள் அந்தரங்கமான சிநேகிதனைப் போன்று நடித்து விஷங்கலந்த அன்னத்தைப் பீமனுக்குத் தன் கையாலேயே கொடுக்கத் துணிந்தான். அனைவரும் போஜனமான பிறகு ஜலக்கிரீடை செய்யும் பொருட்டுக் கங்கையி லிறங்கினார்கள். ஆடிய பிறகு எல்லாரும் கரையேறிவிட்டார்கள். பீமனும் கரை ஏறினான். அதற்குள் விஷம் தலைக்கேறி விட்டது. மயக்கங்கண்டு மணல்மேற் படுத் துறங்கிவிட்டான். மற்றவர்கள் இதைக் கவனிக்கவில்லை. துரியோதனன் மாத்திரம் பின்தங்கிப் பீமன்விஷத்தினால் தன் உணர்ச்சி யற்றிருக்கும்போது ஆற்றங்கரையிற் படர்ந்திருக்கும் கொடிகள் கொண்டு பீமனைக் கட்டிக் கங்கையிலெறிந்து விட்டான். பீமன் கங்கையில் விழு

நத்தும் பாதலம்போய் நாகலோகத்தைச் சேர்ந்தான். அங்கிருந்த சர்ப்பங்களெல்லாம் தங்கள் காளி, காளா த்ரி, யமன், யமதூதி, என்னும் தங்கள் விஷப்பற்களால் கடிச்சவே, தலைக்கேறியிருந்த விஷமானது மாறிப் போய்விட அவனுக்கு உணர்ச்சி சற்றுதித்தது. உணர்ச்சி வந்ததும் தன்னைப் பிணித்திருந்த கொடி களை யறுத்துச் சர்ப்பங்களைக் கொன்று குவிக்க ஆரம்பித்தான். சர்ப்பங்கள் தங்களரசனாகிய வாசுகி யினிடம் போய்த் தங்களைக் காக்கும்படி முறையிட் டன. அங்கிருந்த உயர்ந்த சர்ப்பங்களிலொன்று பீமனுடைய மூதாதையா யிருந்தது. அதனுடைய வேண்டுகோளுக்கிணங்கி வாசுகி பீமனுக்கு அமிர்த குடத்தினையும் கொடுத்தமிர்தம் குடிக்கும்படி செ ய்தான். குடித்ததும் பலம் மிக விருத்தியாய் விட் டது. எட்டு நாட் கழித்து அவன் தன்னூருக்குத் திரு ம்பினான். நடந்தவற்றைத் தன் அன்னை, தமையன், தம்பியர்களும் ஆதியோடந்தமாய்ச் சொன்னான். விது ரர், யுதிஷ்டிரர் இவர்கள் இதனை வெளிக்குத் தெரி யாமலே அடக்கிவிட்டார்கள். இவ்வளவு பக்ஷமா யிருந்தும் துரியோதனன் மாத்திரம் தன் கெட்ட எண்ணத்தை யொழிக்க முயலவில்லை. பாண்டவர் களிடத்து அவன் வைத்த விரோதமும் கிருஷ்ண பக்ஷத்து இருளைப்போல நாடோறும் விருத்தி யடை ந்து கொண்டே வந்தது.

குருவம்சத்துப் பிள்ளைகள் ஒற்றுமையின்றி ஒரு வரோடொருவர் சச்சரவு பண்ணிக்கொண்டு வீணிற் காலங்கழிக்கிறதை அரசன் கண்டு, அவர்களுக்குரிய

ஆயுதப்பயிற்சி முதலியன கற்பிக்கும் பொருட்டுக் கிருபாசாரியரிடம் அவர்களை ஒப்பித்தான். அவர்கள் இவரிடம் சிலகாலம் வரையில் ஆயுதப்பயிற்சி செய்துகொண்டு வந்தார்கள். அப்போது கிருபரில லத்துத் துரோணாசாரியர் என்னும் பெயர்பூண்ட பிராமணோத்தமர் ஒருவர் வந்திருந்தார். இவர் கிருபாசாரியருடைய தங்கையாகிய கிருபியின் புருஷர். பரத்வாஜர் என்னு முனி புங்கவருடைய புத்திரர். பாஞ்சால தேசாதிபதியாகிய பிரிஷதன் என்னுமரசன் புத்திரனாகிய துருபதனுடன் தாமும் தம் தகப்பனரிடம் ஒன்றாய் அஸ்திர சஸ்திராப்பியாசஞ் செய்துதேர்ந்தவர். துரோணர் இதற்கு மேலும் பிருகுவின் புத்திரராகிய ஜமதக்னி முனிவரிடம் இக்கலையைக் கற்றதுமன்றி அவரிடமிருந்து அநேக அஸ்திர சஸ்திரங்களைப்பெற்று அவற்றைப் பிரயோகஞ் செய்யும் முறைகளையும் நன்றாயறிந்தவர். பிறகு யாதோ ஒரு காரியார்த்தமாய் அப்பொழுது பாஞ்சால தேசத்திற்கு அரசனாயும் முன்னொருகால தம்சகபாடியாயுமிருந்த துருபதனைப் பார்க்கும்பொருட்டு அவனரண்மனைக்குச் சென்று தாம் தம் சிநேகிதனைப்பார்க்க வந்திருப்பதாக அவனுக்குத் தெரிவிக்கும்படி சொன்னார். இவ்விஷயங் காதிற்பட்டதும் துருபதன் விஷஜெந்துவைப்போற் சீறி, பணச்செருக்கினால், வந்தவனைக் கோபக்குறியாற் சற்றுக் கடுகடுப்புடன் பார்த்து "ஏழைகளுடன் அரசர்கள் சிநேகமுஞ் செய்வார்களோ? ஒருவன் தானரசனல்லாவிடில் அரசருடன் எப்படிச் சிநேகம் செய்யத்தக்க அந்தஸ்துக்குவரக்

கூடும் ?'' என்று துரோணருடன் போய்ச்சொல்லும
படி அவரிடமிருந்து வந்தவனைத் திருப்பியனுப்பி
விட்டான். *'' தொன்மை மறவேல்'' என்பதையும்
அடியோடே அலக்ஷியஞ் செய்துவிட்டான். ஆலோ
சியாது சொல்லிய அவ்விஷயம் அவனுக்குப் பின்பு
அதிக அநர்த்தமாய் முடிந்தது. துரோணர் ஒன்றும்
மேற் சொல்லாமல் திரும்பி அஸ்திநபுரிக்கு வந்து
தன் மைத்துனனாகிய கிருபருடைய வீட்டில் தங்கி
யிருந்தார். துப்பாக்கி வயிற்றிற் பிரங்கி பிறந்தாற
போன்று அவர்க்குப் புத்திரராய் உதித்த அசுவத்
தாமா அப்போது அரசிளங் குமாரர்களுக்கு வில்
வித்தை கற்பித்துவரும் கிருபருக்கு அவ்விஷயத்
தில் அதிக உதவி புரிந்துகொண்டு வந்தார். †

ஒரு நாள் துரியோதனாதியர் பந்து விளையாடிக்
கொண்டிருந்தபோது அப்பந்து தவறி ஒரு பாழ்ங்
கிணற்றில வீழ்ந்துவிட்டது. அதை யெடுக்க அவா
களிலொருவராலும முடியவில்லை. அவர்களுடைய
உபாத்தியாயராகிய கிருபர் முயன்றும முடியவில்லை.
பந்தாடும் பிள்ளைகள் எல்லாப பக்கமும் பார்த்துப்
பார்த்து விழித்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள்
விழிக்கும்விழிப்புக்குப்பத்துத்திக்கும்போதாவாயின.
அத்தருணத்தில் துரோணர் அந்தப்பக்கமாய்ப் போ
ய்க்கொணடிருந்தார். அவர்கள அவஸ்தைப் படுகிற
தைப்பார்த்து அவாகளை அணுகிச் சங்கதி இன்ன
தென்று தெரிந்துகொண்டு தன கையிலுள்ள பவித

* ஆத்திசூடி. † வியாசபாரதம், ஆதிபருவம். §128, 129, 131, 132.

திரத்தைக் கையினின்றுங் கழற்றி, பந்து விழுந்திருந்த கிணற்றிலெறிந்து அங்கிருந்த தருப்பைப் புல்லிலிரண்டொன்றை அதன்பிற்கு எறியவே அது பந்தைத் வெளியிற் கொண்டுவந்துவிட்டது. பிறகு ஓர் புல் மோதிரத்தையும் வெளியே கொணர்ந்தது. அதைக்கண்ட பிள்ளைகளனைவரும் அதிக ஆச்சரியமும் ஆனந்தமுமடைந்து அவருக்கு யாதேனும் உதவி புரிய வேண்டுமென்னு மெண்ணமுடையரானார்கள். பிள்ளைகளை அழைத்து "நீங்க ளிதைப் போய்ப் பீஷ்மரிடம் சொன்னாற் போதும். வேறொருதவியும் புரியவேண்டாம்" என்றார் துரோணர். பிள்ளைகள் அதிக குதூகலத்துடன் தம் பிதாமகராகிய பீஷ்மரை யடைந்து நடந்த சங்கதியைச் சொன்னார்கள். பிள்ளைகளுக்குத் தக்க ஆசிரியரை அடைய இதுவரையும் விசாரித்துக்கொண்டேயிருந்த பீஷ்மர் இந்தச் சங்கதி கேட்டவுடன் இவ்வளவு வல்லவர் துரோணராய்த் தாம் இருத்தல் வேண்டுமென்னும் துணிபுகொண்டு கிருபர் இல்லத்திற்கு உடனே அவரை நாடிச் சென்றார். துரோணரும் தம் சரித்திரமெல்லாம் அவர்க்குச் சொல்லி முடித்தார். குருபுத்திரர்களுக்கு ஆசிரியராக வேண்டுமென்று பீஷ்மர் அவரை வேண்டிப் பிள்ளைகளை அதிக ஆனந்தத்துடன் அவரிடம் ஒப்பித்துவிட்டார். *

குருபுத்திரர்கள் தம் குருவை யடைந்ததும் அவர் இவர்களை நோக்கிக் "குழந்தைகாள்! என்மனத்தி

* வியாசபாரதம், ஆதிபருவம். § 133.

லோரெண்ணமிருந்து என்னை எப்போதும் சஞ்சலப் படுத்திக்கொண்டேயிருக்கின்றது. நீங்கள் என்னிடம் வில்வித்தை முதலியன பயின்று திறமுடைய வில்லாளிகளானதும் என்னெண்ணத்தை உங்களி லெவரேனும் 'முடிக்கவல்லேன்' என்று சொல்லத் துணிவீர்களா? அஃது உங்கள் விற்றிறத்தினாலேயே முடிக்கக்கூடியதுதான்'' என்று துரோணர் சொன்னதும மற்றவர் மௌனஞ் சாதிக்கவும ஆர்ச்சுனனொருவனே "உமது எண்ணம எதுவேயாயினும் அதை முடித்துவிட்டுத்தான மற்றெககாரியத்தையும் கவனிப்பேன்'' என்றான். அர்ச்சுனன் ஆசானிடம் கலவி பயின்ற காலமெல்லாம் அவரதாணையைச் சிரமேற் கொண்டு சிறிதேனுந் தாமதமின்றி நடந்து வருவானாயினன். இவனுடைய விசுவாசத்திற் கிணங்கத் துரோணரும் இவனிடத்தில் அதிக பிரீதியும் அன்பும ஆாவமும வைத்திருந்தார். ஒருநாளிரவில் அர்ச்சுனன் அன்னம் மருந்திக்கொண்டிருக்கையில் தீபம் திடீரென்று அவிந்து போய்விட்டது. ஆயினும் அவன் சாப்பிடுவதை நிறுத்தவில்லை. இருட்டாயிருந்தும பழக்கத்தினாற் கையானது அன்னத்தை அள்ளி வாய்க்குக்கொண்டு கொடுத்து ுள்வதைக்கண்டு,

*"சித்திரமுங் கைப்பழக்கஞ் செந்தமிழு நாப்பழக்கம்
வைத்ததொரு கல்வி மனப்பழக்க—நித்த
நடையு நடைப்பழக்க நட்புந் தயையுங்
கொடையும் பிறவிக் குணம்."

என்றபடி சாதகமே இதற்குக் காரணமெனத் தெரிந்து, பழக்கத்தினாற் பற்பலபயனையும் அடையலா

* அவ்வையார் தனிப்பாடல்.

மென்று இரவிலும் தான் வில்வித்தை பயில ஆரம்பித்தான். இவனுடைய விடாமுயற்சியையும் புத்திக் கூர்மையையும் ஆசிரியர் கண்டு மிகவும் வியந்தார்.

எவ்வளவு அற்பமான விஷயமாயிருந்தாலும் அதனையும் அர்ச்சுனனைப்போல் ஒருவன் கவனிப்பானாயின் அவன் பயனுடையனா இல்லையென்பதையும் தேர்ந்து தெளிதல்கூடும்.

துரோணரிடம யுககாலத்தில் வில்வித்தை கற்கும பொருட்டு அவரைத்தேடி வந்தவர்கள் அநேகர். **ஏகலைவன்** என்பவன் அவர்களி லொருவன். இவன் நிஷதர்களுடைய அரசனது புத்திரன். நிஷதர் ஒரு வகை வேடுவ ஜாதியார். இவன் அவரிடம் வந்து தான் அவர்க்குச சீடனாக வேண்டுமென்று கேட்டும், துரோணர் "அஸ்திர சஸ்திர அப்பியாசத்தில் மந்திரமும் கலந்திருக்கிறபடியால அவற்றைத் தக்க வருணத்திற் பிறந்தோர்க்கு மாத்திரந்தான் உபதேசிக்கக்கூடும். உன்னைப்போன்ற இழிகுலத்தினர்க்கு உபதேசித்தல் கூடாதே; ஆகையால் உனக்கு உபதேசஞ்செய்தல் முடியாது" என்று சொல்லி அவனை அனுப்பிவிட்டார். ஏகலைவன் சிறிதேனும் கோபங் கொள்ளாது அவரது பாததாமரையைத் தொட்டுக் கண்ணி லொற்றிக்கொண்டு வந்தவழியே திரும்பித் தன்னாடு சென்றான், பிறகு இவனோர் சிலம்பக்கூடம் சன்னாகஞ்செய்து துரோணரைப்போன்ற ஓருருவமைத்து அவ்வுருவையே தனக்குக் குருவாகக் கொண்டு குருபுத்திரர் கற்பதற்குமேலும் தான் கொ

ஞ்சக் காலத்திற்குட் கற்றறிந்துவிட்டான். இதற்கு யாது காரணம்? தான் குருவினிடத்துவைத்த பக்தியும், தாமெடுத்துக்கொண்ட காரியத்தை எவ்விதத்தினும் முடித்தலே கடன் எனக்கொண்ட 'தனது' ஊக்கமும் விடாமுயற்சியுமல்லவா அதிக சீக்கிரத்திற் பஞ்சவரைக்காட்டினும் இவனை மிஞ்சினவனுக்கியது? ஊக்கமும், விடாமுயற்சியும் ஒருவனெக்காலத்தும தான் அணியும் ஆபரணமாகக் கொள்ள வேண்டாமா? குருபுத்திரர்கள் வேட்டையாடக் காட்டுக்குச் செல்கையில அர்ச்சுனனுடைய சுணங்கன் ஏகலைவனுடைய சிலம்பக்கூடத்துட்சென்று துரோண பிம்பத்தை அசுத்தஞ்செய்ய ஆரம்பிக்கவே ஏகலைவன் கோபங்கொண்டு வில்லெடுத்துக் கணை தொடுத்து விட்டான். அஃது அந்த நாயின் தேகத்தில் நாற்புறத்தும் பாய்ந்து வாய் வழியாய் வந்து விட்டது. அதைப் பொறுக்கமாட்டாது அந்த நாய் குலைத்துக்கொண்டே தன் எஜமானனைத் தேடித் திரும்பிச்சென்றது. அவன் அதனைச் சற்றுற்று நோக்கி 'இதன்பேரில் இவ்வற்புதமான பாணப்பிரயோகம் செய்யப்பட்டிருக்கிறதே! இது தமக்கும் எனக்கும் தான் தெரியுமென்று துரோணர் சொன்னரே. அவரிங்கு நம்முடன் வரவில்லையே. வந்தாலும் இதன் பேரில் அப்பாணத்தை எய்யமாட்டாரே. இதை யவரிடம் கற்றறிந்தவன் வேறொருவன் இங்கு இருக்கத்தான் வேண்டும்' என்று நிர்மானித்து, சுணங்கன் போனவழியே தானும் செல்ல, அஃது ஏகலைவனுடைய சிலம்பக் கூடத்தைச் சேர்ந்தது.

அதிலிருந்த ஏகலைவன் வெளியில் வந்துபார்க்க அர்ச்சுனனும் அவனைச் சேர்ந்தவர்களும் வரக்கண்டு எதிர்கொண்டு அழைத்துவந்து தக்க உபசாரம் செய்து வித்தியாப்பியாசத்தைப்பற்றி வினவும் போது, சுணங்கன் மீது பாணமெய்ததற்குக் காரணமும் அறிந்துகொண்டான் அருச்சுனன். அவனுக்குக் குரு துரோணரென்பதும் அவன் சொல்லக்கேட்டு, அவனிடம் செலவு பெற்றுக்கொண்டு எல்லாரும் அரண்மனைக்குத் திரும்பிச்சென்றார்கள். அன்றுமுதல் அர்ச்சுனன் சற்று ஏக்கமுற்றிருக்கிறதைத் துரோணர் அவனது முகக்குறியாலறிந்து அவனை யழைத்து அதற்கு யாதுகாரணமென்று வினவ, அவன் "தாங்கள் எனக்கு மாத்திரமே கற்பித்தேனென்ற ஒரு விசேஷ பாணப்பிரயோகம் ஒரு வேடன் தங்களிடங் கற்று அதைப்பிரயோகித்து எனது சுணங்கனைக்கொன்றான்" என்றனன். அதற்கவர் "அந்தச் சிஷனை எனக்குக் காட்டுவாயாக. யான் கற்றுக் கொடுக்கவேயில்லை" என்று உறுதியாய்ச் சொல்லலும், அவரையிட்டுக்கொண்டு அர்ச்சுனன் ஏகலைவனுடைய சிலம்பக்கூடம் சென்றான். துரோணர் வருகிறாரென்பதை ஏகலைவன் உணர்ந்து எதிர்சென்று வேண்டிய உபசரணைசெய்து அழைத்துவந்து அவரை யோராசனத்திருத்தித் தான் கைகட்டி வாய் புதைத்து அவர் முன் நின்றான். அவர் அவனை நோக்கி "நீ இப்பாணப்பிரயோகத்தை எப்படிக்கற்றாய் ?" என்றார். அவன் எதிரிலிருந்த பிம்பத்தைச் சுட்டிக்காட்டித் "தங்களுருவாய இச்சிலையினின்றும் கற்றேன்" என்று

சொல்லலும், இவன் குருவினிடம் வைத்திருந்த விசுவாசத்தையும் பக்தியையும் கண்டு ஆச்சரியமடைந்து அர்ச்சுனனுக்கும் அதைக்காண்பித்து நின்றார். அர்ச்சுனனும் வியந்து வெட்கித் தலைகுனிந்தான். பக்தியிற்சிறந்த சிடனாகிய ஏகலைவன் குருவைப்பார்த்துத் "தங்கள் தயவினால் இவ்வளவு விருத்தியடைந்தேன். குருதக்ஷிணை கொடுக்க விரும்புகின்றேன். என்னுயிரன்றது எதுவாயினும் தங்கள் விருப்பத்திற்கியையக் கொடுக்கின்றேன்" என்றான். அவர் "மற்றொன்றும் வேண்டாம், உன் வலக்கைப் பெருவிரலைக் காணிக்கையாய்த்தா" என்றார். அவன் சற்றேனும் வருத்தமென்பதின்றி அகமலர்ச்சி முகமலர்ச்சியோடு அதைத்தறித்துக் குருவிற்கு முன்பாக வைத்தான். குரு இவனுடைய பக்தி விசேஷத்திற்கு மிகவும் வியந்து "இனி ஏகவல்லிய னென்பது உன் பெயராகட்டும்; உன்னுடைய பக்திக்கும், ஊக்கத்திற்கும், விடாமுயற்சிக்கும் யாம் மிக வியந்தனம்" என்று சொல்லி விடைபெற்று அர்ச்சுனனும் துரோணரும் திரும்பி அரண்மனை அடைந்தார்கள்.

இவ்விதமாக வலக்கைப் பெருவிரலீந்தான் ஏகலைவன். வலக்கைப் பெருவிரலில்லாவிடில் ஒருவன் வில்லாளியாயிருந்து யாது பிரயோஜனம்? பார்ப்பவர்களுக்குத் துரோணர் செய்த காரியம் மிக்க குரூரமாகத் தோன்றுதா? ஆம். தோன்றும். ஆயினும் அவர் செய்தது நியாயந்தான். எப்படி? ஒருவன் தன் முற்பிறப்பில் தனக்கிருந்த நல்லெண்ணம் நற்செய்கை இவற்றிற்குத்தக்கவாறு இந்த ஜன்மத்தில் தக்க

இடத்தில் தக்க குண ரூப லாவண்யத்தோடு பிறக்கின்றான். தீய எண்ணமும் தீச்செயலுமுடையவனும் அதற்குத்தக்கபடி பிறக்கின்றான். ஒருவன் தேகமும் அவன் பிறந்திருக்கும் வர்ணாச்சிரமமும் தன் பூர்வ கர்மத்திற்குத் தக்கபடி தாம் இருக்கும்; இவன் இச் சாதியிற் பிறந்து தனக்குரியன வல்லாதனவற்றை அடைய விரும்புதல் கூடாதாகலின் அவனுக்கு இக் கதிவரும்படி யாயிற்று. அப்பலனை அடைவிப்பதற்குத் துரோணர் ஒரு காரணமாக இருந்தார். இஃது இவனுடைய கர்மபலன். இவன் தன்கருமசேஷம் க்ஷயமாகிற வரையிற் பொறுத்திருந்தால் எல்லா நன்மையுந்தாமேவந்து இவனைச்சேரும். இவனுக்கு இவ்விஷயத்திற் பொறுமையில்லை. தன்வருணத்திற்குத் தகாதென் றேற்பட்டிருந்தனவற்றை யடையத் தன் கையைக்கொண்டு தான் முயற்சிசெய்தமையால் தன்கைபோகும்படி நேரிட்டது. ஆயினும் அவனுடைய குருவிசுவாசமும், பொறுமையும், ஊக்கமும், விடாமுயற்சியும், வேண்டிய வேலை செய்து கொண்டிருந்தன. இவையெல்லாம் இனி இப்பிறப்பினும் பலனடையலாம் என்பதைத் தெற்றென விளக்கின. மறுஜன்மத்தி லடையும் பலனுக்கோ ஓரளவில்லை.

ஒருநாள் துரோணர் தம்மாணவர்களைப் பரீக்ஷிக்க எண்ணங் கொண்டு ஒருபக்ஷி பிம்பத்தை ஒரு மரக்கிளையில் வைத்துத் தம்மாணவர்களை அழைத்து "அதனை ஓரம்பெய்து கொல்லுங்கள், பார்ப்போ"மென்றார். முதலில் தர்மர் தம் கையில் வில்லு மம்பும் எடுத்து நின்றார். துரோணர் அவருக்கு அப்பக்ஷி

யைக்காட்டி "அப்பா தர்மா, உன் கண்ணுக்குப் புலப்படுகிறது எது? பக்ஷியா? மரமா? நாறு? அல்லது உன் சகோதரர்களா?" என்றார். அதற்கவர் "எல்லாரும் என்கண்ணுக்குப் புலப்படுகிறார்கள்" என்றார். "அப்பா தர்மா, ஒதுங்கினில், குறியையுன்னால் அடிக்க முடியாது" என்றார் துரோணர். அர்ச்சுனன் தவிர மற்றைச் சகோதரர்களும் தர்மரைப் போன்று ஒதுக்கிவிடப்பட்டார்கள். அதற்குப்பிறகு அர்ச்சுனன் வில்லும் கையுமாக வந்தெதிர் நின்றான். அவனையும் மற்றவர்களைக் கேட்ட கேள்வியை மறுபடியுங் கேட்டார். இவன் "பக்ஷி மாத்திரம் என் கண்ணுக்குப் புலப்படுகிறதே யன்றி, மரமும் தெரியவில்லை, தாங்களும் தெரியவில்லை" என்றான். "உனக்குப் பக்ஷிமாத்திரம் தெரியும் பக்ஷத்தில் அஃது எப்படியிருக்கிறது, எனக்குக்கொஞ்சம் விளங்கச்சொல்" என்றார் துரோணர். விஷயங்களை எப்போதும் உற்றுநோக்கும் அர்ச்சுனன் "பக்ஷியின் சிரசுமாத்திரம் தெரிகிறதேயன்றி அதனுடைய மற்ற அவயவங்களுள் யாதேனும் தெரியவில்லையே" யென்றான். துரோணர் அர்ச்சுனனுடைய திறமையைக் கண்டு வியந்து அதிகவானந்தமடைந்து "அப்பா அர்ச்சுனா, எடுவில்லை, விடுகணையை" என்றார்.

இதில் அர்ச்சுனன் காட்டிய திறமை என்ன? உற்று நோக்குந்திறமை.* அஃது ஒவ்வொருவர்க்குமிருக்க வேண்டியது அதிக ஆவசியகமானது. ஒன்றை இலக்குவைத்துப் பார்க்கும்போது மற்ற ஐந்

* Close attention, Concentration.

தாறு விஷயங்கள் அதே காலத்தில் நமது கண்ணுக்குப் புலப்படுமானால் நாம் வைத்த குறியை எப்படி அடிக்கக்கூடும்? எதை முதலிற்கவனிக்க ஆரம்பிக்கிறோமோ அதுமுடியும்வரையில்நமதுகவனம் வேறொரிடத்திலும் செல்லக்கூடாது. சென்றால் முதலுக்கே மோசந்தான். இது விஷயத்தில் தர்மர் முதலியவரைப் போன்றிராது அர்ச்சுனனைப் போன்றிருத்தல் வேண்டும். இதனை இளஞ்சிறுரேயன்றி வயதின் முதிர்ந்தோரும் அதிகமாய்க் கவனித்து நாடோறும் நடக்கவேண்டுவது அவசியமன்றோ ?

அர்ச்சுனன் முதலியவர்களுடைய ஆயுதப்பயிற்சி முதலியன முடிவு பெற்றதும் இவற்றை அரங்கேற்ற ஒரு நாள் ஏற்படுத்தினார்கள். அற்றைத்தினம் அந்நகரத்தாரும் அதைச்சூழ்ந்த நகரிலுள்ளவர்களும் அரண்மனையிலுள்ளார் அனைவரும் ஒருங்கே அரங்கேற்றுமிடத்தில் வந்துகூடினார்கள். அதற்குத்தக்க ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருந்தன. குரு புத்திரர்களுள் ஒவ்வொருவரும் தம் தம் திறத்தைக் காட்டினார்கள். அர்ச்சுனன் எல்லாரினும் மிக்க திறமையுடையவனாய்த் தோன்றினான். எல்லாப் பக்கங்களிலும் ஓடும்படி சூத்திரமமைத்த ஓரிரும்புப் பன்றி ஒன்றன் மீது ஓரம்பெய்து வீழ்த்தியது அவ்விடத்திற் காட்டிய அநேக விநோதக் காட்சிகளிலொன்று. ஏககாலத்தில் தன் வில்லினின்றும் அர்ச்சுனன் ஐந்து அம்பு அப்பன்றியின் மீது எய்தான். அவையனைத்தும் ஒரேகாலத்து அதன் வாயினுழைந்து ஐந்துவழியாய் வெளித்தோன்றின. இவையெல்

லாம் முடிவேறுந் தருணத்தில் அக்குழாத்தில் ஒரு பெரிய சத்தங்கேட்டு எல்லாரும் திடுக்கிட்டு நாற்புற மும் பார்த்தார்கள். அப்போது ஜனங்களை நீக்கிக் கொண்டுவந்துதோன்றினன் ஒரு சிறுவன்; ஆயினும் வீரத்திற்பெரியன். கர்ணன் என்னும் பெயரினன். அவனும் துரோணருடைய மாணுக்கர்களி லொருவ ன். அர்ச்சுனனுடைய திறமையைப் பார்த்துத் திரா ப்பொறாமையுடையவன். அர்ச்சுனன் காண்பித்த எல்லா விநோத வேடிக்கைகளையும் தானும் ஒன்றும் விடாமற் காண்பித்து அரங்கிலுள்ளோர் அனைவரும் ஆநந்தமடையுமாறு செய்தனன். பிறகு உடனே அர்ச்சுனனுடன் மல்லுக்கு நின்றான். அப்போது வழக்கப்பிரகாரம் இருவரி லொருவனாகிய அர்சசு னன் பேரும் குலமும் எடுத்துரைத்தார் கிருபாசாரி யர். மற்றவனுடைய குலமும் கோத்திரமும் விசாரித் தார்கள். கர்ணன் தன் தாய்தந்தையர் இன்னாரெனத் தெரியாததனால் மயங்கினான். வெட்கத்தினால் தேகம் வெளுத்தான். இதை மற்றவர்கள் அறியாததற்கு முன் துரியோதனன் சரேலென அவ்விடம் வந்து "அர்ச்சுனனுடன் அரசனாயிருப்பவன் தான் மல்லு க்கு வரலாமென நீங்களெல்லோரும் யோசிக்கும் பக்ஷத்திற் கர்ணனையும் அரசனாக்கிவிடுகின்றேன்" என்று சொல்லி உடனே அவனை அங்கதேசத்திற்கு அரசனாக்கினான். அவனும் இந்நன்றி யறிகுறியாய் "நம்முடைய நட்பு நமன் ஒருவன்தவிர மற்றெவ ராலும், மற்றெதனாலும் பிரிக்க முடியாதொழிக" என்று கூறிச் சபதம் செய்துகொண்டான். அப்

போது தேர்ப்பாகன் ஒருவன், வயதின் முதியோன், அவன் தட்டித்தடுமாறி வந்து தானெடுத்து வளர்த்த பிள்ளையின் திறத்தைக்கண்டு தான்றான் தகப்பனென எல்லாருக்கும் முன்வந்து நின்றான். கன்னனும் அவன் தாள்பணிந்து அர்ச்சுனனுக்கு முன்வந்து நின்றான். அப்போது வீமன் கோபத்துடன் கொதித்தெழுந்து கன்னனைக் தேர்ப்பாகன் பிள்ளையென விகழ்ந்து அவன் அர்சசுனனுடன் மல்லுக்கு நிற்றல் தகாதென்றுரைத்த மாத்திரத்தில் துரியோதனன் தன் துணைவன் கர்ணன் பேரைக் காக்கும் பொருட்டுத் திடீரென்று குதித்தெழுந்து "கர்ணனை அரசனாக்கியும் இப்படி இகழ்வது அதர்மமன்றோ?" என்று அங்குநின்றவர்களை உரத்த தொனியுடன் வினவ ஆரம்பிக்கும்போது கதிரவனும் மேற்குச் சமுத்திரத்து மூழ்கினான். வந்தவர்களும் வந்த வழியே பிரிந்தேகினார்கள். வில்வித்தையில் அர்ச்சுனனைப்பார்க்கிலும் கர்ணன் சிறந்தவனோ? அல்லது கர்ணனைப் பார்க்கிலும் அர்ச்சுனன்றான் சிறந்தவனோ? என்னும் ஐயம் அப்போதுந் தீரவில்லை. இன்றளவும் அதே நிலைமையிற்றானிருக்கிறது.

இவ்வாறு குரு புத்திரர்களுடைய அரங்கேற்றம் முடிந்ததும், துரோணர் தம்மாணவர்களாய அவர்களை யழைத்து "எனக்கு நீங்கள் குருதக்ஷிணை கொடுக்கவேண்டாமா? நீங்கள் (பாஞ்சால தேசாதிபதி தனக்கிழைத்த தீச்செயலைக்கூறிப்) பாஞ்சாலதேசத்தின் மீது படையெடுத்துச் சென்று, அதற்கரசனாகிய துருபதனைத் தேர்க்காலிற் பிணித்து, அவனுயிர்க்கொரு

குறையும் நேரிடச்செய்யாது என்னிடம் கொண்டு வந்து விடுங்கள்" என்று சொன்னதும், கௌரவர்களும் பாண்டவர்களும் உடனே படையெடுத்துச் சென்று பாஞ்சாலன் நகரை நாற்புறமும் வளைத்துக் கொண்டார்கள். துருபதன் இதைக் கேள்வியுற்று யுத்தசன்னத்தனாய்த் துரியோதனனாதியர் சூழ்ந்திருந்த பக்கஞ்சென்று அவரனைவரையும் வென்றிட்டு ஓடும்படிசெய்து பாண்டவரிருந்த பக்கஞ்சென்றான். துருபதனுடைய தேர்வீரர், யானைவீரர், குதிரை வீரர், அனைவரையும் பாண்டவரைவருஞ்சேர்ந்து பதாதிகளாக்கி அவர்களையும் ஏனாதிகளாக்கிப் பறக்கடித்ததும், அரசனை பாண்டவனைவராகிய புலிகளின் வாயிலகப்பட்டுக் கொண்ட ஆட்டைப்போன்று அலமந்து நிற்க அர்ச்சுனன் அவனைத் தேர்க்காலிற் கட்டித் தனது ஆசிரியர் துரோணர் முன்னம் கொணர்ந்து நிறுத்தினான்.

துரோணரோ கோப மென்பது சிறிதுமின்றி அகமலர்ந்து அவனைப்பார்த்து, இனிய வார்த்தை சொல்லத் தொடங்கினார். "உன்னுயிருக்குப் பயம் வேண்டாம். ஆயினும் அரசு உன் பகைஞனாகிய என்கையிற்றா னிருக்கின்றது. இப்போதாவது முன்னிருந்த சிநேகத்தை நினைந்து அதை மறுபடி விருத்திசெய்ய எண்ணமுண்டோ உனக்கு? உன் உயிருக்கு ஹானிவாராது. பயம்வேண்டாம். பிராமணருக்குரிய முக்கியகுணம் மற்றவர் குற்றங்களை க்ஷமித்து அவரைக்காத்தலே. என் தகப்பனார் ஆச்சிரமத்தில் நாம் பற்பல வித்தை கற்று அன்று பிரிந்தது முதல்

நாளுக்கு நாள் நாம் வளருவதுபோல உன்னிடம் எனக்கிருந்த நேசமும் அன்பும் வளர்ந்து கொண்டே வந்தன. ஓ க்ஷத்திரிய ஸிம்மமே! யான் வேண்டுவது உன்னுடைய சிநேகந்தான். வேறொன்றும் வேண்டாம். நீஇப்போது தோற்றுப்போனதனால் உன்னுடைய இராஜ்ஜிய முழுதும் என்னுடையதே. எனக்குவந்த குருதக்ஷிணை இது. யான் விரும்பின் முழுதும் உனக்குத் திரும்பவுங் கொடுத்துவிடலாம். ஆயினும் உன் சொல்லே உனக்குக் கூற்றாய் நிற்கின்றது. 'அரசனல்லாதவன் எப்படி அரசனுக்குச் சிநேகனெனக் கூறிக்கொண்டு வரலாம்!' என்று என்னை இகழ்ந்தா யல்லையோ? நம்மிருவருடைய சிநேகம் பாலியசிநேக மாயிற்றே; அஃது என்றைக்கும் நிலை பெற்றிருக்க வேண்டாமா? மேலும் நாம் வாசிக்கும் போதே எனக்குப் பாதிராஜ்ஜியம் கொடுப்பதாக மனமகிழ்வுடன் வாக்குத்தத்தம் செய்தாயல்லையோ? பிறகு என்னுடன் பேசுவதற்கும் நாணினையன்றோ? ஆகையினாலே நான் பாதி இராஜ்ஜியத்தை வைத்துக் கொள்கிறேன்.

*" அன்றெனக்கு நீயி சைந்த வவனி பாதி யமையுமற்
றின்றுனக்கு நின்றபாதி யான்வ ரைந்து தருகுவன்
குன்றெனக்கு விந்தி லங்கு கொற்ற வாகு வீரனே
யுன்றனக்கு வேண்டு மென்ன வுயிரும் வாழ்வு முதவினே [ன்."

உனக்குப் பாதி கொடுக்கின்றேன். வளப்பம் பொருந்தியதும் பாகீரதியின் தென்புற முள்ளதுமான தேசத்திற் கெல்லாம் நீ அரசனாயிரு. அதற்கு வடக்கி

* வில்லிபுத்தூரார் பாரதம்.

லுள்ள இராஜ்ஜியமெல்லாம் என்னுடையதாயிருக் கட்டும். நான் பேருக்குமாத்திரம் அரசனாயிருந்தாற் போதும். உன் சிநேகந்தான் வேண்டும். உன்னு டைய விருப்பம் யாது ?" என்னலும் அரசன் தலை வணங்கி உயிர்நின்றதே போதுமெனத் திரும்பிப் போனன். தன்னை யவமதித்தவனாகிய துருபதனுக் குத் தக்க தண்டனை செய்தனுப்பினார் துரோண ரும். *

தன்னெஞ்சே தன்னைச்சுட்டும், துருபதன் தன் னார் சேர்ந்து தன்னைத் தேர்க்காலிற் கட்டிக்கொண் டுபோன விஜயன் கழுத்தைக்கட்ட ஒரு கன்னிகையும் தன்னை அவமானம் செய்த துரோணர் கழுத்தை வெட்ட ஒரு வீரனும் தனக்குப் பிறக்கவேண்டுமென் னுமவாவுடையவனாய் ஆரியர்களை அழைத்து விசா ரித்துப் புத்திர காமேட்டியாகஞ் செய்வித்தான். அவ் வேள்வியினின்றும் தான் விரும்பிய புத்திரனையும் புத்திரியையும் பெற்றான். திஷ்டத்துய்மன், திரௌ பதை என்பன முறையே அவர்தம் பெயர். துரோ ணரைப் பகிஷ்ந்தாநாட் பாரதயுத்தத்திற் பூர்த்தி செய்தவன் இவன். திரௌபதையோ அசுரர் குல மழியச் சீதை தோன்றியவாறு அரசர்குலம் முடியத் தான்தோன்றித் தன்குழுவும் அவர்தம் குலமும் ஒரு ங்கே முடித்தவள்.



* வியாசபாரதம், ஆதிபருவம் § 135 - 140.

# அத்தியாயம்.—III.

## பாண்டவர்களுக்குவந்த ஆபத்துக்களும், அவற்றின் நிவாரணமும், அவர்தம் ஜயமும். *

பாண்டவரும் துரியோதனனாதியரும் அஸ்திர சஸ்திரப்பயிற்சியில் மிக்க தேர்ச்சியடைந்து கொஞ்ச நாளைக்குள் மகா வீரர்களானார்கள். அவர் தம் இளமைப்பருவமும் எளிதிற் சென்றது. தக்க காலத்தில் திருதராஷ்டிரர் தமது தம்பியின் தநயனாகிய தர்மருக்கு, தைரியம், மனவுறுதி, பொறுமை, ஈகை, கபடமின்மை என்னுமித்தகைய நற்குணங்கள் பற்பல அதிகமாய்ப் பொருந்தியிருந்தமையினாலும், அரசிளங் குமரர்க்கெல்லாம் இவற்றினும் மற்றெவற்றினும் மேம்பாடுடைமை பற்றியும் இவரே தமக்குப்பின் னரசுக்குரிய ரெனவிளம்பரஞ் செய்தார். இவ்வாறு தருமருக்குத்தான் பட்டமென நிச்சயமானதும் தம்முடைய நற்குண நன்னடைகளினாலும், ராஜரீகம் நடத்துந் திறமையினாலும் தம் 'தந்தையினும் மிக்கோ' னெனப் பல்லோராலும் கொண்டாடும்படியாய் விளங்கினார் தருமர். அவருடைய சகோதர ரனைவரும் பற்பல திக்கிலும் படையெடுத்துச் சென்று ஜெயங்கொண்டு பல அரசர்களிடத்தும் திறை கொண்டு மீண்டனர். இவர்தம் இராஜ்ஜியமும் முன்னிலு மிப்போது அதிக விஸ்தீரண மடைந்து விட்டது. பாண்டவர்க

* ஆதிபருவத்தின் பிற்பகுதி.

ளுடைய வீரத்தன்மையும் அவர்கள் நாடோறும் பெறும்ஜெயமும் கேள்வியுற்ற நாள்முதல் திருதராஷ்டிரன் பொறாமை மேற்கொண்டு இரவிலும் தூங்காமல் இதே சிந்தனையா யிருந்தான். * இவனுக்கு அழுக்காறு எவ்வளவு அதிகரித்துக் கொண்டுவந்ததோ அதனினும் அதிகமாய் அதிகரித்தன பாண்டவர்களுடைய செல்வமும், புகழும். இவர்களிடத்தில் ஜனங்களுக்கிருந்த விருப்பமும் விநயமும் அப்படியே யதிகரித்தன. ஐவர் தமக்குள் ஒற்றுமையும் அன்பும் ஆர்வமும் அதிகமாயிருந்தன. கண்ணில்லாத தனுவிதைக் காணப்பெறாது கேட்கப்பெற்று, புறக்கண்ணில்லாததோடு அகக்கண்ணு மில்லாதவனாய் அழுக்காறுடையவனாய்த் தன் பிள்ளைகள் மாத்திரம் இச்சூரியர்முன் மின்மினிபோலத் தோன்றுகின்றார்களே என்னும் ஏக்கங்கொண்டு தன் துன்மந்திரிகளில் ஒருவனாய **கணிகன்** என்பவனை அழைத்து அவனுடன் இதைப்பற்றி ஆலோசிப்பானாயினான். அவனும் இதைக்குறித்து ஒருகதை கண்ணிலானுக்குச் சொல்லத் தொடங்கினான் :—"அரசர்க்கரசே, ஒரு காலத்து ஒரு காட்டில் ஒரு நரி வாசஞ்செய்துகொண்டிருந்தது. இதற்குச சிநேகிதர்களோ கிரியும் எலியும் ஓநாயும் புலியும். ஒரு நாள் ஒரு மான் அக்காட்டில் மேய்ந்து இரை வேண்டிய அளவு கொண்டு ஒரு மரநீழலிற் படுத்துறங்கிற்று. அதைப்பிடிக்கும் நிமித்தம் அந்தநரி எலியை அழைத்து 'நீ அதன் காலைக்கடி' என்றது. மற்றொரு சிநேகிதனாகிய புலியை அழை

---

*வியாசபாரதம், ஆதிபருவம். § 141.

ந்து ‘நீ அந்த மான் நாக்கத்திலின்றுந் துள்ளிக் குதித்து ஓடும்போது ஒரே பாய்ச்சலாய் அதன் மீது பாய்ந்து அதனைக்கொல்’ என்றது. மான் மாமிசமும் இந்த யுக்தியினாற் போஜனத்திற்குச் சித்தமாய் விட்டது. நரி தன் சினேகித ரெல்லாரையு மழைத்து ‘ஸ்நானம் செய்துவிட்டு வாருங்கள். அதுவரையில் இதை நான் பாதுகாத்துக்கொண் டிருக்கின்றேன்’ என்றது. இதை நம்பி எல்லாம் ஸ்நானத்திற்குப்போய் விட்டன. இதுவோ உளவறிந்த நரி. புலியானது ஸ்நானத்தைமுடித்துக்கொண்டு முன்பு வந்தது. வந்த வுடன் நரி அதை நோக்கிப் ‘புலியண்ணா, எலியா னது தன் சாதுரியத்தினால்தான் இந்த ஆகார முனக்குக் கிடைத்ததெனப் பெருமைபாராட்டிக் கொள்கின் றது’ என்றது. இது சொல்வதற்குள் தன்னுடைய பராக்கிரமத்திற்கு இஃது ஏற்ற தன்றென்று மெண் ணங்கொண்டு ‘இவ்விரை எனக்குவேண்டாம்’ என்று தனக்கு வேறே இரைதேடப் போய்விட்டது. பிறகு எலிவந்தது. அதனைநோக்கி ‘எலித்தம்பி, இங்கே கீரிப் பங்காளியிருக்கிறான். உன்னை உடனேகொன்று பங்கிட்டுக் கொள்ளுவான்’ என்று சொன்னதும் அது பயந்து ஓட்டம் எடுத்தது. ஓநாயும் தன்னிடத் துப் புலி கோபத்துட னிருக்கிறதென்று நரிசொல் லக்கேட்டு நடுக்கங்கொண்டு வந்த வழியே நடந்து விட்டது. கீரி இரையை நாடிவந்ததும், நரி அதைப் பார்த்து ‘மற்ற மூவருடனும் போர்புரிந்து வென்று அவர்கள் வெந்நிடச் செய்தேன். நீஎனக்கெவ்வளவு?’ என்று சொன்னதும் அது பயந்து ஓடிப் பதுங்கிவிட்

டது. பிறகு நரியோ சுவஸ்தமாய் மானை ருசிபார்த்
துத் தின்றுகொண்டிருந்தது. இதைப்போன்று அர
சர்களும் தங்கள் பகைவர்களைச் சமயம் பார்த்துச்சாம
பேத தானதண்ட மென்னும் சதுர்வித வுபாயத்தால்
வென்று தாம் ஜயமடைதல் வேண்டும்'' என்று
சொல்லி, இதன் கருத்துக்கிணைய நடத்தல் நலமென்
றான் கணிகன்.

ஜனங்கள் தருமனைமிகவும் புகழ்ந்து அவர்தாம்
தங்களுக்கு அரசராக வேண்டு மென்பதைப் பலவி
தத்திலுஞ் செவியுற்றுத் துரியோதனன் மிக்க விய
சனமுற்று, தன் தந்தையிடஞ் சென்று, ''தாங்
கள் தக்க காலத்திற் கவனியாவிடின் அரசுரிமை பா
ண்டு வமிசத்தினர்க்கே போய்விடும். ஆகையால் இப்
போது அவர்களுக்கு நல்ல வார்த்தை சொல்லித் தந்
திரமாக அவர்களை வாரணவதத்திற்குப் போம்படி
ஏற்பாடுசெய்து விடல்வேண்டும். எனக்குப் பட்ட
மான பிறகு வேண்டுமானால் ஐவரும் அவர்தம் தா
யும் இங்குத் திரும்பிவரலாம்'' என்றான். ஆயினும்
அரசனுக்கு அவர்களிடத்தில் யாதொரு குற்றமும்
புலப்படவில்லை. ஆகையால் வேறொரு விதமாய்த்
தன்னெண்ணத்தையும் தன் பிள்ளையினது வேண்டு
கோளையும் நிறைவேற்ற முயன்றான். அவர்களை
அரசன் அழைத்து வாரணவதத்திற் சிவபிரானுக்கு
நடக்கும் உற்சவத்திற்குப்போக விருப்பமிருந்தால்
அதற்குத்தக்க ஏற்பாடு செய்வதாய்ச் சொல்லவே
அவனது நோக்கமறிந்து ''போகமாட்டோம்'' என்
று சொல்வதற்கஞ்சிப் போவதாக ஐவரும் ஒத்துக்

கொண்டார்கள். துரியோதனன் தனது துன்மந்திரிக ளான துச்சாதனன், கர்ணன், சகுனி முதலியவர்க ளுடன் கலந்து யோசனை செய்து ஐவருடைய உயிர்க்கும் ஹானி வரும்படியான ஏற்பாடு செய்ய ஆரம் பித்தான்; புரோசனன் என்னுமொருவனுக்கு இலஞ் சங்கொடுத்து வாரணாவதத்தில் ஒரு பெரிய மாளி கை கட்டும்படி செய்தான். அம்மாளிகை முழுதும் சணல், குங்கிலியம், அரக்கு முதலிய திரவியங்களா லானது. பாண்டவர்களை அதிலிருக்கச்செய்து பிறகு யாருக்குந் தெரியாது நெருப்பு வைத்து ஐவரையும் கொன்று சாம்பராக்கிவிடலா மென்பது அவனுடைய எண்ணம்.

தருமர் அஸ்தினாபுரியைவிட்டு வாரணாவதத்திற் குத் தம் தம்பிமாருடனும் தாயாருடனும் புறப்பட்ட போது அவ்வூராரெல்லாம் இவரைப் பின்பற்றிச்செ ன்று தாங்களும் அவருடன் வந்துவிடுவதாக முறை யிட்டார்கள். தருமர் அவர்களை நோக்கி "உங்களு டைய அன்புக்கு மிக்க களிப்படைந்தோம். அர சனை நாம் நம் தந்தையாக எண்ணல் வேண்டும். அவ னிடத்துப் பக்தியும பயமும் விசுவாசமும் வைத்தல் வேண்டும. அவன் நமக்கெல்லாம் தலைவன். அவன் சொற்படி நடத்தலே நமமுடைய கடமை. அரசன் சொற்படி நான் இப்போது போகின்றேன். நீங்களு மிங்கேயே யிருந்து அவன் சொற்படி நடத்தல்வேண் டும். கூடிய சீக்கிரத்தில் நானும் திரும்பிவருவேன்" என்று அவர்களைத்தேற்றித் திருப்பி அனுப்பினார். தருமருடன் விதுரரும் கொஞ்சத்தூரம் பின்

சென்று புத்திமதிகளைச் சொல்லி மற்றவர்களுக்குத் தெரியாத ஒரு பாஷையில் துரியோதனனுடைய துர்க்குணத்தையும் துர்ச்செயலையும் எடுத்துக்காட்டித் தர்மரைக்குறித்து "ஏ தர்மா, எஃகினுற் செய்திராத ஆயுதத்தை நம்பாதே. ஒருவன் தீயினின்றும தப்பிக்கொள்ள வேண்டுமானல தன்னுடைய கிருகத்தைக் குள்ளநரியினது வீட்டைப் போன்று * செய்துகொள்ளல வேண்டும். நான்கு பக்கமும் சுற்றிப்பார்த்தால் வேண்டியவழிதெரியும்" என்னலும் தருமர் அவர்தம் குறிப்பைக் குறிப்பா யுணர்ந்துகொண்டார். புதிய நகரை அடைந்ததும் புரோசனன் தான் சமைத்துவைத்த மாளிகையிற் பாண்டவர்களைத தங்கும்படி வந்து வேண்டவே அவ்வேண்டுகோளுக்கிணங்கித் தருமர் அங்குத் தங்குவதாக ஒத்துக்கொண்டார். ஆயினும் சந்தேகம் அவரை விட்டு நீங்கவில்லை. விதுரர் மொழியும் அவர்தம் விழிக்கெதிரிலேயே நின்றுகொண்டிருந்தது. வெளிவழிகள் தெரியும் வண்ணம், தினமும வேட்டைக்குப் போம்போது இதைக் குறித்துக் காட்டிற் கேகும் வழிகளைக் கவனித்து வருவாராயினர். கடைசியில விதுரரிடமிருந்து வந்திருந்த ஒருவனைக்கொண்டு ஒரு பாதை தமது பள்ளியறைக்கும் வேட்டையாடிவரும் காட்டிற்குமாகச் செய்து கொண்டார்.

இவ்வரக்குமாளிகையில் ஒருவருஷ காலம் ஐவரும் குந்தியும் வசித்துக்கொண்டு வந்தார்கள்.

* அஃதாவது வெளிவருதற்கு அநேக வழி வைத்துக் கொள்ளல்.

தீ வைப்பதற்கு வழி பார்த்துக்கொண்டேயிருந்தான்
புரோசனனும். அவனிலும் சாமர்த்திய முடையனாய்
அவனுக்குமுன் சன்னத்தனாயிருந்தான் பீமன். ஒரு
நாள இராத்திரிக் குந்திதேவியானவள் அநேக பிரா
மணர்க்குப் போஜனம் செய்வித்தாள். அன்றிரவு
அவ்விடத்திற்கு ஒரு வேடுவச்சி தன்னைந்து பிள்ளைக
ளோடும் வந்து சேர்ந்தாள். விருந்துண்டு அயர்ந்து
அங்கேயே படுத்துறங்கிவிட்டார்கள் இவர்கள். இவர்
களிருந்த சங்கதி பீமனுக்குத் தெரியாது. புரோ
சன னுறங்கிக்கொண்டிருந்ததுதான் தெரியும். அவ
ன் வைக்க வெண்ணியிருந்த தீயைத் தானே வைத்து,
நான்கு பக்கமும் தீ மூண்டதைக் கண்ணுற்றுத் தன்
தமையன் தம்பிமார் தாய் என்னுமிவர்களைத் தன்
முதுகிலும் தோள்களிலுமாகக்கொண்டு சுரங்கவழி
யாய்க் காட்டையடைந்து, விதுரரிடமிருந்து வந்திரு
ந்த தூதனை அவ்விடங்கண்டு களிகூர்ந்து, அவன்
சித்தஞ்செய்து வைத்திருந்த படவிலேறிக் கங்கை
யைக்கடந்து தென்புறஞ்சென்று, மற்றவர்களைத் தூங்
கச் செய்து, தான் காவற்காத்துக்கொண்டிருந்தான்.
இதற்குள் அரக்குமாளிகை எரிகிறதைக்கண்ட அவ்
வூரார் அதனைச் சூழ்ந்து தீயை அவிக்க முயன்றும்
முடியவில்லை. மாறுநாட் காலையிற் சாம்பரான மாளி
கையின் மத்தியிற புரோசனனுடைய எலும்பும் மற்
றைவருடைய அஸ்தியும் அகப்பட்டன. அவ்வூரா
ரெல்லா மதிக துக்கத்துடன் அதைக்கொண்டு அஸ்
தினபுரிக்குச்சென்று அரசன் முன்பாக வைத்து
நேரிட்டதைச் சொல்லி அழ ஆரம்பித்து விட்டார்

கள். இவர்கள் இப்படிச் சொல்வதற்கு முன் அரசன்
அழுததற் களவில்லை. அவன் சுதன் துரியோதனனு
மப்படியே. அங்குள்ள மற்றனைவரும அழுவே விதுர
ரும் அழுதார். ஆயினும் அவருக்கு அவ்வளவு துக்க
மிலலை, அரக்குமாளிகை எரிந்ததன் உண்மை யறிந்
தவராதலின்.* குருட்டரசன் அழுததுதான் அதிக
விசித்திரமானது.

மேற் சொன்னவாறு கங்காநதியின் தென்கரை
யில அடர்ந்த காட்டிடத்துத் தர்மர் முதலாயினோர்
நித்திரை செய்துகொண்டிருக்க அவர்களைப் பீமன்
தன் கண்கொட்டாமற் காத்துக்கொண்டிருந்தான்.
இக்காட்டில் அநேகநாட செல்கையில் ஒரு நாளிரவு
இடும்பாசுரன் என்னுமோர் இராக்கதன் நரர்களுடைய
வாசனை வருவது கண்டு தன் தங்கையை யேவிப் பார்
த்துவரச் சொனனான். அவள் அங்குவந்து பலாட்
டியனாயும வச்சிர யாக்கையனாய் மிருந்த பீமனைக்
கண்டு அதிக மோகங்கொண்டாள். அவர்களைக் கொ
ல்லவேண்டுமென்னும் எண்ணம் அவளைவிட்டுப் பற
ந்துபோய்விட்டது. அவள் அவனுக்கு உடனே தன்
தமையனால்நேரிடப்போகிற தீங்கை எடுத்துரைத்துக்
கொண்டிருக்கையில இடும்பனென்னுந் தன் தமைய
னும் அவளைத்தேடி ஆங்குவந்து சேர்ந்து தங்கையைக்
கடிந்து, அவளையும் அவளது சிநேகிதர்களையும் கொல
வதாகத் தனனிராக்கதத்தொண்டையுடன் சொல்லிக்
கனைத்தான். அவளும் நடுக்கங்கொண்டாள். பீமன்
அவனைப்பார்த்துச் சிரித்து “அப்பா தம்பி! நில், நில்;

* வியாசபாரதம், ஆதிபருவம். § 113-152.

அங்கேயேநில். சுகமாய்த் தூங்குகிறவர்களை எழுப்பி விடாதே. வேண்டுமானால் என்னுடன் நில் யுத்தத்திற்கு" என்று சொல்லி ஒரு குதி குதித்து இராக்கதன் மீது பாய்ந்து தூங்குகிறவர்களுக்கு நித்திரை பங்கம் வாராது வெகுதூரத்தில் அரக்கனை இழுத்துக்கொண்டு போய்விட்டான். இருவரும் மல்லுக்கு ஆரம்பித்துவிட்டார்கள். பிறகு இருவர்களும் பக்கங்களிலிருந்த செடி கொடி, மரம் மட்டை, கல் கட்டி என்னு மிவைகளைவாரி ஒருவர்மே லொருவர் எறிந்து அகோரமாய்ச்சண்டை செய்கையில் தூரத்திற் சப்தம் கேட்டு விழித்துக்கொண்டு பீமனைக்காணாது அவனைக்கூவி அழைத்தார்கள். அதற்குள் அவனும சண்டையைச் சீக்கிரம் முடிக்கும் வண்ணம இடும்பனைத் தூக்கிப் பந்துபோல் ஆகாயத்தில் வீசி எறிந்தான். கீழே விழுந்ததும் அவன் முதுகு இரண்டாய்ப் பிளந்துபோய்விட்டது. சாதுக்களாகிய ஜனங்களுக்கு ஹிம்சை செய்துவந்த பலாட்டிய துஷ்டர்களை ஒழிக்கும் வண்ணம் பீமன் இதைப்போன்ற அநேக சண்டைகள் இதற்குப்பின்பும் செய்யவேண்டியிருந்தன. துஷ்டர்கள் பூமியி லதிகரித்து உபத்திரவஞ் செய்யுங்கால் அவர்களழிந்துபடும்வண்ணம் தேவர்கள் பீமனைப் போன்றவர்களை யனுப்புகின்றார்கள். சாதுக்களையும் பலமில்லாதவர்களையும் துஷ்டரினின்றுங் காப்பாற்றுவதுதான் பீமனுடைய முக்கியமான கடமை.

இடும்ப னிறந்ததும் அவன் தங்கையான இடும்பி இராக்கத ரூபத்தை யொழித்து அழகுவாய்ந்த

ஒரு மானுட ரூபங்கொண்டு பீமனுக்கு நாயகியாய் அவனுக்குக் **கடோத்கசன்** என்னும் ஒரு பிள்ளையைப் பெற்றாள். பாண்டவர்களுக்குப் பற்பல சமயங்களில் இவன் மிக்க உதவியாயினான். பிறகு சின்னாட் பாண்டவர்கள் அக்காட்டிற்றங்கி வேட்டையாடிச் சீவனம் செய்துகொண்டிருக்கையில **வேத வியாசர்** இவர்களிடம் வந்து இவர்களை **வேத்திரகீயம்** (மூந்நூற்று மங்கலம்) என்னும் சிற்றூர்க்குக் கொண்டுபோய் அவ்விடத்து ஓர் பிராமணர் வீட்டிலிருத்தித் தாம் திரும்பிவருமளவும் அங்கிருக்கலா மென்று சொல்லிப் போய்விட்டார்.

பாண்டவர்கள் சந்நியாசியைப்போன்று பிக்ஷையெடுத்துக்கொண்டு வந்து குந்தி கையிற் கொடுக்க அதை அவள் பாகம் செய்து இரண்டுகூறுக்கி ஒன்றைப பீமனும் மற்றொன்றைத் தானும் தன் மற்றைப் புத்திரர்களும உண்டு காலங்கழித்து வருவார்களாயினர். ஒருநாள் பீமன் தவிர மற்றவர்கள் வெளியே சென்றிருக்கையில், அவர்கள் தங்கியிருந்த வீட்டுப் பிராமணனும், அவன்றன் மனைவியும் மற்றிரண்டு குழந்தைகளும் துக்கமுற்று, பிராமணன், தன்னையாவது தன் மக்களி லொருவரையாவது அசுரனுக்குப் பலியிடல்வேண்டும் என்னலும், தன்மனைவி மீற்றவர்களுயிரோடிருக்கும் வண்ணம தன்னைப் பலியிடல் நலம் என்றனள். பெண் தான்போதல் நலமென்றனள். சிறிய ஆண்குழந்தையோ, அறிவதற்குப் போதுமான வயது ஆகாதபடியினால், அக்கொடிய அசுரனைத் தான் ஒரு புல்லினாற் கொல்வதாகச்

சாமர்த்தியமாய்ச் சொலவிற்று. அக்குழந்தையைக் கண்டு புன்னகைகொண்ட தாய்தந்தையரை நோக்கிக் குந்தியானவள் இதற்கு யாது காரணமென வினவலும், பிராமணன் குந்தி தேவியை நோக்கி “அம்மணி! இந்த ஊருக்கருகில் ஓர் அசுரனிருக்கின்றான். அவன்பெயர் **பகாசுரன்.** இவ்வூரில் முந்நூறுபிராமண வீடுகள் இருக்கின்றன. ஒவ்வொரு வீட்டாரும் வருஷத்திற் கொருமுறை ஒரு வண்டி சாதம், ஒருபிள்ளை, இரண்டு எருமைக்கடா அவனுக்குக்கொண்டுபோய்ப் பலியிடல்வேண்டும். அல்லாவிடில் இவ்வூர் அடியோடே போய்விடும். இப்படியாக வெகு நாள் நடந்துகொண்டு வருகின்றது. நாளை என்னுடையமுறை. அதற்காகத்தான் ஏக்கங் கொண்டிருக்கிறேன்” என்று சொன்னதைக் கேள்வியுற்று, குந்தி “என்னைந்து பிள்ளைகளிலொருவரை வண்டி சாதத்தையும் கொண்டுபோய்க் கொடுக்கச் சொல்லுகிறேன்” எனச் சொன்னாள். அதற்குப் பிராமணன், “என் வீட்டில் விருந்தினராய் வந்திருக்கிறவர்களை யிப்படிச் செய்யச் சொல்லும்படியான அவ்வளவு கொடியவனல்லேன் யான்” என்றான். “பிராமணர்கள் என்றும் காக்கப்படல் வேண்டும். என்னுடைய பிள்ளையாகிய இவன் (பீமனைச் சுட்டிக் காட்டி) மிக்க பலசாலி. அவனுக்கோர் ஆபத்தும் நேரிடாது” என்று சொல்லிப் பீமனை அழைத்து அவனிடம் இதைப்பற்றிச் சொன்னதும் அவனும் மிக்க உல்லாசத்துடன் போவதாய் ஒத்துக்கொண்டான். வெளியிற் சென்றிருந்த தருமர் வந்து நடந்ததைக் கேள்வியுற்று மனக்கிலேச

மடைந்து தாயைச் சிறிது கடிந்தார். அதற்கவள் "அப்பா தர்மா! உன் குலதர்மத்தை மறந்தாய் போலும்! நம்மை யடைந்த பிராமணனுக்கு உதவி செய்ய வேண்டுவதில்லையா? பீமனைச் செய்ய முடியும் என்றுதான் சொன்னேன். அவனுடைய பராக்கிரமமும் பலமும் உனக்குத் தெரியா. மேலும் க்ஷத்திரியதருமங்களில் அடுத்தவர்களைக் காக்கவேண்டுமென்பதும் ஒன்றன்றோ?" என்று சொல்லிச்சமாதானஞ்செய்தாள். ஏற்பாட்டின்படி பீமன் இரண்டெருமை பூட்டிய ஒருவண்டி நிறையச் சாதங் கொண்டு தானே வண்டியை ஓட்டிக்கொண்டு பகாசுரன் இருககுமிடஞ்சென்றான். இவனுக்கோ பசியாயிருந்தது. இவன் பண்டியை ஆற்றங்கரையில் விட்டுக் கடாக்களை அடித்துத் துரத்திவிட்டான்; அவைகளும் வீட்டை நோக்கித் திரும்பிச்சென்றன. இவனும் தண்ணீரருகில் உட்கார்ந்து சாப்பிட ஆரம்பித்து விட்டான். பண்டியிற் பாதியன்னமுமாயது. தனக்குப் பலி வரும் வரும் என்று வழிபார்த்துக் கொண்டிருந்த பகாசுரன் அது வரக்காணாது வழக்கமாய் வரும்வழி நோக்கி ஆற்றுக்குச் சமீபத்தில் வந்து சேர்ந்தான். கடாக்கள் ஊர் சேர்ந்தவுடன் திகிலதிகமாய்ப்போய் அன்றை முறைப் பிராமணனை ஊராரெல்லாம் வைய ஆரம்பித்தார்கள். அவனும் குந்திதேவியை ஒறுக்க ஆரம்பித்தான். அவள் பீமன் ஜெயத்துடன் வருவானெனச் சொல்லித்தேற்றியும் அவனுக்கு நம்பிக்கை வரவில்லை. அவ்வூராரும் நகைத்தார்கள். மற்றெல்லோருடைய கதியும் எப்படியாமோவென

ஏக்கங்கொண்டு திகிலடைந்திருந்தார்கள். இஃதிப்
படியிருக்க ஆற்றங்கரை யடைந்து அன்னத்தை
யள்ளி அவாவுடன் தின்று கொண்டிருந்தவனைப்
பகாசுரன் கண்டு நெருங்கி முதுகில் ஓர் அறை ஓங்கி
அறைந்தான்; ஆயினும் பீமன் அவனைப்பார்த்து
நகைத்துவிட்டு முன்னிலும் அதிகவேகமாய்ச் சாப்
பிட ஆரம்பித்தான். பிறகு பகாசுரன் பக்கத்திலிரு
ந்த ஒரு மரத்தைப் பிடுங்கிப் பீமன்மீ தெறிந்தான்.
அதைத் தன் னிடக்கையிற் பிடித்துக் கொண்டு
பீமன் சாப்பிட்டுக்கொண்டே யிருந்தான். தனது
பற்களையு முதட்டையும் கடித்து ஏறட்டுப் பார்க்கும்
பகாசுரனை நோக்கித் "தம்பி! சற்றுப்பொறு, சாப்
பிட்டு முடிந்ததும வருகிறேன்" என்று சொல்லிச்
சாப்பாடு முடிந்ததும், நீரோடையிற் கைவாய் சுத்தி
செய்து கொண்டு சந்தோஷத்துடனே திரும்பிக்
கோபம் கொப்புளிக்கு முகத்தையுடைய பகாசுரனை
எதிர்த்துச சண்டைசெய்தான். இஃது இடும்பாசுர
வதத்தினும் மும்முரமாயிருந்தது. கடையில் அசுரனை
அந்தரத்தெறிந்து அவனுடைய உடலங் கீழேவிழுந்
தருணத்தில் அதைத்தன் முழந்தாளிலவைத்து முறி
த்தான். பகாசுரன் இம்மாதிரியாய் இறந்தான். பீமன்
அசுரனுடைய சுற்றத்தாரை யழைத்து 'நரமாமிச
பக்ஷணம் செய்வதை யொழியுங்கள்' என அறிவுறுத்
திப் பிறகு முந்நூற்று மங்கலம் சேறலும் இவனுடைய
ஜயத்தைச் சற்று முன்னே யறிந்த அவ்வூரார் இவனை
யெதிர் கொண்டழைத்து உபசாரம் செய்து அசுரன்
அழிந்தானென்று அதிக சந்தோஷத்தை யடைந்து

சுகமாக வாழ்ந்து கொண்டிருந்தார்கள். பாண்டவர்களும் இன்னுஞ் சில நாள் அங்குறைந்திருந்தார்கள்.

முந்நூற்று மங்கலத்திற் பாண்டவர்கள் தங்கியிருந்தபோது ஒரு வயோதிக பிராமணன் அவர்களிடம் வந்து துருபதன் துரோணர் என்னு மிவர்களுக்குள் நடந்த விவாதத்தைக் குறித்தும், துரோணர் தன்னை அவமானம் செய்ததற்காக அவரைக் கொலலும் நிமித்தம் ஒரு பிள்ளையும் தன்னை வென்ற வீரனாகிய அர்ச்சுனனுக்கு மனைவியாதற்கோர் கன்னிகையுமாகத் துருபதன் பெற்ற திட்டத்துய்மன் திரௌபதை இவர்களைக்குறித்தும், சற்று விவரமாய்ச் சொல்லக் கேட்டார்கள்.

முன் சொல்லிப்போனபடி வியாசர் திரும்பி வந்து பாண்டவர்களைப் பாஞ்சாலனுடைய பிரதான நகருக்குப்போம்படி சொன்னார். துரோபதை முற்பிறப்பில் தனக்கு நாயகன் வேண்டு மென ஐந்துதரம் கடவுளைப் பிரார்த்தித்ததாகவும், மறுபிறப்பிலே ஐந்துநாயகர் அவளுக்கு வாய்ப்பார்களென்று அவர் வர மீந்ததாகவும சொல்லி அவள் சுயம்வரத்திற்கு அவர்களைப் போம்படி செய்தனர். அதன்பிரகாரமே அவள் ஐவர்க்கும் மனைவியாக வேண்டியிருந்தது. பாண்டவர்கள் பாஞ்சால தேசத்திற்குப் போம்வழியில் ஒரு கந்தருவனுடைய விருப்பத்தின்படி தங்களுக்குத் தௌம்யர் என்பவரைக் குருவாகக் கொண்டு அவரையும் தம்முடன் கொண்டு துருபதன் நகரை நோக்கி, அவ்விடத்திற்குப் போகும் அநேக பிராமணர்களுடன் சேர்ந்து சென்றார்கள்.

பாஞ்சால தேசத்திற் கரசனாகிய துருபதன் தனது புத்திரி துரோபதைக் குரிய நாயகன் அர்ச்சுனன் தானெனத் தீர்மானஞ் செய்துகொண்டு, பஞ்ச பாண்டவர்கள் தங்கள் நாட்டிலில்லையே யென ஏக்கங்கொண்டு ஒரு யுக்திசெய்து அவர்களைத் தன் தநயை ஸ்வயம்வரத்திற்கு வரவழைத்து அர்ச்சுனனுக்குத் தன் மகளை மாலையிடச் செய்யலா மென்று மனத்தைத் திடஞ்செய்து கொண்டான். ஸ்வயம்வர சமாசாரம் பரதகண்ட முழுதும் பரவச் செய்தான். துரோணர்த் தம மாணாக்கர்களில் வில்வித்தையிற் சிறந்தவன் அர்ச்சுனன் என்பது துருபதனுக்கு நன்றாய்த் தெரிந்த விஷயமன்றோ! அவனும் அதற்குத் தகுந்தபடி அர்ச்சுனனைத்தவிர வேறொருவரும்வளைக்கமுடியாததோர் பெரியவில் சன்னாகப்படுத்தி அதைச்சுயம்வர மண்டபத்து நாட்டி ஆகாயத்தில் அதிக தூரத்தில் எப்போதும் சுழன்று கொண்டே யிருக்கும்படியான மச்சயந்திரம் ஒன்றுகட்டி, அந்த வில்லை வளைத்து நாணேற்றி எவனொருவன் ஏக காலத்தில் ஐந்து பாணந்தொடுத்து அவையனைத்தினையும் மச்சயந்திரத்தின் மீது விட்டு அதைக் கீழே அற்று விழும்படி செய்கிறானோ அவன்தான் தன் மகளுக்குரிய மணமகனாவானென்று முரசறைவித்தான். அவ்வாறு செய்வதற்கு அர்ச்சுன னொருவன்தான் உளனென்பது துருபதனுடைய துணிபு. ஸ்வயம்வரத்திற்கு வந்திருந்த அரசர்களோ அநேகர். அவர்களது மனமுழுங்கண்ணும் துரோபதையினிடம் மயங்கி நின்றன. வியாசருடைய தூண்டுதலினாற் பாண்டவர்களும் இச்

சுயம்வரத்திற்கு வந்து சேர்ந்தார்கள். வேடிக்கை பார்க்கும் பொருட்டு வலதேவ ரென்னும் மறு பெயர் பூண்ட பலராமரும், அவர் தம்பி ஸ்ரீகிருஷ்ண பகவானும் அவ்விடம் வந்திருந்தார்கள். கருணையங் கடலாகிய பகவான் தம்மருளுருவாகிய கண்கொண்டு அருச்சுனனையும் அவன்றன் சகோதரர்களையும் கண்டார். அவர் நரனென்னுந் தம் சிநேகிதனை முதன் முதலிற் பார்த்தது இவ்வுலகி லிப்போதுதான்.

ஸ்வயம்வரத்திற்குரிய முற்சடங்குகளும் முடிந்தன. அரசர் குழாங்களிலிருந்த ஒவ்வொருவரும் வில்லை யெடுத்து வளைத்துப் பார்த்தார்கள்; வளைக்கவே முடியவில்லை. தனக்குரிய நாயகனை நாடி நின்ற துரோபதையின் நயனங்களும் சோர்வுற்றன. கடைசியிற் கர்ணன் தன் பீடத்திருந்து ஒரு குதிகுதித்தெழுந்து வில்லிருக்கும் இடத்தைச் சேர்ந்து அதனை அதிக சுலபமாயெடுத்து நாணேற்றிப் பாணத்தையுந் தொடுத்தான்.

பாண்டவர்களும் தங்களெண்ணம் பயன்படாதென நினைத்தார்கள். இதற்குள் வில்லைக் கர்ணன் வளைத்ததைக்கண்ட கன்னிகை கணீரென்ற சத்தத்தோடு 'சூதனை (தேர்ப்பாகனை) எனக்கு நாயகனாகக் கொள்ளேன்' என்றாள். கர்ணனும் கோபத்துடன் வில்லை விரைவாய் எறிந்துவிட்டுத் தன்னிடஞ் சென்றான். பிறகு, பிராமணவேடம் பூண்டு பார்வைக்குப் பலாட்டியனல்லனேனும் ஆஜானுபாகுவா யிருந்த அர்ச்சுனன் முன்சென்று வில்லை யெடுத்துச் சிரம

யில்லாமலே நாணேற்றி ஐந்து பாணமும் தொடுத்து மச்சயந்திரம் அற்றுவிழுமாறு விடுத்தனன். ஆகாயத்திலிருந்து புஷ்பமாரி பெய்தது. நாற்புறமும் வாத்திய கோஷமுழங்கியது.

* "பூமழை சொரிந்தார் விண்ணோர்
பொன்மழை பொழிந்த மேகம்
பாமமா கடல்க ளெல்லாம்
பன்மணி தூவி யார்த்த
கோமுனிக் கணங்க ளெல்லாங்
கூறின வாசி கொற்ற"
நாமவேல் விழிப்பாஞ் சாலி
நல்வர னடைந்தா ளென்று.

விலையுயர்ந்ததும் கண்ணுக்கு இரமணீயமானதுமான ஆடை ஆபரணங்களால் அலங்கரிக்கப்பெற்ற துரோபதை மந்தகாசத்தோடும ஒரு கையில் தங்கப்பாத்திரத்தில ஜலமும் மற்றொருகையில் மாலையுங் கொண்டு அர்ச்சுனனையணுகி அவனைத் தான் தனக்கு நாயகனாக வரித்ததற்கு அறிகுறியாக மன்மதன்போன்ற அவ்வழகுடையான்மீது மணமாலையை யிட்டுவணங்கி அவனருகில் நின்றனள். அவன் அவ்விடத்தை விட்டுச் செல்ல ஆரம்பித்தவுடன் அவளும் உடன்சென்றனள். கூடியிருந்த அரசர்குழாத்துள் ஒரு முழக்கம் உண்டாயிற்று. அது யாது? 'க்ஷத்திரிய வம்சத் துதித்த பெண் க்ஷத்திரியனைத் தனக்கு நாயகனாக வரியாது ஒரு பிராமணனை நாயகனாகக் கோடல் இயலாது!' என்பதுதான். அவர்களிலனேகர் ஒருங்

* கம்பராமாயணம்.

குகூடி அர்ச்சுனனைப் பின்றொடரும் துரோபதை யைப் பலாத்காரமாய் இழுத்துக்கொண்டுவந்து விட ஆரம்பித்தார்கள். அர்ச்சுனன் ஒருவில்லை யெடுத் தான். பீமன் ஒருமரத்தைப் பிடுங்கி நுனியையும அடி யையும் தறித்து அதனைத் தனக்கோர் ஆயுதமாகக் கொண்டான். இவர்களிருவருமாக அர்ச்சுனனுடன் போர் புரியவந்த அரசர்களனைவரையு மெதிர்த்து யுத் தஞ் செய்தார்கள். அங்கிருந்த சல்லியனும், கர்ண னும், துரியோதனனும, மற்றெல்லோரும், பிராமண ரிருவர் இவ்வாறு க்ஷத்திரிய சிம்மங்களோடு நெடு நேரம் நின்று போர்புரிவதைக்கண்டு அதிக ஆச்சரிய மடைந்து வெட்கினார்கள். கடைசியாகக் கிருஷ்ண பகவான் முன் வந்து, சண்டையை விலக்கித் துரோ பதை அர்ச்சுனன் பின்சென்றது நியாயமெனச் சொல்லவே சண்டையும் ஒழிந்தது. ஐவரும் தாங் கள் தங்கியிருந்த உறைவிடத்திற்குத் தமதன்னையைக் காணச் சென்றார்கள்.

அவர்கள் வீட்டுவாயிலில் நுழையும்போது குந் திதேவியானவள் வீட்டிலே ஒருள்ளறையிலிருந்தாள். விளையாட்டிற்காக இவர்கள், ' இன்றைக்ககப்பட்ட பிக்ஷையைக் கொணர்ந்தோ' மென்றார்கள். அதன் பொருளைக் கவனியாது, " நீங்களெல்லோரும் சுகமா யனுபவியுங்கள்" என்றாள். வெளியில் வந்து பார்க் கத் துரோபதை யிருக்கக்கண்டு 'என்ன அவசரம்! இப்படி யறியாது சொல்லி விட்டோமே!' என்று பதைபதைத்துக் கையை நெரித்துக்கொண்டாள். தரு மரை நோக்கி " அப்பா! என்வாக்கும் பொய்த்துப்

போககூடாதே. துரோபதைக்கும் பாவம் வந்து சமபவித்தல் தகாதே. இதற்கென்ன செய்யலாம்?" என, அதற்குத தருமர், "அதற்கென்ன! அர்ச்சுனன் தன் விற்றிறத்தினால அவளைக்கொண்டான். அவனே அவளை மணம் புரியட்டும்" என்னலும், தனக்கு முதியவர்கள் இருவரிருக்கத் தான் முந்தி விவாகம் செய்துகொள்ளல் கூடாதென்றான் விஜயன். பிறகு, வியாசர் துரோபதையினுடைய மணத்தைக் குறித்துச் சொன்னது தருமருக்குத் தற்காலம் ஞாபகத்திற்கு வந்தது. "விதிப்பயனின்படி அவள் ஐந்து பேருக்கும் மனைவியாதல் வேண்டும்" என்றார் தருமர். இதற குள் ஸ்ரீ கிருஷ்ணபகவானும அங்கு வந்து சேர்ந்தார். அவர் தமக்கு முதியோனாகிய தருமராஜன் பாதபங்கயத்து வீழ்ந்து நமஸ்கரித்துத் தாம் ஸ்ரீ கிருஷ்ண னென்பதை அவருக்குத் தெரிவித்தார். அவரை இனனாரென அறிந்தவுடன் அனைவரும் ஆனந்தங்கொண்டு களிக்கூத்தாடினார்கள். அதிக காலம அவர்களுட னிருந்தால் ஐவருடைய ஊரும் பேரும் நிலைமையுந் தெரிந்துபோ மென்று தாம் சீக்கிரம் செலவு பெற்றுக்கொண்டு சென்றார். அன்றிரவு போஜன முடிந்ததும், ஐவரும் ஒருவர் பக்கத்தொருவர் படுத்துறங்கினார்கள். அவர்கள் தலைபபுறம் தாயும் பாதத்திற் பத்தினியும் படுத்துக் கொண்டார்கள். நித்திரை செய்வதற்கு முந்திப் பற்பல அஸ்திர சஸ்திரங்களைப் பற்றியும் யுத்தங்களைப் பற்றியும் பேசிக் கொண்டிருந்தார்கள். திஷ்டத்துய்மன் தனது தங்கையை க்ஷத்திரியனுக்குக் கொடுப்பதற்கின்றி ஒரு பிரா

மணனுக்குக் கொடுக்க வேண்டிவந்ததேயென்று ஏக்கங்கொண்டு அவள நிலைமையைக் குறித்துப் பரிதபித்து ஐவரிருந்த இடத்தைச் சேர்ந்து அவ்வீட்டுப் புறத்து ஒதுங்கி நின்று அவர்கள் பேசும் விஷயத்'தைக் கவனித்து அவர்கள் க்ஷத்திரியராய்த்தா மிருக்க வேண்டுமென்று நிர்மாணித்து உடனே தனது தந்தையினிடம வந்து அவாகள் வைசியருமலலர், சூத்திரருமல்லா, அவர்கள பூண்டது பிராமணவேடமே யொழிய உண்மையில உயர்ந்த குலத்துதித்த க்ஷத்திரியர்கள்தா மென று உறுதியாய அதற்குரிய காரணஙகளோடும சொனனுன். மேலும அவர்கள் பாண்டு புத்திரர்களாகத்தாம இருக்க வேண்டுமேயன்றி வேறெவரு மல்லரென்றுன்.

இதைக் கேள்வியுற்ற துருபதனுடைய புஜங்கள் பூரித்தன. ஆயினும் இதனுண்மை நிச்சயமாய்த் தெரியும பொருட்டு ஒரு புரோகிதனை அவர்களிடம் அனுப்புவித்தான. தருமா அவனுக்குத் தாஙகளின்னுரென்பதைத் தெரிவியாமல துரோபதையைச் சுயம்வரத்தில தாஙகள் சன்மார்க்கமாய்க் கொண்டதேயொழியத் துன்மார்க்கத்திற் கொள்ளவில்லையென்றும் அரசன் இதனிமித்தம் வருத்தப்படலாகாதென்றும் சொலலி அனுப்பிவிட்டார். அரசன் இவர்களுக்கு ஒரு விருந்து செய்து இவர்கள இன்ன வருணததாரென நிசசயிக்கும் பொருட்டு, பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரரென்னும் நான்கு வருணத்தாருள் ஒவ்வொரு வகுப்பினரும் விரும்பக்கூடிய பற்பல சிறப்புப்பொருள்களை அவர்கட்கெதிரில் வைத்

தான். போஜனம் முடிந்ததும் இவர்கள் அதிக உற்சாகத்துடன் தங்களெதிரிலிருந்த அநேகம் பொருள்களின் மேல நாட்டத்தைச் செலுத்தாது அஸ்திர சஸ்திரம் இருந்தவிடம் சென்று அவற்றைத் தம் கைக்கொண்டார்கள். அதினின்றும் அரசன் இவர்கள் க்ஷத்திரியரென்றே தீர்மானித்தான். அவன் அவர்களை அணுகி, 'நீங்கள் இன்னாரெனத் தெரிந்து கொள்ள விருப்ப முடையவனாயிருக்கிறேன்' என்று சொல்லியபோது தருமர் தாமும் மற்றவரும் இன்னாரெனத் தெரிவித்து அரக்குமாளிகையினின்றுந் தப்பிக் கொண்டு வந்த செய்தியினையும் அதற்குப் பிறகு நடந்த இடும்பாசுர பகாசுரவதங்களையும் இடையில் நடந்த மற்ற விஷயங்களையும் சொல்லி முடித்தார்.

பிறகு துரோபதையினுடைய கலியாண விஷயத்தைக்குறித்து ஒரு முடிவு செய்ய வேண்டி வந்தது. துருபதன் ஐந்து சகோதரர்களில் எவரையேனும் தன்மகள் மணம் புரியலாமென்றான். யுதிஷ்டிரர் துரோபதை ஐவருக்கும் மனைவியாதல் வேண்டுமென்பது தம்தாயின் கட்டளையென்று சொன்னார். துருபதன் தருமரைநோக்கி "அப்பா, சுசீலனே! ஒருத்தி எப்படி ஐந்து நாயகனை அடைதல கூடும்? சுருதி யுக்தி அநுபவமென்னு மூன்றுக்கும் முரண்பாடான விஷயமாயிற்றே இது? சாஸ்திர மெல்லாவற்றிலும் நீ வல்லவனல்லனோ!" என்று சொல்லலும், அவர் " பொய்யென்பதே இதுவரையில என் நா அறியாது. பாவ காரியத்திற்கும் என் மனமெழாது. 'நானு மறியேன் அவளும் பொய்

சொல்லான்' என்பதற்கேற்ப என் தாய் உத்தரவு செய்தாள். அஃது எனக்குப் பிழையெனத் தோன்றவில்லை'' என்றார். இப்படிச் சொன்னது துருபதனுக்குத் திருப்திகரமானதா யிருக்கவில்லை. இந்த விஷயத்தைக் குறித்து இருவரும் விவாதஞ் செய்து கொண்டிருக்கையில் வேதவியாசர் வந்து சேர்ந்தார். துருபதன் இதைக்குறித்து அவரிடம் விண்ணபபஞ் செய்துகொண்டான். வியாசர் துருபதனைக் கொஞ்சதூரத்திற்கப்பால அழைத்துக்கொண்டுபோய்ப்பாண்டவர் ஐவருள அர்ச்சுனன் தவிர மற்றவர்கள் முன் ஜன்மத்தில் இந்திரப் பட்டம் பெற்றிருந்தவர்களென்றும், அர்ச்சுனன் மாத்திரம் அக்காலத்து இந்திரனுடைய பிள்ளையென்றும் தெரிவித்து அவர்களுடைய நிஜஸ்வரூபத்தையும் அவனுக்குக் காட்டினார். பிறகு துரோபதையினுடைய பூர்வ சரித்திரத்தையும், இவ்வாறு இப்போது வாய்க்க வேண்டிய காரணத்தையுஞ் சொல்லி முடித்தார். அதன்பிறகு துருபதனும் ஒருவாறு திருப்தி யடைந்தான்.*

பாண்டவர்களுடைய செல்வமும் அதிகரித்துக் கொண்டே வந்தது. துவாரகையினின்று ஸ்ரீ கிருஷ்ணபகவானும் அளவிலாத்திரவியம் அனுப்புவித்துக் கொண்டே வந்தார். துரியோதனனும் அவனுடைய துன்மந்திரிகளும், பாண்டவர் அரக்கு மாளிகையினின்றுந் தப்பிக்கொண்டு ஓடி விட்டார்களென்று இப்போது தெரிந்தவுடன் அவர்களைக் கொல்வதற்குரிய பல நூதன வழிகளைப் பற்றியும் யோசித்துக்

* வியாச பாரதம், ஆதிபருவம். § 167-200.

கொண்டிருந்தார்கள். இடம் பொருளேவல் இம்மூன்றினும் பாண்டவர் விருத்தியடைவதற்கு முன் அவர்களுடன் போர்புரிந்து அவர்களை வெல்லுதலே தகுதியான தென்றான் கர்ணன். பீஷ்மரோ அத்தகைய நடவடிக்கைக் குடன்படார். பாதி இராஜ்ஜியம் பாண்டவர்களுக்குப் பகிர்ந்து கொடுத்தலே நீதி யென்பது அவருடைய கொள்கை. அவர் துரியோதனனை நோக்கி "அப்பா துரியோதனா! நல்ல பெயரே ஒருவனுக்குரிய பலம். பாண்டவர்கள் அரக்கு மாளிகையில் மடியாதிருந்தது நாம் செய்த பூஜாபலன். குந்திதேவி உயிரோடிருப்பது நம்முடைய அதிர்ஷ்டம். மனிதரிற் புலி போன்றவனே! குந்தி அரக்கு மாளிகையில் இறந்தாளென்னுஞ் செய்தி கேட்ட ஜனங்களெல்லாம் உன்னை நிந்தித்தார்களே யொழிய புரோசனனை அவ்வளவு நிந்திக்கவில்லை. பாண்டவர்கள் தீக்குத்தப்பி உயிருடன் வந்தது உனது அதிர்ஷ்டமேயாம். உனக்கு வந்த கெட்ட பெயரும் ஒருவாறு மாறிவிடும். குருவம்சத் துதித்தோனே! அவர்கள் உயிரோடிருக்கும் வரையில் அவர்களுக்குரிய பாகத்தை அபகரித்துக்கொள்ள இடிக்கரசாகிய இந்திரனாலும் முடியாது. பாண்டவர்க்கு நற்குணமும் ஐக்கியமும் பொருந்தியிருக்கின்றன. அவர்க்குரிய பாகத்தைக் கொடாதிருத்தல் நலமன்று. 'நன்னெறியில் நடக்க உனக்கு விருப்பமிருக்கும் பக்ஷத்திலும், எனக்கு விரோதமாய் நடக்க விரும்பாதிருக்கும் பக்ஷத்திலும், எல்லாருடைய நல்ல அபிப்பிராயத்தையும் நீ விரும்பும் பக்ஷத்திலும், இவ்விராஜ்ஜி

யத்திற் பாதிப் பாகம் பாண்டவர்களுக்குக் கொடுத் தல் வேண்டும்" என்றார். துரோணரும் விதுரரும் அதேமாதிரியாய் எடுத்துச் சொன்னார்கள். கர்ணன் மாத்திரம் இவர்கள் சொன்னதற்கு விரோதமாய்ச் சொல்லிக் கொண்டே வந்தான். கடைசியாகத் திரு தராஷ்டிரர் விதுரரையனுப்பிப் பாண்டவர்களை அஸ் தினபுரிக்குக் கொண்டு வரும்படி சொன்னார்.

பாண்டவர்கள் ஊரில் வந்து சேர்ந்ததும் ஜனங் களடைந்த ஆனந்தத்திற்கோ ரளவில்லை. திருதரா ஷ்டிரன் அவர்கட்கொரு பாதிராஜ்ஜியம் கொடுத்துக் காண்டவப்பிரஸ்த மென்னுமிடத்தில் அவர்களை யிருக் கச் செய்தான். அவ்விடம் ஒரு பெரிய பாலைவன மாயிருந்தது. இவர்கள் அங்குச் சென்றதும் வியா சருடைய உதவியால் அங்கோரிடம் அமைத்து அழ கிய நகரொன்று உண்டாக்கிக்கொண்டார்கள். ஜனங் கள் அதனழகைக்கண்டு ஆனந்தங்கொண்டு இந்திரன் நகராகிய அமராவதியினும் சிறந்து விளங்கும் தன் மையினால் அதற்கு இந்திரப்பிரஸ்தம் என்னும் பெயரி ட்டார்கள்.

அப்பட்டணத் திருக்கையில் ஒரு நாள் நாரதமு னிவர் அவ்விடத்திற்கு விஜயம் செய்தார். பாண்ட வர்களுடன் கலந்து பேசிக்கொண்டிருந்த போது, பொதுவில் ஒரு பத்னி இருப்பதனால் ஒரு வேளை அவர்களுடைய ஐக்கியத்திற்கு இடையூறு நேரு மென்றெண்ணி அது விஷயத்தில் ஒருவித ஏற்பாடு செய்து கொள்ளும்படி சொல்லிவிட்டுப்போய் விட்

டார். துரோபதை ஐவரில் ஒருவரோ டிருக்கும் போது மற்றவர்கள் பிரவேசிக்கக் கூடாதென்றும் அப்படி நேரிடிற் பாவம் நீங்கும் பொருட்டுப் பன்னிரண்டு வருஷம் வனவாசஞ்செய்துவிட்டு வரவேண்டுமென்றுந் தங்களுக்குள் ஓர் ஏற்பாடு செய்து கொண்டார்கள். அப்படி நடந்து வருநாளில் ஒருநாள் ஒரு பிராமணனுடைய ஆடுமாடுகளைக் கள்வர்கள் களவு செய்து கொண்டு போய்விட்டார்கள். அந்தப்பிராமணன் பாண்டவர்களிடத்தில் வந்து முறையிட்டுக் கொண்டான். அப்போது அர்ச்சுனன் அந்தணனுடைய பொருளை மீட்டுக்கொடுப்பதாக வாக்களித்தனன். அவனுக்கு வேண்டிய ஆயுதங்கள் தருமரும் துரோபதையுமிருந்த அறையிலிருந்தன. என் செய்வான் அருச்சுனன்! பிராமணனுக்குதவிசெய்யாவிடிற் பழி மன்னவனைச்சேரும். துஷ்ட நிக்கிரகம் சிஷ்டபரிபாலனம் செய்யாத அரசன் பாபத்திற் காளாவன். இருதலைக் கொள்ளியி னெறும்பு போன்றான் அர்ச்சுனன். அஸ்திர சஸ்திரத்திற்காக அறையில் நுழைந்தால் அரணியத்திற்குப் போகவேண்டிவரும். பிராமணனைக் காவாவிடிற் பழிவந்து சேரும். ஆயினும் ஒருவாறு துணிவு செய்துகொண்டான். 'காட்டிற்குப் போகவேண்டி வந்தால் தனது காயந்தான் கஷ்டப்பட வேண்டிவரும். தர்ம சிந்தையும் சற்கருமமும் தேகத்தைப்பார்க்கிலும் அதிகமாய்க் கவனிக்க வேண்டிய விஷயம். பஞ்சபூதங்களாலாய இவ்வுடம்பு அழியினும் புகழும் கீர்த்தியும் அதற்குப் பின்னும் நின்று நிலவும்' என்று சொல்லிக்கொண்டு தமைய

னும் துரோபதையு மிருந்த பள்ளியறையுட் சென்று வேண்டிய ஆயுதங்களை எடுத்துக்கொண்டு வெளி வந்து திருடர்களைப் பின்தொடர்ந்து அவர்களை வென்று ஆடுமாடுகளைப் பிராமணனிடம் சேர்த்துப் பிறகு தருமரிடஞ் சென்று அவர்தமக்குள் ஏற்பட்ட ஏற்பாட்டின்படி பன்னிரண்டு வருஷம் வனவாசஞ் செய்து விட்டு வருவதாய்ச் சொன்னான். தருமரோ வருத்தமுற்று மனந்தளர்ச்சி யடைந்து அர்ச்சுனனை நோக்கித் "தம்பி! நீ என்னறையிற் புகுந்ததற்குக் காரணம் எனக்கு நன்றாய்த்தெரியும். அதனால் எனக் கொரு வருத்தமுமில்லை. வனத்திற்கேக வேண்டாம். நான் சொல்வதைக்கேள். எனக்கொரு தீங்கிழைத்த தாகவும் எண்ணாதே. உன்குணத்திற்கொரு குறைவு நேரிடவுமில்லை" என்று சொல்லியும் கேளாதவனாய் அர்ச்சுனன் "உண்மையி னின்றும் சிறிதேனும் பிற ழேன், அதுதான் எனக்குத் துணை" என்று சொல்லி விடை பெற்றுக்கொண்டு சென்று விட்டான்.

ஆரியர்க்கிருக்கும் அநேக நற்குணங்களுள் உண் மை வழியொழுகுதல் முதன்மையானது. இதனுண் மை பாரதத்தில் எவ்விடத்தும் விளங்கும். மெய்ம்மை யை விரும்பலும் பொய்ம்மையை அகற்றலும் ஆரிய ருள் எல்லாவருணத்தார்க்கும் எல்லா மரபினருக்கும் பொருந்தியதோர் குணம். ஒருவன் பொய்சொல்லி யொழுகுவானாயின் அவன் தன் குலத்திற்கும் கோத் திரத்திற்குங் குறை உண்டுபண்ணினவனாவன்.

அர்ச்சுனன் அவ்வாறாகத் தீர்த்தயாத்திரை செய் யும் பொருட்டுப் போகையில் ஒரு நதியி லிறங்கி ஸ்நா

நஞ்செய்து பிறகு பூஜைசெய்து கொண்டிருக்கும் போது உலுப்பை என்னும் நாககன்னிகை யொருத்தி வெளிவந்து அவனைத் தன்னுடன் கொண்டு போய்விட்டனள். தியானம் முடிந்ததும் திரும்பிப் பார்த்தான். பிறகு அவளை இதற்கு யாது காரணம என்று வினவலும், அவள் தன்பேரில் ஆசை கொண்டாளெனத் தெரிந்து அவளுடைய விருப்பத்திற் கியைய நடந்து மறுநாட் காலைவரையில் அவளோடிருந்தான். பிறகு அதைவிட்டுப் புறப்பட்டுப் பலபுண்ணிய தீர்த்தங்களில ஸ்நாநஞ்செய்து புண்ணிய ஸ்தலங்களைத தரிசித்துக் கடைசியாகத் துவாரகைக்கு வந்து சேர்ந்தான். தம் சிநேகிதனைப் பார்க்கும் பொருட்டு மகாபரிசுத்தாத்துமாவாகிய ஸ்ரீகிருஷ்ணபகவான் அவனிடம் வந்து அவனை அழைத்துக்கொண்டு தமதில்லஞ்சேர்ந்தார். அவ்விடத்தில் அவன் ஸ்ரீகிருஷ்ணபகவான் தங்கையாகிய சுபத்திரையைப் பார்த்ததும் அவள்மீது அதிகமோகங்கொண்டான். ஸ்ரீகிருஷ்ணபகவான் க்ஷத்திரியருடைய வழக்கப்படி தம் தங்கையைத் தூக்கிக் கொண்டு போய்விடலாமென்று அவனுக்குச் சொல்லிவிட்டார். இது சங்கதி அருச்சுனன் யுதிஷ்டிரருக்குத் தெரிவித்து அவருடைய சம்மதமும பெற்றுச் சிலநா ளங்கே சமயம பார்த்துக்கொண்டிருந்து, அது வாய்த்தபோது அவள் தனியாய் உலாவிக்கொண்டிருக்குந் தருணத்தில அவளைத் தூக்கித் தன்னிரதத்தின் மீது வைத்துககொண்டு தன்னூர் நோக்கிப் புறப்பட்டு விட்டான். யாதவரும் விருஷ்ணிகளும் இந்தச் சங்கதி தெரிந்து அதிக கோபங்கொண்டு அர்ச

சுனனைப் பின் தொடர்ந்து போர்புரிவதற்குச் சன்னத்தரானார்கள். ஸ்ரீ கிருஷ்ணபகவான் இனிய வசனங்களால் அவர்களுடைய கோபத்தை யாற்றினார். " அர்ச்சுனனைப் பின்பற்றி நல்லவார்த்தை சொல்லி அவனை யிங்குக்கொண்டு வாருங்கள். அவன் மகா சுத்தவீரன், நம்முடைய தங்கைக்கு அவனினும் சிரேஷ்டமான புருஷன் வேறெவன் அகப்படப்போகிறான்?" என்று பகவான் சொல்லியவளவில் அவர்கள்போய் அர்ச்சுனனைப் பின்றொடர்ந்து தோத்திரஞ் செய்து திருப்பிக்கொண்டு வந்தார்கள். துவாரகையிற் சில நாளிருந்தான் அர்ச்சுனன்; பன்னிரண்டு வருஷம் முடிந்ததும் அதை விட்டுப்புறப்பட்டு அதிக ஆடம்பரத்தோடும், பரிவாரங்களோடும், ஸ்திரீதனங்களோடும் தன்னகர்க்குச் சென்றான்; அவனுக்குச் சுபத்திரையினிடமாக அபிமன்யு பிறந்தான்; இவனுடைய வாழ்நாளோ மிகவும் சுவல்பம். கீர்த்தியோ மிகவும் பெரிது. சோமன் என்னுந் தேவனுடைய புத்திரன் இவன். இவனுடைய பூர்வஜன்மத்துப் பெயர் வர்ச்சஸ் என்பது. பூமியின் மீது பதினாறு வருஷகாலமிருந்து குருக்ஷேத்திரத்திற் சண்டைசெய்து அவனுக்குக் குறித்திருந்த காலம் முடிந்ததும் சுவர்க்கம்வந்து சேரும்படி அவனுக்கு உத்தரவாயிருந்தது. *

காண்டவ வனத்தில் ஒருநாள் அர்ச்சுனனும் கண்ணபிரானும் விளையாடிக் கொண்டிருந்தபோது, அக்னிபகவான் பிராமண வேடம் பூண்டு அவர்களி

* வியாசபாரதம், ஆதிபருவம். § 201-223, 267.

டம் வந்து இந்திரனாற் காக்கப்பட்ட அக்காண்டவ வனத்தைத் தகிக்க வேண்டி அவர்களுடைய உதவியை விரும்பினார். இதைக்குறித்து அவர் முன்னமே பிரமாவுடன் யோசனை செய்ததாகவும் அவர் அதற்கு நர நாராயணராயிருந்தவர்கள் அப்போது பூமியிற் கிருஷ்ணார்ச்சுனர்களாயிருக்கிறார்களென்றும் அவர்களிடஞ் சென்றால் உதவி செய்வார்களென்றுஞ் சொல்லக்கேட்டு ஆங்குப் போந்ததாக அக்னிபகவான் சொன்னார். அர்ச்சுனன் அக்னிபகவானை நோக்கி "என்னிடத்தில் தகுந்தவில்லும் வேண்டிய அம்புகளுமில்லை. தகுந்த இரதமும் அதிற் பூட்டுவதற்கு வேகமாயோடத்தக்க குதிரைகளும் வேண்டியிருக்கின்றன. கேசவனுக்கும் ஒரு பெரிய ஆயுதம் வேண்டியிருக்கிறது" என்றலும், அப்புவிற் கதிபதியாகிய வருணனைக்குறித்து அக்னிபகவான் தியானித்தவளவில் அவர்வரலும், அர்ச்சுனனுக்குக் காண்டவமென்னும் ஒரு பெரிய வில்லையும், அம்பு என்றும் அறுதத்தோர் தூணியையுங் கொடுக்கும்படிக்கும், ஸ்ரீகிருஷ்ணபகவானுக்குப் பெருமைவாய்ந்த சக்கிரத்தைக் கொடுக்கும்படிக்கும வேண்ட அவரும் அப்படியே கொடுத்துப்போனார். காண்டவ வனத்தில் அக்னியும் பிரவேசமாய்விட்டது. அதை அவிக்கும்படி இந்திரன் சப்தமேகங்களுக்குங் கட்டளையிட்டான். அதைத் தடுக்கும்பொருட்டு அர்ச்சுனன் வருணாஸ்திரம் விட்டான். அந்தவனம் பதினைந்து நாள் வரையில் எரிந்து கொண்டிருந்தது. அதினின்றும் உயிர் தப்பி ஓடியவர்கள் அறுவர். மயன் என்னும்

அசுரனும் அதினின்றும் ஓடி வந்து தன்னைக் காப் பாற்றும்படிக்கு அர்ச்சுனனை வேண்டினன். அவ் வாறே அவனும் மயனைக் காப்பாற்றினன்.

இஃதிப்படி முடிந்ததும் இந்திரன் தனது சுத னாகிய அர்ச்சுனனுடைய வல்லமைக்கும் தைரியத் திற்கும் வியந்து, அர்ச்சுனன், கேசவன் இவ்விருவ ருக்குமெதிரில் தோன்றி 'வேண்டிய வரம்பெறலா' மென்றியம்பினன். அர்ச்சுனன் தனக்கு தேவாஸ்திரங் களைத் தருமபடி கேட்க, இந்திரன் "தேவதே வோத்தமனாகிய மகாதேவன் எப்போது உன்னுடைய செயலைக் கண்டு மகிழ்கிறானோ அப்போது என்னு டைய ஆயுதமெல்லாம் உனக்குத் தந்துவிடுகிறேன்" என்றான்.

ஸ்ரீ கிருஷ்ணபகவான் தமக்கும் அருச்சுனனு க்கு மிருக்கும் சினேகம் எப்போது மிடையறா திருத் தல் வேண்டு மென்னும் வரம் பெற்றார்.*



* வியாசபாரதம், ஆதிபருவம். § 224-236.

## அத்தியாயம்.—IV.



### பாண்டவர் துயர்க்காரணம். *

இந்த அத்தியாயத்தின் கண் இரண்டாம் பருவமாகிய சபாபருவத்திற் கூறப்பட்டுள்ள விஷயங்கள் எடுத்துச் சுருக்கிச் சொல்லப்படும்.

பாண்டவர்களுடைய தாயபாகத்தை முன்னிட்டுக்கூடிய மூன்று சபைகளில் நடந்த வர்த்தமானங்களைக் குறித்துக் கூறியிருப்பதனால் இப்பருவத்திற்கு **சபாபருவம்** என்னும் பெயரிடப் பட்டுளது.

மேலத்தியாயத்தில், காண்டவ வனம் எரியுண்டு அழிந்த காலத்து அர்ச்சுனனுதவியினால் **மயன்** என்னும் தானவனொருவன் உயிர் தப்பி வெளிப்போந்தானென்று கூறப்பட்டிருக்கிற தன்றோ? அந்தத்தானவன் அர்ச்சுனனிடம் போந்து தன்னுயிர் தந்ததற்காகத் தான் யாதேனும் ஒரு பிரதியுபகாரம் செய்ய விரும்பியிருக்கிறதாகத் தெரிவித்தலும் அர்ச்சுனன் 'யான் அதை ஏற்றுக்கொள்ளே' னென்று சொல்ல, அவன் மிகவுமிரங்கிக் கேட்டுக்கொண்டதன்மேல் தன் பொருட்டு ஸ்ரீகிருஷ்ண பகவானுக்கு அவர் விரும்பியதைச் செய்யலாம் என்று சொன்னான். அவன் ஸ்ரீகிருஷ்ணபகவானிடம் சென்று இதைத் தெரிவித்தவளவில் அவர் யுதிஷ்டிரருக்கு ஒரு மாளிகை கட்டித்தரும்படி சொன்னார். மயன் அதிக ஆனந்தத்துடன் இதைச் செவியுற்று நவரத்ன கசித

---

* சபாபருவம்.

மான ஒரு மாளிகைகட்டுவதற்குத் தகுந்த ஓரிடத்தைக் கண்டு குறிக்கும் பொருட்டு ஊருக்குத் திரும்பிப்போனான். *

பிறகு ஸ்ரீகிருஷ்ணபகவான் தம் நகருக்குப் போய்விட்டார். அவர் மகா விஷ்ணுவி னவதாரமாயிருந்தபோதிலும், வயதில் தமக்குப் பெரியவர்களாயிருந்தவர்களிடத்தில் தாம் எவ்வளவு விநயமாய் நடந்து வந்தாரென்பதைக் கேட்பவர்க ளெல்லாம் தாங்களு மப்படியே நடந்தல் நலமென்று கொள்ள வேண்டு மன்றோ? தாம் போம்போது பிராமணர்களுக்கும் யுதிஷ்டிரருக்கும் பீமனுக்கும் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து அவர்களுடைய உத்தரவுபெற்றுப் போனாரென்பதும் பிராமணர்களிடத்தில் தாம் அதிக அன்பு வகித்தாரென்பதும் கூறப்பட்டிருக்கின்றன.

மயன் தான் முன்னொரு காலத்தில் விந்து வென்னும் ஏரிகரையில் தானவர்கள் செய்த யாகத்தில் எஞ்சிநின்ற நவரத்னங்களைச் சேர்த்து வைத்திருப்பதாகவும், தானவ அரசனுடைய கதாயுதம் ஒன்றும், வருணனுடைய **தேவதத்த** மென்னுஞ் சங்கமொன்று மிருக்கிறதாகவும் பாண்டவர்களுக்குத் தெரிவித்து, தான் அவ்விடஞ்சென்று அவைகளைக் கொணர்ந்து கதாயுதத்தைப் பீமனுக்கும் தேவதத்தமென்னுஞ் சங்கை அர்ச்சுனனுக்கும் தந்து, நவரத்தினங்களை மாளிகை கட்டுவதற்கும் வைத்துக்கொண்டான்.

---

* வியாசபாரதம், சபாபருவம். § 1

மாளிகையின் சுவர்களோ சுவர்ணத்தினுலானவை. ஆடகம், கிளிச்சிறை, சாம்பூநதம், சாதரூபம் என்னும் நால்வகைப் பொன்னினுலும் மண்டபத்திலுள்ள பற்பல தூண்களும் கம்பங்களும் செய்யப்பட்டு, கோமேதக நீல பவள புஷ்பராக மரகத மாணிக்க முத்து வைடூரிய வைரம் என்னும் நவரத்தினங்களால் இழைக்கப்பெற்றன. நடுவில் ஒரு குளம் அமைக்கப்பெற்றிருந்தது. அதன் கரையும் படிகளும் சலவைக்கல்லாலாயின. அக்குளக்கரையிற் பற்பல விதமான வாசனை வீசும் மரங்களை வைத்து, குளத்தில் அன்னங்களும் மற்ற நீர்வாழ் பறவைகளும் விடப்பட்டிருந்தன. பதினன்கு மாதத்திற்குள் தனக்கோரொப்புமுயர்வும் வேறென்றுமில்லையென்னலாம்படி அவ்வரண்மனை கட்டி முடிக்கப்பட்டது. கிருகப் பிரவேசச்சடங்கு நிறைவேற்றும் பொருட்டு ஓர் தினமும் ஏற்படுத்தப்பட்டிருந்தது. அதற்குப் பற்பல நாடுகளிலிருந்து இராஜராஜாக்களும், பட்டவர்த்தனர் மகுடவர்த்தனர் முதலியவர்களும் வந்திருந்தார்கள் ; இவர்களெல்லோரும் அங்கே ஒருங்கு கூடினர். இதுதான் சபாபருவத்திற் கூறப்பட்டுள்ள முதற் சபை. அதற்கு முனிபுங்கவராகிய நாரதமாமுனிவரும் எழுந்தருளியிருந்தார். அவர் வந்தவுடனே, ஐவரில் முதியோராகிய தருமர் தம் தம்பிமாருடன் எழுந்து அவர்க்கு வந்தனை வழிபாடுசெய்து யோக க்ஷேமங்களைக் குறித்துப் பேசியபிறகு, முனிவர் தருமரை நோக்கி அநேகங் கேள்விகள் கேட்டார். இந்து சாஸ்திரப் பிரகாரம் அரசன் பிர

ஜைகளுக்கெல்லாம் அதிபதி ; விஷ்ணுவின் அம்ச மென்று சொல்லப்படுவன். அவனுடைய கடமைக ளோ எண்ணிறந்தன. அவன் நல்லவனாயிருந்தால் அவன் குடிகளும் க்ஷேமமடைவார்கள். மாந்தர் செய் வது மன்னவனைச் சேரும. அரசன் இன்னின்னபடி நடத்தல் வேண்டுமென்று பீஷ்மரும் விரிவாய்ச் சொல்லியிருக்கிறார். அவைமேலே கூறப்படும். நார தர் தருமரை அருகிலழைத்து உட்காரவைத்துக் கொண்டு, " அப்பா தர்மா! உன்காலத்தைத் தினந் தோறும் தர்மார்த்த காமமோக்ஷ சம்பாத்தியத்திற் கழித்துக்கொண்டு வருகிறாயா? உன்னிடம் துன் மந்திரிகளல்லாத நற்குணம் நற்புத்தி வாய்ந்த மந்திரி களை வைத்திருக்கின்றாயா? உன்னுடைய சைனியங்க ளுக்கு மாதந்தோறும் சம்பளம் சரியாய்ச் சேர்ந்து கொண்டு வருகிறதா ? உனக்காகப் பற்பல யுத்தங்க ளில் உயிரைத்தந்த இராணுவவீரர்களின் சம்சாரங் களை ஆதரித்து வருகின்றாயா ? யுத்தத்தில் வென்ற மாற்றாரை இரக்ஷித்து வருகின்றாயா ? எல்லாரும் உன்னை வெளியில் வந்து பார்த்தல் கூடுமா ? அவர் கள் உன்னைத் தங்கள் தந்தைபோற் பாவித்து உன்னை அணுகும்படி வைத்திருக்கின்றாயா ? உன் வரும்படி யில் எவ்வளவு கூறு செலவுசெய்கிறாய் ? வேளாளர் கள் எல்லாம் சுகமாயிருக்கிறார்களா ? மழையில்லா மற் போனால் உன்னாடு வளம் குறைந்துபோமாகை யால், பற்பல விடங்களிலும் ஏரிகளும் குளங்களும் ஏற்படுத்திவைத்திருக்கின்றனையா ? விவசாயிகள் சுக மா யிருக்கிறார்களா? அவர்களுக்குவேண்டிய வித்து

முதலியவைகளைச் சேகரித்துத் தந்து வருகின்றனையா? சுயநலம் பாராட்டியேனும், அகங்காரத்தாலேனும் அநீதி நடந்துகொண்டு வருகின்றதோ? உன் மந்திரிகள் இலஞ்சம் வாங்காதிருக்கிறார்களா? வரிகளும் அநியாயமாய்ப் போடப்படாதிருக்கின்றனவா? குருடர்களையும், முடவர்களையும், ஊமைகளையும், அங்கவீனர்களையும், சிநேகிதரற்றவர்களையும், சந்நியாசிகளையும், தகப்பன் பிள்ளையைப் பாதுகாப்பதுபோற் காப்பாற்றி வருகின்றனையா? அரசே! தூக்கம், சோம்பல், பயம், கோபம், அதைரியம், தாமசம், என்பனவாய அறுவகைத் தோஷங்களையும் அகற்றினையா?" என்று வினவினார். இவற்றையெல்லாங் கேட்டுக்கொண்டிருந்த தர்மர் நாரதரை வணங்கி, இனி இவற்றில் அதிக கவனம் வைப்பதாகச் சொன்னார். நாரதர் அதற்குப் பிறகு அச்சபையிலுள்ளோருக்குத் தேவலோகத்திலுள்ள அரண்மனைகளின் விசேஷங்களை எடுத்துச் சொன்னார். *

நாரதர் அப்போது சொன்னவற்றிலிருந்து அரிச்சந்திரனென்னு மரசன் மாத்திரந்தான் இந்திரனோடு அவன் மாளிகையிலேயே இருப்பதாகத்தெரிய வந்தது. தருமர் அவ்வரசனுடைய குணவிசேஷத்தைக் குறித்து வினவினார். தன்னுடைய தகப்பனார் நிலைமையைப்பற்றியும விசாரித்தார். அதற்கு நாரதர் " அப்பா தர்மா, அரிச்சந்திரமகாராஜா இராஜசூய யாகஞ்செய்ததனால் அப்பதவியை அடைந்

* வியாசபாரதம், சபாபருவம். § 5 - 11.

தார். உன் தகப்பனும் உன்னை உலகத்தை ஜெயித்து இராஜசூய யாகத்தைச்செய்து தமக்கும் பிரயோசனம் உண்டுபண்ணும்படி சொன்னார்'' என்றார். இவற்றைத் தாம் தருமருக்குத் தெரிவித்து இராஜசூய யாகத்தி னருமையையும் குறிப்பித்துப்போனார். அந்த யாகத்தின் முடிவில், யாககர்த்தாவைச் சக்கிரவர்த்தியாக விளம்பரஞ் செய்வார்கள். அந்தத் தேசத்து அரசர்களெல்லாம் அவரை அரசர்க்கரசராக மதித்தல்வேண்டும். குணத்திலும் பராக்கிரமத்திலும் பெரியவனாயிருந்தால்தான் அவனை மதித்து அவனைத் தங்களுக்குத் தலைவனாகக் கொள்வார்கள். யுதிஷ்டிரர் தம்மையும் தம் மந்திரிகளையும் தாம் அத்தகைய யாகம் செய்வதற்குயோக்கியர்தாமோவென்றுகேட்டார். அப்போது அவர் நாடு இருந்த நிலைமையே அவர் பற்பல நற்குணம் வாய்ந்த அரசரென்பதற்குச் சாக்ஷியாக விருந்தது. அவர் குடிகளிடத் தன்பு பூண்டு வித்தியாசம் பாராட்டாது எல்லாருடைய நன்மையையும்விரும்பிப் பாடுபட்டு வந்தார். அவருக்குச் சத்துருவென்பாரொருவனுமில்லாதபடியால் அவருக்கு ஜனங்கள் அஜாதசத்ரு எனப்பெயரிட்டார்கள். ஒவ்வொருவரையும் தம் குடும்பத்திலொருவராகப் பாவித்து நடத்திவந்தார். தம்முடைய சகோதரர்கள் பலவிதத்திலும் உதவி புரிந்து வந்தார்கள். இராஜ்ஜியம் முழுதும் சண்டை சச்சரவின்றி யிருந்தது. ஜனங்கள் தத்தமக்குரிய தொழிலிற் கவனம்வைத்து விருத்தி செய்ய ஆரம்பித்தார்கள். மாதம் மும்மாரி பெய்து எல்லாம் சுபிக்ஷமாயிருந்தது. வாய்மையே துணையாக்

கொண்ட யுதிஷ்டிரர் காலத்து, சத்துருபயம், வியாதி பயம், அகாலமிருத்யு, சூன்யம் முதலியனவற்றுள் ஒன்றேனுங்கிடையாது. பற்பல நற்குணம் வாய்ந்த இந்த அரசனைப்பார்த்து மந்திரிகள் "அரசே ! உங்களைப் பார்க்கிலும் இராஜசூய யாகத்தைச்செய்ய யோக்கியதையுடையவர் வேறெவரிருக்கிறார்கள் ?" என்றார்கள். இவர்கள் இப்படிச் சொன்னபோதிலும், தாம் அதை உடனே அங்கீகரியாமல், இதைப் பற்றித் தமக்குள் யோசித்துக் கொண்டிருந்தார். "காரியத்தைத் தீர்க்கமாக ஆலோசித்துச் செய்தல் வேண்டும். நம்முடைய வரவு யாகத்துக் குரிய செலவிற்குப் போதுமா ? மற்ற யோக்கியதை நமக்கிருப்பது எப்படி நிச்சயம் ?" என்று நன்றாய்த் தெளியும் பொருட்டு ஸ்ரீ கிருஷ்ண பகவானைத் தம்மிடம் வரும்படி தருமர் வேண்டினார். அவரைப் பார்க்கினும் யோசனை சொல்லக் கூடியவர் யாவரிருக்கின்றனர் ?

ஸ்ரீ கிருஷ்ணபகவானும் தூதுவன் வந்துசொன்ன மாத்திரத்திற் புறப்பட்டு வந்து சேர்ந்தார். தர்மர் இராஜசூயயாகம் செய்யக் கருதியதைத் தாம்கேட்டு, "ஐய! அதற்கு இடையூறு ஒன்றுளது. நீவிரோ யாகத்தைச் செய்வதற்கு யோக்கியதை யுடையவர். எல்லா அரசர்களும் உம்மைச் சக்கிரவர்த்தியாக அங்கீகரித்தால் தான் நீர் இந்த யாகத்தை ஆரம்பிக்கலாம். புஜபல பாரக்கிரமம் பொருந்திய ஜராசந்தன் என்னுமோர் அரசனிருக்கின்றான். அவன் மகதநாட்டிற் கதிபதி. அவன் உம்மைத் தனக்குத் தலைவராக அங்கீகரிக்க

மாட்டான். அவன் பார்க்கப் பயங்கரமானதோர் நரபலி இடவெண்ணி யிருக்கின்றான். அதற்கு நூறு நரர்கள் வேண்டும். அவர்களும் அரசர்களாயிருத்தல் வேண்டும். இதற்காக அவன் எண்பத்தாறு அரசர்களை இது வரையில் வெற்றிகொண்டு சிறைச்சாலையில் அடைத்து வைத்திருக்கின்றான். இன்னும் பதினன்குபேர்கள்தாம் வேண்டும். ஜராசந்தனை இதை நிறைவேற்றமற்றடிப்பவன்தான் அதிக கீர்த்தியடைவான். ஆகையால் யாகத்தைப் பற்றி நினைப்பதற்குமுன் ஜராசந்தனைச் செயிக்கவேண்டும். ஜராசந்தனுக்கோ அளவற்ற சேனைகளிருக்கின்றன. ஆகையால் அவனைப் படைகொண்டு வெல்வது அருமை. தந்திரத்தால்தான் வெல்லல் வேண்டும்'' என்றார். பிறகு ஸ்ரீகிருஷ்ணபகவானும் பீமனும் அர்ச்சுனனும் அவனிடம் போக வேண்டியதென்று ஏற்பட்டது. கண்ணனுக்கு அதிக சமயோசிதமான யுக்திகள் தெரியும். பீமனிடத்திலோ அதிகபலமுண்டு. அருச்சுனன் பேரைச் சொன்னாலும் அதிர்ஷ்டம் உடனே வரும். ஆயினும் யுதிஷ்டிரர் தம் தம்பிகளுக்கு வரக்கூடிய தீங்கைக்குறித்துச் சற்றே யோசித்தார். அப்போது, ஸ்ரீ கிருஷ்ணபகவான் தருமரைநோக்கி ''நீவிர் என்னுடைய எண்ணத்தை யறிந்தாலும், என்னிடத்தில் உமக்கு நம்பிக்கை யிருந்தாலும் உடனே பீமனையும் அர்ச்சுனனையும் என்னுடன் அனுப்புவீராக'' என்று சொன்னமாத்திரத்தில் யாதொரு தடையுமின்றித் தம்பியர்க்குப் புத்திமதி சொல்லி அவர்களை ஸ்ரீ கிருஷ்ண பகவானுடன் அனுப்புவித்தார். மூவரும்

ஸ்நாதக பிராமணர்களைப் போன்றுடுத்து ஜரா சந்தன் வசிக்கும் நகரத்திற்குப்புறப்பட்டார்கள். அவர்கள் அந்நகர் சேர்ந்ததும் அவ்வூரார் பூஜிக்கும் மலைச்சிகரத்தைத் தகர்த்து, அவ்வூர்க கோட்டை வாயில்களில் மாற்றரசர்புகும் வாயிலால் உட்சென்று, வீதிகளில் அகப்பட்ட வஸ்துக்களை யெல்லாம் அபகரித்துக் கடைசியில் அரண்மனை வாயிலடைந்தனர். இவர்கள் பிராமணர்களென்றறிந்த மாத்திரத்தில் அரசன் திடீரென்று தன் ஆசனம் விட்டெழுந்து மரியாதை செய்து உட்காரும்படி வேண்டினன். அவர்கள் அம மரியாதையாவும் ஏற்றுக்கொண்டிலர். ஸ்ரீ கிருஷ்ண பகவான் அரசனைநோக்கி "நீவிர் எம்மை நள்ளிருள கழிந்தபின்பு காண்மின்" என்றனர். அப்போது அரசன் வந்து இவர்களைப் பார்த்து "ஐயன்மீர்! உங்கள் வேஷத்தோடிருப்பவர்கள் சந்தனமும் புஷ்பமும் அணியார்கள். நீங்கள் செய்த துராகிருதமான செய்கைகளையும் செய்யக் கனவிலும் எண்ணார்கள். உங்களுடைய நடவடிக்கைக்குரியகாரணம் யாது?" என்று வினவினன். அதற்கு ஸ்ரீ கிருஷ்ணபகவான் "பிராமணர்களே யன்றி, க்ஷத்திரியர்களும் வைசியர்களும ஸ்நாதகமென்னும் விரதத்தை யனுட்டிக்கலாம். யாங்களணியும் சந்தனம் இந்நாட்டிற்குவரும் லக்ஷ்மீகரத்தைத் தெரிவிக்கும் படியானது. விரோதியின் அரணைச் சரியான வாயிலால் அடைதல் கூடாது. ஆகையா லிதற்குத் தகுந்தபடி செய்தோம். விரோதியினிடமாக எங்கள் வேலையைப் பூர்த்தி செய்யாமல் அவனுடைய மரியாதையை யேற்று விருந்துண்டு கொண்

டிருக்க மாட்டோம்" என்றார். ஜராசந்தன் திடுக்கி ட்டு "ஐயா! யானிழைத்த தீங்குயாது?" என்றான். 'நரபலியிடப் பிரயத்தனம் செய்ததே பெருந்தீங்கு' என்றார். அதைத் தடுக்கும் பொருட்டுத் தாமும் தம் துணைவரும் ஆங்குப் போந்ததாகவும் அவர்களின்னார் என்பதையும் எடுத்துரைத்து, "மகத தேசாதிபதியே! சிறைப்படுத்தியிருக்கிற அரசர்களை விட்டுவிடு வாய்! அல்லாவிடில் யமனுடைய வுலகம் காண்பாய்! யுத்தத்திற்குடனே புறப்படுவாய்" என்றார். அவனும் யுத்தத்திற்குச் சம்மதித்துத் தநயனைச் சிம்மாசனத் திலேற்றி, பீமனுடன் மல்லயுத்தம் செய்ய ஆரம்பித் தான். பதினால்கு நாளாயும் அது முடியவில்லை. அந் நாள் முடிவில் ஜராசந்தனுக்குப்பலம் ஒடுங்கிவருதலை கண்டு ஒரே பிடியாய்ப்பிடித்துச் சுற்றி யடித்து முழ ந்தாளில் அவன் முதுகை வைத்தொடித்தான் பீமன். உடனே ஜராசந்தன் உயிர் துறந்தான். பிறகு ஸ்ரீ கிருஷ்ணபகவான் சிறைப்பட்டிருந்த அரசர்களை விடு வித்தனர். அவரும் பீமார்ஜுனரும் ஜராசந்தனு டைய தேரிலேறி அவ்விடம் விட்டு வந்தனர். சிறை மீண்ட அரசர்களும சிறைப்படுத்தின அரசன் புதல் வனும் யுதிஷ்டிரனை அரசர்க்கரசாக அங்கீகரித்தார் கள். *

அதன் பிறகு தருமருக்கிளையவர்களாகிய நால் வரும் நாற்றிக்கினும் படையெடுத்துச் சென்றனர் அர்ச்சுனன் வடக்கிலும், பீமன்கிழக்கிலும், சகாதே

* வியாச பாரதம், சபாபருவம் § 16 - 24.

வன் தெற்கிலும், நகுலன் மேற்கிலும் சென்றான். இவர்கள் நாற்றிசையிலுமுள்ள அரசர்களை வென்று தம் தமையனைச் சக்கிரவர்த்தியாக அங்கீகரிக்கும்படி செய்தார்கள். நான்கு திக்கிலும் சென்றவர்கள் நவ ரத்தினங்களோடும் கணக்கற்ற திரவியத்தோடும் திரும் பிவந்தார்கள், அவற்றை யெல்லாம் தம் தமையன் முன்வைத்து நமஸ்காரஞ்செய்து அங்கீகரிக்கும்படி வேண்டினார்கள். பிறகு தருமருக்கு இராஜசூய யாகம் செய்துமுடிக்கலாமென்னும் தைரியம் வந்தது. *

மகாபாரதத்தைப் படிக்கும் போதெல்லாம் பூர் வீகத்தில் இந்தியா எவ்வளவு ஐசுவரிய முடையதா யிருந்த தென்பது நன்றாய்த் தெரியவரும். தெய்வ பக்தி முதலும் உலக விஷயங்கள் அதற்குப் பின்னு மாகவிருந்த காலத்து அப்படி யிருந்தது. தெய்வ பக்தி குறையக்குறைய இந்தியாவின் பலமுங் குறை ந்துபோய் அது பற்பல அந்நியர் கையிலகப்பட்டுத் தன்னுடைய பொருளெல்லா மிழந்தது. அந்தக் காலத்திலே நவரத்ன கசிதமான அநேக மாடமாளி கைகளும் கூடகோபுரங்களு மிருந்தனவென்பது தெ ரிய வருகிறது. யுதிஷ்டிரரைக்காண வந்த குடிகளும் அரசரும் பற்பலவித ரத்னங்களும், சுவர்ண நாணயங் களும், சுவர்ணத்தாலாய தட்டு முட்டுக்களும், அத தகைய மற்றைச் சாமான்களும், தந்தப்பிடிகளில் ரத்னங்களிழைத்த பட்டாக்கத்திகளும், பட்டுள் ளிட்ட மெய்க்கவசங்களும், அலங்கரிக்கப்பட்ட ரதங் களும், ஆட்டு ரோமத்தாலாய பற்பல வர்ணம் வாய்

* வியாச பாரதம், சபா பருவம் § 25-33.

ந்த கம்பளங்களும், பற்பல விதமான பட்டு வஸ்திரங்களும், அதிக விலையுயர்ந்த படுக்கைகளும், படுக்கைச் சாமான்களும், பொன்னூல் வெள்ளி நூலிவைகளாற் பற்பல பூவிட்டுச் சித்திரித்துள்ள திரைச்சீலைகளும், பற்பல விதமான வாசனைத் திரவியங்களும்; உயர்ந்த அகிலும் ஆரமும், எண்ணிறந்த யானை, குதிரை, ஒட்டை முதலியனவும் அவருக்குக் காணிக்கையாகக் கொண்டுவந்து வைத்து வணங்கிப் போவார்கள். இந்தியாவி னெப்புறமும் அக்காலத்தில் அதிக ரம்மியமாய்க் காணப்பட்டது. இன்னகாலத்திற்றான் ஏற்பட்டதென்பது இன்னும் சரியாய்க் கண்டறியக்கூடாத ஸ்ரீமத் இராமாயண மகாபாரதங்களில் எடுத்தெழுதப்பட்டிருக்கும் கிரியை, யக்கியம் முதலியவற்றினுடைய பெருமையைப் பார்க்கும்போதே இந்தியாவினுடைய அக்காலத்து நாகரீகத்தினுயர்வும், கணக்கற்ற திரவியமும், ஏராளமான ஐசுவரியமும் மிக்கிருந்தன வென்பதும் நன்கு தெரியவரும். சாமானிய சனங்களும் அதிக நல்ல ஸ்திதியில் இருந்திருக்க வேண்டுமென்பது தெரியவருகிறது. தெய்வபக்தியும் தர்ம சிந்தையும், நன்னடையும் இவைகளின் காரியமாகக் கடவுளது அருளுமிருக்கும் பக்ஷத்தில், விளையாத நன்மையும் உளவோ ? இகபரத்திற்குரிய எல்லாச்சம்பத்தும் அக்காலத்திருந்தன.

இந்தியாவின் பூர்வீக நிலைமை யிவ்வாறாக மிகவும் உயர்ந்தநிலையில் இருந்திருப்ப, இதனையறியாத சிலர் இந்தியா அக்காலத்திருந்த ஏனைய நாடுகளைப் போல மிகவும் தாழ்ந்த நிலையிலிருந்த தென்றும்

அக்காலத்து இந்தியர்களெல்லாம் நாகரீகந்திருந்தாத வர்களென்றும் பலதிறப்படக்கூறி அபசார மிழைப் பாராயினர். அன்னோர் அக்காலத்து நிலைமை இன்ன தென்பதைச் சரித்திரத்தின் உயர்வு வாய்ந்த வியாச மகாபாரதம் போன்ற நூல்களிற்கண்டு தெளிவாராக.

தருமர் செய்த இராஜசூய யாகத்திற்குப் பற் பலநாட்டரசர்களும் வந்துசேர்ந்தனர். பீஷ்மரையும் திருதராஷ்டிரரையும் அழைத்து வரும் பொருட்டுத் தர்மர் தமது தம்பியருள் நகுலனை அழைத்து அஸ் தின புரத்திற்கு அனுப்பினர். அவர்களும், விதுரர், துரோணர், துரியோதனனாதியர், கிருபர், கர்ண னென்னு மிவர்களும் பாரத யுத்தத்தில் வரும் மற் றை வீரர்களும் வந்து சேர்ந்தனர். இவர்களெல் லோரும் வந்து சேர்ந்ததும் யுதிஷ்டிரர் தாம் யாகத் திற்குச் சேகரித்துவைத்த திரவிய முழுவதும் பீஷ் மர்துரோணர்முதலான தம் முன்னோரிடம் ஒப்பித்து மற்றவற்றை நடத்தத் தமக்கு உத்தரவு கொடுக் கும்படி அவர்களை வேண்டினர். யாகம் ஆரம்பித்தது முதற் கடைசிநாள் வரையில் எல்லாம் செவ்வனே நடந்துகொண்டுவந்தன. அன்றுதான் தருமர் சக்ர வர்த்தியானதற் கறிகுறியாய் அவர்மீது பரிசுத்த தீர்த்தம் சம்புரோக்ஷண மாதற்குரிய தினம். இந்தச் சந்தர்ப்பத்திற் கூடிய சபையில் நாரதரும் வந்திருந் தார். இதுதான் இரண்டாவது கூடிய சபை. அச் சபையிலுள்ளாரை யெல்லாம் உற்றுநோக்கினர் முனி புங்கவர். தேவர்களெல்லாம் மானுடராய்ப் பிறக் கப் போகிறார்க ளென்பதும், ஸ்ரீமந்நாராயணனே

மனுஷ்யாவதார மெடுக்கப் போகின்றா னென்பதும், இன்னும் கொஞ்சக்காலத்திற்குள் இச்சபையிலுள்ளா ரனைவரும் மண்ணுலகத்தைத் துறக்கச் செய்விப்பா னென்பதும், தாம் முன்னமே கேட்டிருந்தது இப்போது அவர் தம் ஞாபகத்திற்கு வந்தது. அதை நினைக்கும்போது அவர்க்கு அது மிக்க பயங்கரமாய்த் தோன்றியது. ஆகையால அவர் வாய்திறவாது சிந்தனையோடே வீற்றிருந்தார். பின்வரப்போகிற பெரிய யுத்தத்திற்கு அறிகுறியாய் இந்தச் சபையிலே சில துர்க்குறிகள் நிகழ்ந்தன. யாகார்க்கியத்தைப் பற்பல அரசர்களுக்குங் கொடுக்கும் பொருட்டுப் பீஷ்மர் அதைக் கொண்டுவரும்படி சொன்னார். முதலில் அதை எவருக் களிக்கவேண்டு மென்னும் சந்தேகம் பிறந்தது. இந்தச் சபையிலிருப்பவர்களி லெல்லாம் யாரா முதன்மையானரோ அவர்க்கே கொடுக்கவேண்டியதென்பது எல்லார்க்குந் தெரிந்த விஷயம். யுதிஷ்டிரர் பீஷ்மரைப்பார்த்து "எவர் இச்சபையிற் சிரேஷ்டரென மதிக்கப்படுகின்றவர்? யாருக்கு அர்க்கியத்தை முதலிற்கொடுக்கவேண்டும்?" என்றதற்குப் பீஷ்மர் ஸ்ரீகிருஷ்ணபகவானைக் காட்டி, "ஒளியுள்ள பொருள்களுக்கெல்லாம் எப்படிச் சூரியன் பெரியனோ அப்படியே இச்சபையிலுள்ளோர்க் கெல்லாம் ஸ்ரீ கண்ணபிரான் தலைவர்" என்று சொன்னதும் சகாதேவன் முதலில் அர்க்கியத்தை ஸ்ரீகேசவ பிரானுக்குக் கொடுத்தான். அவரும் அதை ஏற்றுக்கொண்டார். சேதி தேசாதிபதியாகிய சிசுபாலன் மாத்திரம் இதைக் கண்டு கோபங்கொண்டு திடீரென்றெழுந்து, பாண்ட

வர்களையும் பீஷ்மரையும் தங்கள் கடமை தெரிந்து நடவாததற்குக் கடிந்து, "கிருஷ்ணன் அரசனா? அல்லது வயதில்மூத்தோனா? குலகுருவா? ஆர்யனா? அவனைப் பார்க்கிலும் சிறந்தோர் இச்சபையின்கண் யாருமிலரோ? அரசர்களையெல்லாம் வரவழைத்து ஏன் இவ்வாறு அவமானம் செய்விக்கவேண்டும்? அவனுக்கேன் முதலில் வந்தனை வழிபாடுகளெல்லாம்?" என்று கடுகடுத்துச் சொல்லிச் சபையினின்றுந் திரும்பிச்செல்லலும் மற்ற அரசர்களிற் பலர் அவன் பின் சென்றார்கள். இதைக் கண்ட தருமர் அவனைப் பின்றொடர்ந்து வணங்கி உபசார வார்த்தை சொல்லியழைத்தலும் பீஷ்மர் அவரைத்தடுத்து, " உலகிலநாதியாயிருக்கும் பெருமானாகிய ஸ்ரீகிருஷ்ணனுக்கு வந்தனை வழிபாடுகள் முதலிற் செய்யத்தகாதென்று எவன்நினைக்கின்றானோ அவனுக்கு உபசார வார்த்தையேன்? மரியாதையேன்?" என்றார். மேலும் அவர், மானுடவுருக்கொண்டு அங்கிருந்த மகாவிஷ்ணுவாகிய ஸ்ரீகிருஷ்ணபகவானை வெகுவாய்த் துதிசெய்ய ஆரம்பித்தார். பிறகு சகாதேவனும் அம்மாதிரியாகவே புகழ்ந்தான். நகுலனும், "எவனொருவன் கமலக்கண்ணனாகிய ஸ்ரீகிருஷ்ண பகவானுக்கு முதலில் வந்தனை வழிபாடுகள் செய்யானோ அவனுயிர்த்திருந்தும் அவனை நடைப்பிணமாகவேயெண்ணல் வேண்டும். அவனுடன் கலந்து பேசலும் தகாது" என்றான்.

அந்தப் பெரிய சபை முழுதும் அப்போது மிக்க மனக்கலக்கமடைந்திருந்தது. யாகம் சரியாய் நிறைவேற வேண்டுமேயென்னு மேக்கங்கொண்ட

யுதிஷ்டிரரைப் பார்த்துப் பீஷ்மர், " அப்பா தர்மா! சுணங்கன் கேசரியைக்கொல்ல நினைத்தாலும் கொல்ல முடியுமா? அச்சுத (ஸ்ரீ கிருஷ்ணபகவா)ஞே நித்திரை செய்யும் சிம்மம்போன்றுளன்" என்றார். இதைக் கேட்ட சிசுபாலன் கோபத்துடன் பீஷ்மரையும் ஸ்ரீ கண்ணபிரானையும் வைய ஆரம்பித்தான். இதைப் பொறுது பீமன் அவனுயிரை முடிக்க முயன்றான். அப்போது பீஷ்மர் அவனைத் தடுத்து " அப்பா! பீமா! ஸ்ரீ கிருஷ்ணபகவான் சிசுபாலனுடைய தாயாருக்கு வாக்களித்திருக்கின்றனர். அஃதாவது அவளுடைய பிள்ளைசெய்யும் நூறு தப்பிதம் வரையில் அவனை மன்னித்து விடவேண்டுமென்பது" என்று அவன் பூர்வோத்தரத்தை எடுத்துச் சொன்னார்.

* " யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு."

என்பதனைச்சிசுபாலன் சற்றேனும் யோசியாது வைய ஆரம்பித்தான். அந்தோ! ஆன்றோரது மெய்யியல்பை யறியாது சிசுபாலன்போல அன்னாரை யிகழ்ந்து கெட்டழிவா ரெத்தனைபேர்! கடவுளாற் கொடுக்கப்பட்ட பொறிகளைத்தனுள் தலைநின்றதாகிய வாய் அவனையும் அவனருள்வழிப்பட்ட சான்றோரையும் புகழ்ந்து துதித்தற்கே யமைந்ததாயிருக்க அதனையுணராது அநேகர் மதிமயங்குதல் என்னே!

---

* திருக்குறள்.

*" ஆக்கப் படுக்கு மருந்தினைவாய்ப் பெய்விக்கும்
போக்கப் படுக்கும் புலைநரகத் துய்ப்பிக்குங்
காக்கப் படுவனவு மிந்திரிய மைந்தினு
நாக்கல்ல தில்லை நனிவெல்லு மாறே."

என்ற ஆன்றோர் வாக்கு யாவரானும் மறக்கற்பால தன்று. இதுநிற்க, பீஷ்மர் அவனைப் பார்த்து "நீயிப்படி வைவதனால் யாதொரு பிரயோசனமும் அடையாய். யாங்கள் ஸ்ரீ கிருஷ்ணபகவானுக்குத்தாம் முதலில் வந்தனைவழிபாடுகள்செய்வோம். அதற்குரிய பயனைப் பெறுவோம். எவனொருவனிவ்வுலகைவிட்டு விரைவில் ஒழியவிரும்புகின்றானோ அவனே சங்கசக்ரதாரியாகிய கமலக்கண்ணனை வாதுக்கழைக்கட்டும்" என்றார். சிசுபாலனுடைய இறுதிக்காலம் வந்து விட்டதென்று அவர்க்கு நன்றாய்த் தெரியும். அதற்குத் தகுந்தபடி சிசுபாலனும வாசுதேவனை வாதுக்கழைக்க ஸ்ரீ கேசவப்பெருமான் அவனை அருகழைத்து இனிய மொழி மொழிந்து "அப்பா! உன் தாயார் நிமித்தம் நீ செய்து வந்த குற்றத்தையெல்லாம் இது வரையில் க்ஷமித்து வந்தோம். இதனோடு நூறு குற்றங்களாகின்றன. இது வரைக்குந்தான் க்ஷமிக்கும்படி உன் தாயார் வரம்பெற்றுக்கொண்டிருக்கிறாள்" என்று சொன்னதும் சிசுபாலன் மறுபடியும் இவரை நேரிலேயே வைய எத்தனித்தான். இவனிறுதிக்காலமுங் கிட்டியது. அச்சுதனும் தம் சக்கிரத்தை நினைக்க, அஃது அவர் தம் கைசேர்ந்தது; உடனே அவன்தன் சிரசும் துணிக்

* வளையாபதி.

கப்பட்டது. அவன் இடிவீழ்ந்த பாறைபோல் தெறி த்துவீழ்ந்தான்; அவன் விழவும் சண்டை சச்சரவும் மனக்குழப்பமும் ஒழிந்தன. யாகம்முடிவேறுகிறவரை யில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் தாம் முன்னின்று எல்லா வற்றையும் பாதுகாத்தார். யாகமும் செவ்வனே முடி ந்தது. அங்கிருந்த அரசர் குழாங்களும் யுதிஷ்டிர ரைத் தங்கட்கெல்லாம் தலைவராக மதித்து ஆரவா ரித்தன. பிறகு பற்பல வரசர்களும் தத்தம் நாட் டிற்கேகினர். ஸ்ரீ கிருஷ்ணபகவானும் துவாரகைக் குச் சென்றனர். இவர்களெல்லாம் போவதற்குச் சற்று முன்பாக வியாசர் தருமரை யழைத்து இனிவ ரும் கெட்டகாலத்தையும் யுதிஷ்டிரர் பொருட்டு நடக்கும் யுத்தத்தில் க்ஷத்திரியர்களுடைய நாசத்தை யும் குறித்துக்காட்டிப் போயினர். ஆகையால் யுதி ஷ்டிரரும் தாம் சக்ரவர்த்தியாய் அப்போது அதிக ஐசுவரியம் பெற்றிருந்த போதிலும் இனிவரும்காலத் தை உத்தேசிக்கவே முகமலர்ச்சியு மகமலர்ச்சியுமொ ழிய, விசனமுற்று யாதேனுங் கடுஞ்சொற் சொல்ல நேரில் அது யுத்தத்திற்குக் காரணமாய்ப் போய்விடு ம் என்ற பயத்தினால் இன்சொல் அல்லன மொழிவ தில்லையெனச் சபதஞ்செய்து கொண்டார். *

இதற்குப் பிறகு துரியோதனன் மாத்திரம் சில நாட் பாண்டவர்களுடன் தங்கியிருந்தான். மாதுலனா கிய சகுனியையும் தன்னுடன்கொண்டு மயன்கட்டின அந்த விசித்திரமான அரண்மனையின் விசேஷங்களைப் பார்க்கும் பொருட்டுப் புறப்பட்டான். அநேக இடங்

* வியாசபாரதம், சபாபருவம் § 34-46.

களில் மதிமயங்கி நின்ருன். மயனுடைய யுக்தியினுற் சமைக்கப்பட்டவற்றைக் கண்டு மயங்கினன். கண்ணுடி புதைத்திருந்த இடங்களுக்கருகிற்போனபோது கீழிருப்பது ஜலமென மருண்டு தொங்கவிட்டிருக்கும் தன் வஸ்திரத்தைத் தூக்கிக்கொண்டான். ஜலம் நிறைந்திருந்த தடாகத்தை ஆடியென்றெண்ணி நடக்க முயன்று ஜலத்தில் விழுந்தான். ஆடியாலான கதவத்தருகிற் சென்று ஆங்கொன்று மில்லாதிருந்ததைக் கண்டு நேரேபோக யத்தனிக்கையில தன் தலையில் இடித்துக்கொண்டான். இனி யிப்படி மோசம் போகக்கூடாதென்றெண்ணிப் போகையில திறந்திருந்த புதவத்தைக் கண்டு ஆடியாலடைக்கப் பட்டிருக்கிறதென நினைத்து அதன் மீது சாய்கையிற் கீழே திடீரென விழுந்தான். இதைக்கண்ட பீமன் கலகலவென்று சிரித்தான். இதனையும் மற்றவற்றையுங்கண்ட நகுலசகாதேவரும், வினையாளரும் நகைத்தனர். இதைக் கண்டுகொண்ட துரியோதனன் கண்ணும் மனமும் சிவந்தன. அழுக்காறும் வெகுளியு மதிகப்படத் துரியோதனன் மனசஞ்சலத்துடன் சென்ருன். காந்தார தேசாதிபதியும் தன்மாதுலனுமாகிய சகுனியினிடம் இதைக்குறித்து முறையிட்டு இந்த அவமானத்தைப்பொறுப்பதைப்பார்க்கிலும் தன்னுயிர் துறத்தல் நலமெனச்சொல்லி, "தர்மருடைய ராஜாதிபத்யமும், அவர்களுடைய ஐசுவரியமும் பிரபலமான ராஜசூய யாகத்தையுங் கண்டால் யார் தாம் பொறுப்பார்கள்? திருதராஷ்டிரனுடைய பிள்ளைகளோ கிருஷ்ண பக்ஷத்துச் சந்திரன் போற்றேய்ந்து போகின்ருர்கள். குந்

தி புத்திரர்களோ நாளுக்கு நாட் சுக்கில பக்ஷத்துச் சந்திரன் போன்றொளிர்கின்றார்கள்" என்று கதறி னன். மாதுலன் மருகனைக்கட்டியணைத்து இனிய வார்த்தை சொல்லி அவன் கோபத்தைத்தணித்து, "அப்பா துரியோதன! நம்முடைய வரும்படிக்கென்ன குறைவு! அப்படி இதுவும் உனக்குப் போதாதெனக் கருதினாற் பாண்டவர்களுடைய பொருளையும் சேர்த்துக்கொள்ளுகிறது தானே. அஃதென்ன அருமையா? ஆயினும் அவர்களைப்போரில் வெல்ல முடியாது. அவர்களுடைய சேனைகளோ எண்ணிறந்தன. சூது மார்க்கமாய்த்தான் அவர்களை வெல்லல் வேண்டும். குந்தி புத்திரனுக்குச் சூதாடுவதில் மிக்க பிரியமுண்டு. ஆயினும் நன்றாய் ஆடத்தெரியாது. சூதாட வாவென்றழைத்தால் வரமுடியாதென்று சொல்லான். சூதாட்டத்தில் நான் சமர்த்தனென்பது எல்லார்க்கும் தெரிந்த விஷயந்தானே. குரு புத்திரா! மூன்றுலகிலும் இதில் என்னை வெல்ல வல்லுநர் யாவர்? ஆகையாற் சூதாட வரும்படி யுதிஷ்டிரனை வரவழைப்பாய். என் சாமர்த்தியத்தினாற் சூதில் அவன் இராஜ்ஜியத்தையும் மற்றுமுள்ள பொருள்களையும் வென்று உனக்குத்தருவேன். மாந்தரிற்காளை போன்றோய்! ஆனால் இவற்றை அரசனுக்கு முன்னதாய்த் தெரிவித்து விடு. அவனதாணை மேற்கொண்டு சூதாட்டத்தில் யுதிஷ்டிரருடைய பொருள்கள் யாவும் எளிதிற் கைக்கொள்ளலாம்" என்றுதன் மருகன்மீதுள்ள அபிமானத்தாற் குடியைக்கெடுக்குஞ் சகுனியிவ்வாறு துரியோதனனுக்கு ஆறுதல் சொன்னான். பிற

கு சகுனி தன் மைத்துனனாகிய திருதராஷ்டிரனிடஞ் சென்று துரியோதனனுடைய விருப்பத்தைத் தெரிவிக்க, அவன் தன் தநயனை வருவித்து அவன்றன் துர்மதியைக் கண்டித்துப் புத்திசொல்லிப் போவென்றான். ஆயினும் துரியோதனன், "மூர்க்கனு முதலையுங் கொண்டது விடா" வென்பதற்கேற்பத் தான் பிடித்ததையே சாதிக்கவெண்ணி அழுக்காற்றின் பயனாய பல தீமொழி யியம்பலாயினன். சகுனி பாண்டவர்களுடைய இராஜ்ஜியத்தைக் கவரும் பொருட்டுக் கவறுடல் நலமென்றான். திருதராஷ்டிரன் தன் தநயன் மைத்துன னிவர்களுடைய வார்த்தையைக் கவனியாது விதுரருடன் யோசனை செய்தபிறகுதான் பதிற் சொல்வேனென்று சொல்லி விதுரருக்கு ஆளனுப்புவித்தான்.

துரியோதனன் தன் தகப்பனாரைப் பார்த்து, "ஐயா! தாங்க ளென்னுடைய விருப்பத்திற்கியையா விடின் என்னுயிர் உடனே துறப்பேன்; அப்படித் துறந்தபின்னர் நீவிரும் விதுரரும் சுகமடைவீர்கள்" என்று புலம்பிக்கொண் டிருந்தான். விதுரர் வந்தவுடன் தன் புத்திரன்மீதிருந்த காதலினால், அவருடன் தன் தநயனுடைய விருப்பத்தையுந் தன்னுடைய சம்மதத்தை அவன் பெற்றதையுஞ் சொல்லிப் பாண்டவர்களிடம் அவரை அதனிமித்தம் தூது செலுத்தினன். விதுரர் மிக்க மனக்கிலேசமுற்றவராய்ப் பீஷ்மரிடம் சென்றார். குருட்டரையன் மறுபடியும் தன் மூத்த பிள்ளையை வருவித்து "உன்னெண்ணத்தை நிறைவேற்ற வேண்டா" மென்று மிக்க வினயத்து

டன் கேட்டுக்கொண்டான். அவன் என்ன சொல்லி யும் * " கொடிறும் பேதையுங் கொண்டது விடா" தென்பதுபோல் முரட்டுத்தனமாய் நின்றான். இவன் அவர்களுடைய மாளிகையில் தனக்கு நேர்ந்த குறை களை யெல்லாமெடுத்துச் சொல்லி முறையிட ஆரம் பித்தான். தன் புத்திரனைப் பார்த்து " அப்பா, அழு க்காறுடையவ னாகாதே, அவர்களுடைய பொருள் களைக் கைக்கொள்ள எண்ணுவது மிக்க அறிவீனம். அந்தத்தில் அஃது அதிக அநர்த்தங்களை விளைக்கும்.

† " அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்."

அதிக ஆசையுள்ளவன் உள்ளதுமிழப்பான். தனக் குள்ள வரையில் திருப்தியுடையவன் சுகமடை வான்" என்று நல்லறிவுசுடர்கொளுத்தியும் துரி யோதனன் மனவிளக்கமின்றித் தான் நினைத்ததையே சாதிக்க முயன்றான். தகப்பனும் தன் மகன் தனது விருப்பத்திற்கு விரோதமா யிருப்பினும் தநயன்மீ துள்ள ஆர்வத்தினாற் சூதாடுவதற்குச் சம்மதித்து விடைதந்தான். அதனால் வரக்கூடிய கேடுகளின்ன வெனத்தெரிந்திருந்தும் கண்ணொளியோடு மனவொ ளியுமிழந்த திருதராஷ்டிரன் 'விதி' என்பதை விலக்க முடியாது என்றெண்ணினான். ஐயோ பாவம் ! ஒரு வன் தன் வினைக்குத் தானே காரணனென்பதையும், ஆறறிவுயிர்க்குரிய பகுத்தறிவு தனக்கிருக்கும் வரை

* திருவாசகம். † திருக்குறள்.

க்கும் ஊழை மாற்றுவதற்கு இவன் வல்லவனென்பதையும் அறியான் போலும்! விதுரர் சூதை விரும்பாதவராதலாற் கடைசியில் தம் தமையனை அணுகி "ஐயா! தங்களுடைய உத்தரவு அவ்வளவு சரியானதாகத் தோன்றவில்லை. இச்சூதாட்டம் நம்மவர் நாசத்திற்குக் காரணமாகும்; சற்று யோசிப்பீராக. பிறர் நலங்கண்டு சந்தோஷப்படுதலின்றி அசூயைமேற்கொண்டு மனம் புழுங்குதலும், அது காரணமாக அவர்க்குத் தீங்கிழைக்கப் புகுதலும் முதற்கட் சிறிது அவர்கட்குத் துன்பமும் இவர்கட்கு இன்பமும் தருவனபோற் றோன்றினும், இறுதியில நிலைமாறி அவர்கட்கு என்றென்றுங் குன்றாப் புகழும், இவர்கட்கு ஒருநாளும் நீங்காத துயரமும் இழிவும் வந்தெய்தும். பொறாமை மேலிட்டிறும் பிறர்க்குத் துன்பஞ்செய்தாருள் உய்ந்தவரெவரே? இதனை யுய்த்துணராமல் அறிவுதிரிந்து நாம வேறுபட ஒன்றுங்கருதப்படாது.

* "உருவழிக்கு முண்மை யுயர்வழிக்கும் வண்மைத்
திருவழிக்கு மானஞ் சிதைக்கு—மருவு
மொருவரோ டன்பழிக்கு மொன்றல்ல சூது
பொருவரோ தக்கோர் புரிந்து"

என்று இன்னனம் சொல்லியும் அரசன் வேறுத்தரவு அளியாததைக் கண்ட விதுரர், தமையனது ஆக்ஞையை நிறைவேற்றவேண்டிக் காண்டவ பிரஸ்தத்திற்குப் பாண்டவர்களிடம் தூதுசென்றார். நன்மையும் அறமும் ஓர் உருக்கொண்டு வந்தாற் போன்ற

* நளவெண்பா.

விதுரர் தம்மனத்திற்கு விரோதமாக இவ்வாறு தூது செலலற்கிசைந்தது நேரிதன்றெனச் சிலர் கருதலாம். எப்போதும் அரசன் ஏவிய தொழில் எத்தன்மையதாயினும் அதன் குணகுணத்தை ஆராய்தலின்றி அதனைச் செய்துமுடித்தலே குடிகளுக்குற்ற கடனாதலானும், நூல்களாற் கூறப்படும் ஐங்குரவருள் தமையனும் ஒருவனாதலின் அவனது ஆணைவழி யொழுகுதல் கடமையாதலானும், விதுரர் அங்ஙனம் தூதுசெல்லற் கிசைந்தார். என்னே நம்மவர் தம் அரசவிசுவாசம்! அரசன் அல்வழி யொழுகினும் அவனாணை கடப்பரோ அவர்? அங்குச்சென்றதும் யுதிஷ்டிரரைக்கண்டு அவர்தம் பெரிய பிதா தாம் புதிதாய்க் கட்டுவித்த மாளிகையில் வந்து தம் தநயரோடு சூதாடும்படி வேண்டினாரென்று சொல்லலும், யுதிஷ்டிரர் விதுரரைநோக்கி,

* " அறத்தைவேர் கல்லு மருநரகிற் சேர்க்குந்
திறத்தையே கொண்டருளைத் தேய்க்கு—மறத்தையே
பூண்டுவிரோ தஞ்செய்யும் பொய்ச்சூதை மிக்கோர்க
டீண்டுவரோ வென்றார் தெரிந்து"

என்பது போன்றவற்றைச் சொல்லி, அதன் பயன் சண்டையாய் முடியுமென்னுங் காரணத்தால் அதை வேண்டாமென்று மறுத்து, விதுரர்தம் அபிப்பிராயம் யாதென வினவினார். அதற்கவர் தருமனை நோக்கிச் "சூது சகல தௌர்ப்பாக்கியத்திற்குங் காரணம்; சூதாடுவதற்காக உன்னை வருவித்தல் வேண்டாமென்று

* நளவெண்பா.

அரசற்குச் சொல்லித்தடுக்க முயன்றேன். அவன் என் வார்த்தையைக் கேட்டானல்லன். மேலும் என்று வியன்றவளவில்,

*"ஐயநீ யாடுதற் கமைந்த சூதுமற்
றெய்துநல் குரவினுக் கியைந்த தூதுவெம்
பொய்யினுக் கருந்துணை புன்மைக் கீன்றதாய்
மெய்யினுக் குறுபகை யென்பர் மேலையோர்"

*"எள்ளுக சூதினை யிகலி வென்றதூஉங்
கள்ளமேற் கொடுவலை கரந்து வேட்டுவ
ருள்ளுற வமைத்திடு முணவை யோர்கிலாப்
புள்ளின மருந்தின போலு மென்பவே"

என்பனவற்றை முன்னொரு காலத்து நளற்குச் சொல்லியவண்ணம் இப்போது யானும் துரியோதன னுக்குச் சொன்னேன். அவனு மதைக்கேட்டா னல்லன். எதுயுக்தமோ அதன்படி செய்வாய்" என் றார். "திருதராஷ்டிரர் ஆக்ஞையாயிருந்த போதி லும் சூதாட எனக்குவிருப்பமில்லை" என்றார் தருமர். ஆயினும் என்செய்வார் இவர்! க்ஷத்திரிய தருமம் குறுக்கே நின்றது. அதாவது 'சூதாடுவையோ என்று சொல்லியழைத்தால் யான் வரமாட்டேன் என்று சொல்லுதல் கூடாதென்பது.' இதை நினைத்துத் தருமர் விதுரரைநோக்கி, "ஐயா, நான் அங்கு வருவ தற்கு யாதொரு தடையுமில்லை. எனக்கோ சூதாட விருப்பமில்லை. சகுனி என்னை அழையாவிடின் யான் ஆடேன். அவன் என்னைப் பரிகாசஞ்செய்யு மெண்

* நைடதம்.

ணத்துடன் அழைக்கும் பக்ஷத்தில் ஆடாதிரேன், அதை விரதமாய்ப்பூண்டேனாகலின்" என்றார்.

தருமர் தாமும் தம் தம்பியரும் தையலும் அஸ்திணபுரத்திற் கேகினார். தர்மருக்குச சூதாட்டத்தி லிருந்த விருப்பத்திற்களவில்லை. ஆயினும் தம் மதியினால அதனை வெளிப்படுத்தாது அடக்கிவைத்தனர். அவர்க்கிருந்தஇக்குறைவும்நீங்கும்பொருட்டுத்தேவர்கள் இமமாதிரியாகக் கொண்டுவந்து விட்டார்கள். அவர்கள் அஸ்திணபுரம சேர்ந்ததும் புதிதாய்க் கட்டுவித்ததோர் மாளிகையிற் றங்கினர். இதிற்கூடினது தான் மூன்றாவது சபை. இதனோடு பாண்டவர்க்குரிய தீங்கும் மேன்மேல் மூடுகி வளர்ந்து உயர்நிலையையுற்றது. சப்த மேகங்களும் பேரிடி முழக்கஞ் செய்து அடைமழை பொழிவதன் பொருட்டு ஒருங்குகூடி யெழுதல போலப் பாண்டவர்க்கு இனி வரக்கூடிய தீங்குகளெல்லாம ஓர் உருவெடுத்து முனைந்து நின்றன.*

சூதாட்டத்தில் வல்லவனாகிய சகுனி தருமரை நோக்கி "என்னுடன் சூதாடநும்மால் முடியுமேற் சீக்கிரம் வருக" என்றழைத்தனன். தருமர் அதற்குச் சம்மதித்து ஆட்டத்திலாயினும் சூதிலலாதிருத்தல் வேண்டுமென்று விரும்பினர். சகுனி "யான் தான் ஜயம் பெறுவேன்; இது நிச்சயம்! உம்மால் முடியாதென்று நினைத்திராகில் ஆடாதுவிட்டு விடலாம்" என்று பரிகாசமாய்ச் சொன்னான். அதற்குத் தருமர்,

* வியாசபாரதம், சபாபருவம் § 47—58.

*" வேலை கரையிழந்தால் வேத நெறிபிறழ்ந்தான்
ஞால முழுது நடுவிழந்தாற்—சீல
மொழிவரோ செம்மை யுரைதிறம்பாச் செய்கை
யழிவரோ செங்கோ லவர்"

என்று நளன் சொன்னதுபோலவே தாமும், " சொன்னசொற் பிறழேன். சத்தியத்தினின்றுந் தவறேன். இந்த என் சபதம்" என்றார். ஆயினும் அவருடன் தகுந்த பந்தயம் வைத்தாடக்கூடியவர் யாவருளர்? அதற்காகத் துரியோதனன் தான் முன் வந்து தன் ஆஸ்தியையெல்லாம் பந்தயமாகவைத்துத் தனக்குப் பிரதிநிதியாய்த் தன் மாதுலனை யாடச் செய்தான். " சூதாட்டத்தில் ஒருவர் மற்றொருவர்க்காக ஆடுவது கூடாது. இது வழக்கத்திற்கு விரோதமானது; ஆயினும் தகாததை மேற்கொண்டொழுக விருப்ப மிருக்கும் பக்ஷத்தில் ஆட்டத்தை ஆரம்பிக்கலாம்" என்றார் தர்மர்.

ஆட்டத்தையும் ஆரம்பித்து விட்டார்கள். தர்மர் தம் முத்துமாலையை முதன் முதற் பந்தயமாக வைத்தார். வட்டை உருட்டினான் சகுனி. உடனே " மாலையை வென்றேன்" என்றான். பிறகு கனக்குவியல் பொன்னையும் வெள்ளியையும் மற்றுலோகங்களையும் வைத்தனர். அவற்றையும் வென்றான் சகுனி. தன்னிரதத்தை வைத்தார். அதையும் உடனே வென்றான். பிறகு பெண்ணடிமைகளையும் வைத்தார்; உடனே, 'வென்றேன்' என்றான்சகுனி. பிறகு ஆணடிமை

* நளவெண்பா.

களைப் பந்தயமாக வைத்தனர். அவர்களையுந் தன வாக்கிக்கொண்டான். பிறகு தர்மர் தம் களிற்றினத் தையும் பிடியினத்தையும், பிறகு சதுரங்கத்தின் மற்ற வற்றையும் வைத்தார். சகுனி முன்போலவே 'வென்றேன்' என்றான்; இவைகளையும் முன்போலவே தனவாக்கிக் கொண்டான். இதனைப் பார்த்திருந்த விதுரர் மனம் பொறாது, பாண்டவர்களுடைய நிலையைக்கண்டு பரிதபித்துத் தம் தமையனைப் பார்த்து "ஐயகோ! இப்போதாயினும் இதனை நிறுத்துமின். கவறாடல் கடைசியில் அநர்த்தமாய் முடியும். துரியோதனன் பாண்டவர்களுடன் சூதாடுவது! அவன் வெல்வதைக்கண்டு பரமானந்தங் கொள்கின்றீரே! இது தான் கடைசியிற் பெரும் போர்க்குக் காரணமாய் முடியும். அதன் காரியமாக மனிதர்களெல்லாம் நாசமடைய வேண்டிவரும். பாண்டவர்களுடைய பொருள்களைக் கவர்வதனால் என்ன லாபம் அடையப் போகின்றீர்? இதற்குப் பதிலாய்ப் பாண்டவர்களையே வென்று உம்மவராக்கிக் கொண்டால் அவர்களுடைய பொருள்களைவிட அவர்கள் மிக்க பிரயோசன முடையராவார்கள். சூதாட்டத்திற் சுவலனுடைய சாமர்த்தியம் நமக்கெல்லாம் தெரிந்த விஷயந்தானே. இந்த மலையரசனுக்கு அநேக விதங்களில் வட்டை யுருட்டி இந்திரஜாலம் செய்யத் தெரியும். இவை எல்லாம் மோசமே யொழிய வேறொன்று மில்லை. வந்த வழியே சகுனியும் போகட்டும். ஓ பாரதா! பாண்டவர்களுடன் போர் புரிவதற்கு வைத்துக்கொள்ளாதே" என்று தெருட்டி

ஞா. துரியோதனன் விதுரரை நோக்கி "ஐயா! அன்னமிட்ட வீட்டிற் கன்னமிடுவீர் போலும்! உண்ட வீட்டிற்கு இரண்டகம் நினைக்கலாமோ? ஏன் இவ்வளவு பக்ஷபாதமாய்ப் பேசுகின்றீர்? இவ்விடத்தை விட்டுப்போய்விடும். கற்பற்ற பெண்டிரை எவ்வளவு வாஞ்சையுடன் வைத்திருந்த போதிலும் அவர்கள் தம் புருஷர்களை மோசஞ் செய்து பரபுருஷரிடஞ் சேர்வதிலேயே எண்ணமுடையவர்களாயிருப்பார்கள். நானென்செய்வது?" என்று கடுகடுத்து மொழிந்தான். இவ்விகடமான வார்த்தை நாராசம் போற் காதிற்பாய்தலும் விதுரர் தம் தமையனை நோக்கிப் "பக்ஷபாதமில்லாமல் தங்களுடைய எண்ணத்தைத் தெரிவிப்பீர்களாக" என்று சொல்லிப் பிறகு துரியோதனனைப் பார்த்து "அப்பா துரியோதனா! என் மீது சோபிப்பதனால் யாது பயன்? குணத்தைக் குறியாது செவிக்கினியன மாத்திரம் சொல்வோர் உன்னுண்மைச் சிநேகிதராகார். அத்தகையர் உன்னன்மையை நாடினவரல்லர். அவர்களை நம்பி மோசம் போகாதே. அத்தகையர் அநேகர் அகப்படுவார்கள்.

*"இனியவ ரென்சொலினு மின்சொல்லே யின்னார்
கனியு மொழியுங் கடுவே—யனல்கொளுந்தும்
வெங்காரம் வெய்தெனினு நோய்தீர்க்கு மெய்பொடிப்பச்
சிங்கி குளிர்ந்துங் கொலும்"

†"நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு"

---

* நீதிநெறிவிளக்கம். † திருக்குறள்.

என்று நூல்கள் கூறுவன அறியாயோ? இத்தகைய சிநேகிதர்கள் அகப்படுவதோ மிகவுமருமை. விருப்பு வெறுப்பென்பதை மாத்திரம் கவனியாது நலமனைத்தையுங் கவனித்துப் புத்தி கூறுபவனெவனோ அவனேதான் உன் உண்மையான சிநேகிதன். நீ என்னையிகழ்ந்தால் எனக்குப் பாதகமில்லை" என்று சொல்லி வருத்தத்துடன் அச்சபையினின்றும் நீங்கிச் சென்றனர்.

அவரிவ்வளவு சொல்லியும் சூதாட்டம் நின்றபாடில்லை. தருமராது ஆடுமாடு, சதுரங்கசேனை, வேலையாட்கள், குடிகள், சிற்றரசர் எல்லாம் பந்தயமாகச் சென்றன. இனி ஐவரும் திரௌபதையுந் தாமிருக்கிறார்கள். அந்தோ! நகுல சகாதேவர்களையும் பிறகு பீமார்ச்சுனர்களையும் தம்மையும் பந்தயம் வைத்திழந்தார். "உம்முடையதென்று ஏதேனுமிருப்பின் அதையும் வைத்தாடும்" என்றான் சகுனி. தம்தம்பியர் நால்வரும் பலவீனராய் நின்றார்கள். மேலும் அடிமைத்தன்ம பூண்டு பராதீனராய் விட்டார்கள். ஐயகோ! அவர்கட்கும் துரதிஷ்டம் வந்துசேர்ந்ததே! அதை மாற்று மார்க்கம் யாதொன்றும் காணோம். அவர்கள் விதியானது இதனினும் யாது கொடிய செய்யவல்லது? ஐவரும் துக்காக்கிராந்தராய் மௌனமாயிருக்கும்போது சகுனி தருமரைப்பார்த்து "ஐயா! ஏன் மௌனம் சாதிக்கின்றீர்? உம்முடைய பொருள் இன்னுமொன்றிருக்கின்றதே. வேண்டுமாயிற் பாஞ்சாலியைப் பந்தயம் வைத்துப் பாண்டவரை மீட்டுக்கொள்ளுமே" என்றான். அவனுடைய பெயர் சகுனியின் வாயினின்

றும் வரக்கேட்டுத் துன்பமுற்றுத் துடித்து 'அந்தோ! நமது கதியும இப்படியாயிற்றே! கிருஷ்ணையையுந் துறக்க வேண்டுவதோ? அவள் இல்லறகதை எவ்வளவு மேன்மையாய நடத்திக்கொண்டு வந்தனள்? மறறெவரையும் இல்லாளெனத் தருமோ? இவளையும் பந்தயம் வைத்துத் தோற்க வேண்டுமா?' என்று தமக்குட் சிந்தித்துக் கடைசியில் ஒரு வேளை ஜயித்தால எலலாரையு மீட்கலாமென்ற எண்ணத்தினுலும் சூதினிடத்திற் றமக்கிருந்த ஆவலினுலும் அவளையும் பந்தயமாக வைத்தார். சபைமுழுதும் மனங்கலங்கி நின்றது. அழுவார் சிலரும் சிரிப்பார் சிலருமாயினர். அந்தோ! சகுனிவட்டை உருட்டித் திரௌபதையையுங் கொண்டான்.

சூதாட்டத்தில் துரோபதையை வென்றதும் துரியோதனன் விதுரரை நோக்கிப் "பாஞ்சாலியைப் பாண்டவர்களுக்கு முன்பாகக் கொண்டுவந்து நிறுத்துங்கள். வீடு வாயில்களுக் கலகிடச்செய்யுங்கள். பணிப்பெண்களுறைவிடத்திருத்துங்கள்" என்றான். விதுரர் அவனைக்கடிந்து பதிற் சொலலியும் துரியோதனன் அதனைக் கவனிக்கவில்லை. தன் வெற்றியின் பிரதாபத்தைக் கருதினனே யொழிய மற்றவர்க்கும் தனக்கும் வரும் அவமானத்தைக் கவனித்தானல்லன். வினையாளனொருவனை விளித்துத் திரௌபதையைத் தன்முன் கொண்டுவரக் கட்டளையிட்டான். அவனும் அப்படியே கேசரியின் குகையிற் சுணங்கன் நுழைவதுபோல் நுழைந்து, பாண்டவர்களுடைய

பத்னியைப் பார்த்து அவளருகிற் சென்று, அவளைத் துரியோதனன் தர்மரோடு சூதாடி வென்றனனென்றும், அவளைப் பணிப்பெண்ணாக்க நினைத்திருக்கின்றானென்றும் சொன்னான். திரௌபதை நடந்தவற்றைக் கேட்டுத் திடுக்கிட்டுப் பிறகு சிந்தித்துத் தெளிந்து அச்சமயத்திற்குத் தனக்குத் தோன்றிய யுக்தியைக்கொண்டு தன்மானத்தையுங் காத்துத் தன் புருஷர்களுடைய அவமானத்தையும நீக்கமுயன்றாள். தருமர் தம்மை முன்னர்த் தோற்றனராயின் சுவாதீன மிழந்த அவர், தன்னை வைத்தாடுதற்கு நியாயமில்லை யென்றும, அவர் தம்மைத்தோற்றபோதே தானும் அவருளடங்கியவளாகக் கருதப்படின், தன்னை மீட்டும அவர் வைத்தாடவேண்டிய அவசிய மில்லையெனறுங் கருதி, வந்தவனை யழைத்து, "நீபோய்த் தருமர் தம்மை முன்னர்த்தோற்றனரா அல்லது என்னை முன்னர்த் தோற்றனரா வென்று அவரைக்கேட்டு இங்குவா" என்றாள். அவனங்குச் சென்று தருமரைக்கேட்க அவர் வெட்கத்துடன் தலைகுனிந்து நின்றனர். துரியோதனன் அவனைப் பார்த்து "நீ யவளை யிங்கே கொண்டுவா. அவளே யந்தக்கேள்வியைக் கேட்டுப் பதில்தெரிந்து கொள்ளட்டும்" என்றான். அத்தூதுவன் தான் அத்தகையதீச்செயலை நிறைவேற்றவேண்டுமே யென்னுந் துக்கத்தோடு திரௌபதையினிடஞ் சென்று துரியோதனன் சொன்னதைத் தெரிவிக்க, அவள் "நீ சபையிலுள்ள பெரியோர்களிடம் நான் சொன்ன

தைச் சொல். அவர்கள் என்னை என்ன செய்யச் சொல்கிறார்களோ அப்படியே செய்வேன்" என்றாள். தூதன் திரும்பிவந்து அவள் சொன்னதைத் தெரிவிக்க, யுதிஷ்டிரர் இப்போது தாம் அவளையுந் துறந்ததை நினைத்துத் தமக்குவந்த மானபங்கத்தையும் பொறுத்து 'இவ்விடம் வரும்படிசொல்' என்றார். தூதுவன் மறுபடியும துரோபதையினிடம் செல்லச் சற்று யோசித்து நிற்கையில், துரியோதனன் ஆலசியம பொறுக்கமாட்டாது துச்சாதனனை யழைத்துச் "சீக்கிரம் துரோபதையை யிவ்விடம் கொணர்வாய்" என்றான். இப்படிச்சொல்லி முடிப்பதற்கு முன்பே, அவன் தன்னிடம் விட்டுக் குதித்தெழுந்து சிறிதேனும மான மென்பதின்றி அவளிருந்த அந்தப்புரஞ்சென்று, "பாஞ்சாலீ! உன் நாணத்தைச்சற்றே யொதுக்கிவைப்பாய். அறையிலென் செய்கிறாய்? அம்பலத்திற்குவா" வென்று சீறினன். துரோபதை நடுநடுங்கி ஏக்கங்கொண்டு இருந்த விடத்தை விட்டுத் துரியோதனன் துச்சாதனன் என்னு மிவர்களுடைய தாயார் மனைவியிருந்த இடந்தேடி யோடினள். துச்சாதனனே, மயிலைப்பிடிக்கத் தொடரும் வேடன்போலவும், மானைக் கௌவிக்கொள்ளப் பாயும புலிபோலவும், அவளைப் பின்றொடர்ந்து கூந்தலைப்பற்றி யிழுத்துச் சபைக்குக்கொணர முயன்றான். ஐயகோ! இவட்கும் இக்கதியேன் வாய்த்தது? அவள் மீது காற்றுங் கடுகி வீசியறியாதே! அயலார் கண்ணும் தாக்கியிராவே! சில நாளைக்கு முன்புதான் கங்கை முத

ஷிய புண்ணிய தீர்த்தங்கள் கொண்டு மந்திரோச்சாரணத்தோடு அபிஷேகம் செய்யப்பட்டு விளங்கும் அவள் தன் கூந்தலைப்பற்றி யிழுத்துக் கொண்டு வந்து அவளைச் சபையின்கட் சேர்த்தான். அந்தோ! உலகிற்கெல்லாம் ஒங்கொருகலைவனாகி யொளிர்ந்து சாம்பிராஜ்ய பட்டாபிஷேகம் பெற்ற அரசர்க்கரசனுடைய தேவியோ இந்நிலையுறுவது! மகளிர்க்குரிய மென்மைத் தன்மையைப்பற்றிச் சிறிதேனுங்கருதாது, பாவமேயோருரு வெடுத்தனைய துச்சாதனன் இன்னணம்புரிந்த செயல் சான்றோரனைவரானும் பழிக்கப்படுவதொன்றன்றோ? ஐயோ! அந்தப்புரத்து உடையோடும் இவ்வலங்கோலத்தோடும் இனிச் சபையிலுள்ளார் ஏறட்டுப்பார்க்கப் பங்கயத்தேவி போன்றவளைக் கண்ணுங் கண்ணீருமாயிருப்பவளை யுடனே சபையி னுப்பண் நிறுத்தினன். அவன் தன்னை மானபங்கஞ் செய்ததைக் குறித்து மிகசோபங்கொண்டு துரோபதை வேறு வழியொன்றுங் காணப்பெறாது, சபையிலுள்ள வீரர்களை நோக்கி "வீரர்காள்! இப்படியுஞ் செய்தல் தகுதியோ? உங்கட்கு மான மெனபது சிறிதேனும் இல்லையோ? இஃதுங்கள் குலத்திற் கடுக்குமோ? குருகுல மன்னர்தந் தலைவன் இக்குற்றத்தைக்கண்டும் ஏன் மௌனமாயிருக்கின்றான்?" என்றும், இன்னும் பற்பல வாறாகவுஞ் சொல்லிப் பிரலாபித்து நின்றாள்.

அவளுடைய நாயகர்களும் அங்கிருந்தார்களே! அவர்களால் ஒன்றுஞ் செய்ய முடிய வில்லையோ?

ஐயோ பாவம்! என் செய்வார்கள்! தங்களையுந் தோற்
றுத் தம்வயமற்றுப் பராதீனமுற்று இருந்தார்க ளா
கையால் ஒன்றுஞ் செய்வதற்கில்லை. இதனை யறிந்த
துச்சாதனன் அவளை 'அடிமை' என்றும் 'பணிப்
பெண்' என்றும் இன்னும் மற்ற இழிசொற்கொண்டு
வைது அவள் வஸ்திரத்தைப் பற்றி யிழுத்தான்.
கர்ணனும் கலகலென்று சிரித்தான். சகுனியுஞ் சந்
தோஷமுற்றான். துரியோதனன் துச்சாதனன் முத
லியோரடைந்த ஆனந்தத்திற் களவு முண்டோ?
இவர்கள் நால்வருந்தாம் அவளது நிலைமையைக்
கண்டு மிக்க களிக்கூத்தாடினார்கள். பிறகு பீஷ்மர்
எழுந்து துக்கமேலீட்டினால் மெதுவாய்ப் பேச வா
ரம்பித்தார். துரோபதைகேட்ட கேள்விக்குத் தக்க
சமாதானம் சொல்ல அவராலும் முடியவில்லை. 'யுதி
ஷ்டிரன் தன்னைத் தோற்ற பிறகு தனக்கொன்றுங்
கிடையாது; ஆயினும் மனைவியைப் புருஷனி னின்
றும் பிரித்துப்பார்க்கலாமா? அவளோ அவனிடத்
தைக்கியம்' என்று தனக்குள் யோசித்து "இதற்கெப்
படி முடிவுசொல்வது? சரியாய் முடிவு சொல்வ தசா
த்தியம்" என்றார். அச்சபைக்கண் அவராலேயே
தக்க சமாதானம் சொல்ல முடியாமற்போனால் யார்
தாம் முடிவு சொல்ல வல்லவர்? துச்சாதனன் துன்
புறுத்துவதை நிறுத்தினானல்லன். அவளோ கண்
ணீராறாய்ப் பெருகவிட்டுக் கதறுவா ளாயினாள்.
இதைப் பீமனாற் சகிக்க முடியவில்லை. அவனுக்குக்
கோபம் மீதேறி வருகின்றது. தன் தமையனையும்

அவளைப் பந்தயத்தில் வைத்திழந்ததற்காகக் கடிந்த னன். 'எல்லாவற்றையுந் துறக்கினுந் துறக்கலாம். உயிர்க்குயிராகிய உத்தம பத்னியையும் இவ்வாறு துறக்கலாமோ?' என்றான். "அரசே, அவள் நிமித்தம் உங்கள்மீது கோபித்துக்கொள்ள வேண்டியிருக்கின்றது. அவளைப் பந்தயம் வைத்தாடின கையைக்கொளுத்திவிடுகிறேன். சகாதேவா! கொண்டுவா நெருப்பு" என்றான் பீமன். அவனுடைய கர்ச்சனை கோடையிடி போனறு, நிஸ்ஸப்தமாயிருந்த அச்சபையிலுள்ளோரைப்போய் வாட்டியது. அர்ச்சுனன் அவனுடைய அவசரத்தைக் கண்டு கண்டித்து, "யுதிஷ்டிரர் தம்மெண்ணத்துக்கு மாறாய் 'மாற்றானுக் கிடங்கொடேல்' என்பதற்கேற்பக் கம்பீரமேலிட்டு அவ்வாறு நடந்தனரேயன்றி வேறென்ன? அப்படி நடந்தபோதிலும் தமையனை எதிர்த்துப் பேசலாமோ?" என்றான். பீஷ்மர் அருச்சுனனை நோக்கி "தனஞ்சயா! யுதிஷ்டிரன் க்ஷத்திரிய தர்மத்தின்படி செய்தானென்பதை அறிந்தேனாகையால் யானும் வாயை மூடிக்கொண்டிருக்கின்றேன். வேறுவிதமாயிருக்கும் பக்ஷத்தில் நானே அவனுடைய இரண்டு கரங்களையும் பற்றித் தீயிட்டுச் சாம்பராக்கியிருக்கமாட்டேனா?" என்றார்.

நூற்றுவரில் துரியோதனனுக்கு இளையோனும் நற்குணம் வாய்ந்தவனுமாகிய விகர்ணன் சபையினின்று அதிக கோபக்குறியுடனெழுந்து சபையாரைக் கடுகடுத்து நோக்கி "அரசர்காள்! நன்றாயிருக்

தது நுமசெயல! இதுவோ அரசியல்! இதுவோ அறநிலை! நீவிரனைவிரும் ஆணொடு பெண்ணொடு பிறந்தவர்களல்லீரோ? துரியோதனனுடைய வல்லமைக் கஞ்சுகின்றீர்களோ? தருமதேவதைக்கஞ்ச வேண்டாவோ? ஏன் எல்லாரும் மௌனம் சாதிக்கின்றீர்கள்? திரௌபதை கேட்ட கேள்விக்கு ஏன் சமாதானம் சொலலவில்லை? ஈறறே வாய்திறந்துரைமின். அறிவான் மிக்கீர்!" என்றதும அங்கிருந்த அரசர்களிலநேகர் அவனைக கொண்டாடினார்கள். கர்ணன் எழுந்து விகர்ணன் தனக்கு முதியோர் முன்பு வாய் கூசாது பேசினதற்காகக அவனைக் கண்டித்துத் திரௌபதையை யிம்மாதிரி நடத்தியது நியாயந்தானென்று சொல்லித் துசசாதனனை அழைத்துப் பாண்டவர்களுடைய உத்தரீயத்தையும் பாஞ்சாலியின் சேலையையும் உரியும்படி உத்தரவு செய்தான். இப்படிச் சொன்ன மாத்திரத்திற் பாண்டவர்கள் தங்கள் மேலிருந்த வஸ்திரங்களைக் களைந்துவைத்து விட்டார்கள். துச்சாதனன் துரோபதை தரித்திருந்த ஒற்றைத்துகிலையும் உரிய ஆரம்பித்தான். மானுடர் சகாயமற்று நின்றவள் ஆபத்பாந்தவனை ஸ்ரீமந்நாராயணனே தனக்குக் கதியென்று நினைத்து, அவனது திவ்ய ஸ்வரூபத்தைத் தன்மனத்தூன்றி,

எந்தாய்! காக்க; இறைவா! காக்க;
மன்னா! காக்க; மணாளா! காக்க;
அஞ்சன வண்ணத் தரியே! காக்க;
குஞ்சரங் காத்த கோவே! காக்க;
கஞ்சனை யடர்த்த கண்ணா! காக்க;

கருங்கடற் றுயிண்ற காரே ! காக்க ;
ஆயிரந் தோளுடை யடுபோர் வாணனை
நேமியிற் றுணித்த நெடியாய் ! காக்க ;
சேதி பதியைச் சிரந்துணித் தருளிய
ஆதி மூலத் தண்ணலே ! காக்க ;
பேய்முலை யுண்ட பிரானே ! காக்க ;
மருதிடைத் தவழ்ந்த மாபா ! காக்க ;
பெருவரை யெடுத்த பிரானே ! காக்க ;
திருமறு மார்ப ! திருமால் ! காக்க ;
தீவினை கெடுக்குஞ் செலவா ! காக்க ;
அளியேன் துயர்கெடுத் தாள்வாய் ! காக்க.

அச்சுதா ! நாராயணா ! ஆபத்பாந்தவா ! அநாதரக்ஷகா ! என்னைக்காவாயோ?" என்று அவனுடைய ஆயிரநாமங்களையுஞ் சொல்லி அலறியும் அவனுதவியைக்காணாது, 'அச்சுதனே கதி ; நம்மால ஒன்றும் முடியாது' என்று நினைத்து, தானென்பதையும், தான் உறுதியாய்ப் பிடித்திருந்த முந்தானையையும் விட்டுவிட்டு நின்ற மாத்திரத்தில அச்சுதன இரக்கங்கொண்டு அருட்கண்ணாற் பார்த்தான. தர்மதேவதை மற்றோர்க்குப புலப்படாது எதிர் நின்று துரோபதையின ஆடையை வளரச செய்துகொண்டே வந்தது. துச்சாதனன் இழுக்க இழுக்கப் பறபல வர்ணங்களோடு கூடிய வஸ்திரங்கள் வெளியே மாயனுடைய மாயத்தால ஒன்றன் பின்னொன்றாய் வளர்ந்துகொண்டுவந்தன. இப்படி யிழுத்த வஸ்திரங்களின் குவையே மலைபோன்ற ஒருபெரும்போராய்விட்டது. இவன் எவ்வளவு முயன்றும் இவனாற் சாத்தியப்படவில்லை. கடைசியிற் சோர்ந்து தரைமீது வீழ்ந்தான்

துச்சாதனன். பின் அப்போது ஒருமுறை கர்ச்சித்தான். அவன் செய்த சபதம் மிக்க பயங்கரமானது. 'க்ஷத்திரிய வீரர்களே! யான் சொல்வதைக் கேளுங்கள். இம்மாதிரியும் இனி நேரிடாது. நான் சொல்வதை நிறைவேற்ற முடியாமற் போய்விட்டால் எம் முன்னோர்களடைந்த நற்கதி எனக்குக் கிடையாமற் போகக்கடவது. இங் கெதிர்நிற்கும் பாதகனுடைய (துச்சாதனன்) மார்பைப்பிளந்து அவனுதிரத்தைக் குடியாவிடின் எனக்குத் துறக்கங் கிடையாமற் போகக்கடவது'' என்றான். இந்தச சபதமோ மிகவும் பயங்கரமானதுதான். இதை நிறைவேற்றுவதும் மிக்க அருமையேயாம்.

கண்ணீர் ததும்பக் கலங்கும துரோபதைக்குச சமாதானம சொல்வா ரொருவருமிலர். துரியோதனன் துச்சாதனனை அழைத்துத் துரோபதையைச சுட்டிக்காட்டி "இப்பணிப்பெண்ணை உள்ளே கொண்டுபோ" என்றான். அவனும் அவளை யிழுக்க ஆரம்பித்தான். அவள் அசையாது ஏக்கங்கொண்டு எல்லாருடைய முகத்தையும் பார்த்து நின்றாள். துரியோதனன் துரோபதையைப் பார்த்து "எல்லாரையும் பார்ப்பதனால யாதுபயன்? உன் புருஷர்களைப பார்த்துக் கேள். அவர்கள் யுதிஷ்டிரர் தங்கட்குத் தலைவரல்ல ரென்றும், அவரைப் பொய்யரென்றும் சொல்லிவிடுவார்களேயாகில உன்னையிப்போதே அடிமைத்தனத்தினின்றும் நீக்கிவிடுகிறேன். அல்லது யுதிஷ்டிரர் தாம் உன்னுடைய புருஷரல்லரென்று சொல்லட்

டும், நான் உன்னை இப்போதே விட்டுவிடுகிறேன்" என்றான். அதற்கு "யுதிஷ்டிரர்தாம் எங்களுக்குத் தலைவர், எங்களுயிர்க்கு முரியர், தம்மையே தோற்றா ரென்று நினைக்கும் பக்ஷத்தில் யாங்களும் தோற்கப்பட்டவர்களாவோம்" என்று பீமன் சொன்னான். கர்ணன் எல்லோரையும் பரிகசித்துத் துரோபதையைப் பார்த்து அவளுக்கிட்ட வேலையைப் போய்க் கவனிக்கச் சொன்னான். மேலும் அவளை நோக்கி "இத்தகைய சூரசிரோமணிகளை நாயகராய்க்கொண்டதனால் யாது பிரயோசனம்? நீ யிப்போதாயினும் வேறோர் புருஷனைத்தேடிக்கொள்ளலாம்; அவனிம்மாதிரி உன்னை இடையிற் கைவிடான், சூதாடித்தோலான்" எனப் பரிகசித்தான். கோபமே ஓருருவெடுத்துவந்தாலன்ன பீமன் தன் தமையனுக்கும் தர்மத்திற்கும் பயந்து பெருமூச்செறிந்துகொண்டு வாளாவிருந்தான். துரியோதனன் தருமரை நோக்கித் தான் கேட்டவைகளுக்கு உத்தரம் தம்பினென்றான், சுமமாவிருக்கும் பீமனைத் தூண்டக்கருதித் துரோபதையைத் தன் தொடையில வந்துட்காரும்படி சொன்னான். இதைக் கேட்கப் பீமன் பொறுப்பனோ? "இனி நிகழப்போகிற யுத்தத்தில் உன் தொடை எலும்பை முறியாவிடின் யான் எம்முன்னோரடைந்த பதவியை யடையாமற் போகக்கடவேன்" என்று இரண்டாவது சபதம் செய்தான் பீமன்.

திரௌபதை அந்தத்தில் அந்தகனுகிய திருதராட்டிரனிடஞ்சென்று முறையிட்டுக் கதறினுள். அவன் தன் பிள்ளையின் துர்க்கிருத்தியத்தால் வரக்கூடிய நா

சத்தைப் போக்கும் நிமித்தம் அவளுக்கினிய வார்த்தை சொல்லி அவள் கோபத்தைச் சற்றுத் தணித்து "உனக்கு வேண்டிய வரத்தைக்கேள்" என்றான். தனக்குப் பிறக்கும் குழந்தை அடிமையின் பிள்ளை யென்னும் இழி பெயரடையாதிருக்கும் பொருட்டுத் தர்மரை அடிமைத் தனத்தினின்றும் நீக்க வேண்டுமென்றாள். இவ்வரத்தைத் தந்து, "வேறோர் வரங்கேட்பாய்" என்றான். அவர்தம் சகோதரர் நால்வரையும் அவர்களாயுதங்களுடன் விடுதலை செய்தல் வேண்டுமென்றாள். அவ்வரத்தையுந் தந்து, "வேறோர் வரமும் வாங்கிக்கொள்" என்றான். அதற்குத் திரௌபதை "இனியாதொரு வரமும் வேண்டாம், என்னுயகர்கள் சுவாதீன மடைந்தார்கள். தங்களுடைய வல்லமையினால் ஐசுவரியமும் பெறுவார்கள்" என்றாள். இதைக்கேட்டிருந்த கர்ணன், "துன்பக்கடலுளாழ்ந்து கரைதெரியாது தியங்கிக்கொண்டிருந்த கணவர்க்குத் துரோபதை தானோரோடம் போல நின்று மாலுமியுமாகிக் கரை சேர்த்தனள்" என்றான்.

பிறகு யுதிஷ்டரர் தம்பிருகரங்களையும் சிரமேற்கொண்டு தம் பிதாவிற்கு அஞ்சலிசெய்து "தங்களாக்ஞையின் பிரகாரம் நடக்கச் சித்தனாய்க் காத்திருக்கின்றேன்" என்னக், குருட்டரையன் அவரை "உன்னுடு சேர்ந்து சுகத்துடன் வாழ்க" என் றாசீர்வதித்தான். துரியோதனனுடைய துர்க்குணங்களைக் கவனியாது தன்னையும் காந்தாரியையுமாத்திரம் நினைத்துத் தேறுதல் செய்துகொள்ளும்படி வேண்டினான்.

ஐவரும் உத்தரவு பெற்றுப் போகுந்தருணத்தில் துரி யோதனன்தன் தந்தையிடஞ்சென்று "பாண்டவர் கள் அதிக கோபத்துடன் செல்கிறார்கள். அவர்களை யிப்படிவிடுவதனால் தேசத்திற்குத்தீங்கு நேரிடும். இன்னொருதரம் சூதாடித் தோற்கிறவர்கள் பன்னிரண் டுவருடம் வனவாசமும் ஒருவருடம் அஞ்ஞாதவாச மும் செய்யவேண்டுமென்று ஏற்படுத்தல் வேண்டும்" என்றான். மதியின் முதிர்ந்தோராகிய பீஷ்ம துரோ ணவிதுரர் எவ்வளவு எடுத்துச் சொல்லியும், காந்தா ரியும் இப்படிப்பாண்டவர்களை வருத்துவதைப் பார்க் கிலும் துரியோதனனையே யிழந்துவிடலாம் என்று சொல்லியும் அவற்றைச் செவிக்கொளாது அரசன் தன்சுதனாய சுயோதனன்சொல்லை அங்கீகாரஞ்செய் தனன். பாண்டவர்களைத்திரும்பவு மழைத்துத் துரி யோதனனுடைய ஏற்பாட்டிற்கு உடன்படச்செய்து அஞ்ஞாதவாசஞ்செய்து திரும்பிவருகிறவர்களுக்கு அவர்களுடைய பாகத்தையுங் கொடுப்பதாக வாக் களித்தனன். பின்னடந்த சூதாட்டிலும் சகுனியே வென்றான்.

எல்லாவற்றையு மிழந்தார்கள் பாண்டவர்கள். தாங்களுடுத்திருந்த பட்டாடைகளைத் தவிர்த்து மான்றோல் மரவுரி தரித்துக் காட்டிற்குப் போகும் வண்ணம் சென்றார்கள். இந்நிலையைக்கண்ட துச்சா தனன் ஆனந்தங்கொண்டு ஆரவாரித்தான். துரோ பதையைப் பார்த்து "இவர்களை யேன் பின் தொடர் கிறாய்? இந்த நபும்சகர்களால் என்ன செய்யக்கூடும்?

நீ ஏன் வேறொரு நாயகனைத் தேடிக்கொள்ளக் கூடாது?" என்றான். இதைக்கண்ட பீமன் மந்திரத் தாற் கட்டுண்ட சர்ப்பத்தைப் போன்றிருந்து அவ னருகிற் சென்று அவனைக் கடிந்து மேற்சென்றான். துச்சாதனன், பீமனிவ்வாறு நடந்ததற்குக் கை கொட்டி நகைத்து, "புருஷ சிம்மமே! ஏனிவ்வாறு வீராவேசத்துடன் போகின்றாய்?" என்று குதித்துக் கூத்தாடி நின்றான். பீமன் இந்த அற்பனுடைய வார்த்தையை யொரு பொருளாய் மதியாது தனக் கிருந்த கோபத்தையடக்கி அவர்களுக்கு வரப்போ கிற நாசத்தை எண்ணிப் பரிதபித்துத் தன் தமைய னுடன் சென்றான். அர்ச்சுனன் பீமனை நோக்கி, "அப்பா! சுத்த வீரர்களுடைய எண்ணம் செய லால் வெளிப்படவேண்டுமே யன்றி வார்த்தையால் வெளிப்படவேண்டியதில்லை. பதின்மூன்று வருஷம் முடிந்து பதினான்காவது வருஷம் ஆரம்பித்தவுடன் அவர்களுடைய கதி யின்னதெனத் தெரியவரும். நாமிப்போதேன் வாய்திறத்தல்வேண்டும்?" என்றான். இவனல்லவோ வீரன்! தர்மரைத்தவிர்த்து நால் வரும் தங்கள் விரோதியினை யொழியாது விடுவதில்லை யெனச் சபதம் செய்துகொண்டார்கள். பிறகு ஐவ ரும் வனத்திற்கு விடைபெற்றுச் செல்லவெண்ணித் திருதராஷ்டிரனிடஞ் சென்றார்கள். அரசன் அதிக துக்கக் குறியுடன் வந்தவர்களை விசாரித்து விடை தந்தனுப்பினான். பாண்டவர்கள் வெட்கத்தினாற் பதி லொன்றும் சொல்வதற்கில்லாது திருதராஷ்டிர னுடைய க்ஷேமத்தைக் குறித்துக் கடவுளைத் தியா

ளித்தார்கள். பிறகு விதுரர் குந்திதேவியைத் தம்மிடம்விட்டுப் போம்படி ஐவரையுங் கேட்க அவர்களும் இவருடைய விருப்பத்திற்கிணைந்தார்கள். அவர்கள் செய்யப்போகிற வனவாசத்தினுல் அவர்கட்கு அநேக நன்மைகளுண்டாகு மென்று சொல்லி விதுரர் ஆசீர்வதித்து அனுப்பினுர். அக்காலத்தை ஒருவன் சரியாய் உபயோகிப்பானுகில் அதனுல் அவனடையக்கூடிய பலத்தை எத்தகைய எதிரியும் எளிதில் வெல்லமுடியாது. "குந்திபுத்ரா! எங்களிடம் விடைபெற்றுச் செல்வாய். உனக்கொரு குறைவும் வாராது. எலலாம் சுபமேயாகும். எங்களுடைய ஆசீர்வாதம் வீணுகாது. பாபமான காரியம் யாதொன்றும் நீ செய்தாயென ஒருவனும் சொல்லான். பதின்மூன்று வருஷகாலமுஞ் சென்ற பிறகு க்ஷேமமாய்த் திரும்பிவந்து உன் இராஜ்ஜியத்தைப பெற்று ஆள்வாய்" என்னும் உறுதிச்சொல் மறுபடியும் சொல்லியனுப்புவித்தார் விதுரர். குந்திதேவியினின்றும் அவள் தன் புத்திரர்கள் பிரிந்தேக வேண்டியதனுல் அவட்குவந்த சோகத்தையென்னென்று சொல்வது! அவள் மிக்க சோர்வுற்றுத் தன்வய மற்றிருந்தாள். கடைசியில் அவர்கள் எல்லோரும் தேற்றுவிக்கப் பட்ட பிறகு வீட்டைவிடடுப் புறப்பட்டார்கள். முகத்தை முன்தானையால் மூடிக்கொண்டு முன் சென்றுர் தருமர். பீமன் தன்னிரு புஜங்களையும் பார்த்தவண்ணமாய்ப் பின்சென்றுன். அர்ச்சுனன் மணலை வாரி இறைத்துக்கொண்டு அவன்பின் சென்றுன். சகாதேவன் தன் முகத்தில் மண்ணிட்டுக்கொண்டு போ

னன். நகுலனும் தன் தேகமுழுதும் மண் பூசிக் கொண்டு சென்றான். துரோபதை துக்கத்தில் மூழ்கினவளாய் வாய்விட்டரற்றியும், அவிழ்ந்து அலங்கோலமாய்த் தரையளவும் புரளும் கூந்தலினால் முகத்தை மறைத்துக்கொண்டும் சென்றனள். அவர்களுடைய புரோகிதராகிய தௌம்யர் கையில் தருப்பையைக்கொண்டும, யமனைக் குறித்துச் சொல்லப்படும் பயங்கரமான சாமவேத மந்திரத்தை உச்சரித்துக் கொண்டும் சென்றனர்.

பாண்டவர்களிவ்விதமாய்ச் சென்றார்களெனக் கேட்ட திருதராஷ்டிரன் விதுரரை யழைத்து அதனுடைய பொருள் யாதெனக் கேட்டனன். அதற்கவர் அரசனை நோக்கி "ஐயா! தருமனே எப்போதும் அன்பும் அருளுமுளளவன். அத்தகையனுக்கு இப்போதிருக்கும் கோபாக்கினியால் விழிக்கெதிர் நின்ற பொருள்கள் அழிவுறுமெனப்பயந்து தான் தன் முகத்தை மூடிக்கொண்டான். பீமனே தன் விரோதிகளைத் தன் புஜபலத்தைக் கொண்டு எப்போது ஒழிக்கலாம், எப்போது பழிக்குப்பழி வாங்கலாம் என்று தன் புஜத்தைப் பார்த்துக்கொண்டே சென்றான். அர்ச்சுனன் தான் யுத்தகாலத்திற் பொழியப்போகிற சரமாரிக் கறிகுறியாய் மணலைவாரி வீசிக் கொண்டு சென்றான். சகாதேவன் கஷ்டம் வரும் காலத்து இன்னாரெனப் பிறர் தன்னை யறியாதவாறு செய்து கொண்டான். நகுலன், அன்பினால் எவருடைய இதயத்தையுங் கொள்ளாவண்ண மிவ்வாறு செய்தான். துரோபதை தன் விரோதிகளின் மனைவி

யர் சில்லாண்டு சென்றபின்னர் அதேவழியில் அவர் தம் புருஷருக் கழவேண்டிவருமே என்பதை எண்ணினவளாய் அப்படிச் சென்றாள். இனிப்பின்னர்ப் பிரேதத்துடன் செலலும புரோகிதா உச்சரிக்கவேண்டியவற்றை தௌம்யர் இப்போது உச்சரித்துச் சென்றார்.

உலகமும் தன்னிடம நடந்தேறிய குற்றங்களைக் கண்டும் இனி வரபபோகிற அநாத்தங்களை நினைத்தும் அதிக சிந்தனையுடனிருந்தது. இஃதிப்படியிருக்க, மற்ற ருஷிகளுடன் நாரதர் அந்தரத்துத் தோன்றி "இன்று முதற் பதினன்காம் வருடம் பிறந்தவுடன கௌரவர்கள் துரியோதனனிழைத்த தீங்கிற்காகப் பீமார்ஜ்ஜுனர்களால் நாசமடையப் போகிறார்கள்" என்று சொல்லிப் பிறகு அனைவரும் எவ்வளவு சீககிரத்திற தோன்றினார்களோ அவ்வளவு சீக்கிரத்தில் மறைந்து விட்டார்கள். பாண்டவர்கள் நாட்டினீங்கிக் காட்டிறகுச சென்றதைக்கண்ட ஆதவனும் அலமந்து அலைகடலுள் மூழ்கினான்.

சபாபருவம் முற்றிற்று.



# விஷய அகராதி.

பக்கம்.

# செய்யுண் முதற்குறிப் பகராதி.

# க. தமிழ்மகன் மேகலை.



**கிங்கிணி : க.—நாடகவியல்.**

[**இது நாடகத் தமிழிலக்கண நூல்**; நாடகவமைதியை நன்கு விளக்கி இனிமை தோன்றக் கூறுவது; தமிழ் மொழியின் மீது ஆர்வமுடையார் யாவர்க்கும் இன்றியமையாதது; மிகவும் புதுமையாக அமைக்கப்பட்டுளது; 272 சூத்திரங்களினியன்றது; **வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி. ஏ.,** இயற்றியது; நல்ல பளபளப்புள்ள கடிதத்தில அச்சிடப்பட்டுளது; 1903-ஆம் வருஷத்துப் பி. ஏ. பரீட்சைக்குப் பாடமாயேற்பட்டுளது; விலை: அணு 0—8—0. கலிகோகட்டட முளதாயின அணு 0—12—0. தபாற்கூலி வேறு.]

**கிங்கிணி : உ.—தனிப்பாசுரத்தொகை.** முதல்வரிசை.

[இது 41 தனிப்பாசுரங்களடங்கியதோர் **உறுதிநூல்**; அருமையும் பெருமையும் வாய்ந்த பல பொருள்களை யெடுத்துரைப்பது; மாணுக்கர் யாவர்க்கும் பெரிதும பயன்படத்தக்கது; **வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி. ஏ,** இயற்றிப் **பரிதிமாற்கலைஞன்** என்னும் புனைவு பெயரில் வெளியிட்டது; தனம பொருந்திய **ஜி. யூ. போப்பையரவர்களால்** ஆங்கில பாஷையினுஞ் செய்யுளாக மொழிபெயர்க்கப்பட்டுளது; உயர்ந்த பளபளப்புள்ள கடிதத்திலச்சிடப்பட்டுளது; விலை : அணு 0—4—0. கலிகோ கட்டடமுளதாயின அணு 0—8—0. ஆங்கில மொழிபெயர்ப்புடன் கொண்டது ரூ 1—0—0. தபாற்கூலி வேறு.]

**கிங்கிணி : ௩.—பாவலர் விருந்து. முதஞள்.**

[இஃது இனிமையும் புதுமையும் வாய்ந்த பதினெரு சிறிய **செய்யுணூல்கள்** கொண்டது; ஆங்காங்குச் சில புதிய கருத்துக்கள் அடங்கியது ; **வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி. ஏ.,** இயற்றியது ; விலே : அணு 0—8—0. கலிகோ கட்டட முளைதாயின் அணு 0—12—0. தபாற்கூலி வேறு.]

**கிங்கிணி : ௪.—தாமரை நாண்மலர்.**

[இஃது இனிமைவாய்ந்த சிறிய **செய்யுணூல்கள்** ஆறு கொண்டது ; யாவர்க்கும் பயன்படத்தக்கது ; **ந. பலராமையர்** இயற்றியது; விலே : அணு 0—6—0. கலிகோகட்ட முளதாயின் அணு 0—10—0. தபாற்கூலி வேறு.]

**கிங்கிணி: ௫.—புட்பபாண விலாசம்.**

[இது வடமொழியினின்றும் தமிழில் மொழிபெயர்த்ததோர **செய்யுணூல்** ; உவமைச்சுவை பெரிதும் உற்றது ; அகப்பொருட் கருத்தமைந்தது ; **சநக்கை-இராமசாமி ஐயங்கார், பி. ஏ.,** இயற்றியது; விலே : அணு 0—2—0. தபாற்கூலி வேறு.]

**கிங்கிணி : ௬.—மேன்மொழித்தரளம்.**

[இஃது ஆங்கில மொழியினின்றுந் தமிழில் மொழிபெயர்த்த பல **செய்யுணூல்கள்** கொண்டது ; இனிய கருத்துக்களடங்கியது ; **சநக்கை - இராமசாமி ஐயங்கார், பி. ஏ.,** இயற்றியது ; விலே : அணு 0—4—0. தபாற்கூலி வேறு.]

**கிங்கிணி : ௭.—உமைதிருமணம்.**

[இது வடமொழியிற் காளிதாச மாகவி இயற்றிய குமாரசம்பவத்தின் முதலேழு சருக்கத்தின் மொழி பெயர்ப்பாகும்; இச்செய்யுணூல் **வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார்,**

பி. ஏ., யாத்தது; விலை : ரூ 1—0—0. விரைவில் வெளி வரும்.]

கிங்கிணி : அ.—அவ்வைக்காட்சி.

[இது புதுவழியால் யாக்கப்பட்டதோர் இனிய செய்யுணூல் ; மெய்க்கோள் பல விளக்குவது ; வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரியார், பி. ஏ., இயற்றியது ; விலை : அணா 0—12—0. விரைவில் வெளிவரும்.]



# உ. நாமகள் சிலம்பு.

**பரல்: க.—ரூபாவதி அல்லது காணாமற்போன மகள்.**

[இந்த ஒரு புதிய தமிழ் **நாடகம்**; ஐந்து அங்கமுள்ளது; ஆடவரும் பெண்டிரும் அகமகிழ்ந்து வாசிக்கத்தக்கது; கதையின் மூலமாய்ச் சிறந்த நீதிகள் பல கற்பிப்பது; **வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி. ஏ.,** இயற்றியது; பளபளப்புள்ள கடிதத்தில் அச்சிடப்பட்டுளது; கலிகோ கட்டடமுள்ளது; விலை: ரூ 1-0-0. தபாற்கூலி வேறு.]

**பரல்: உ.—கலாவதி.**

[இந்த ஒரு புதிய தமிழ் **நாடகம்**; ஏழங்கமுள்ளது; மகளிராடவர் மகிழ் சிறந்து படிக்கற்பாலது; கதையினடியாய்ச் சிறப்பு வாய்ந்த நீதிகள் பல கட்டுரைப்பது; கற்றோருங் கல்லாருங் கண்டு ஒருங்கே களிகூரத்தக்குவது; சுதந்திர யூகமுங் கற்பனைத்திறனும் வாய்ந்தது; **வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி. ஏ.,** இயற்றியது; நல்ல உயர்ந்த பளபளப்புள்ள கடிதத்தில் அச்சிடப்பட்டுளது; விலை: ரூ 1-8-0. கலிகோ கட்டடமுளதாயின் விலை ரூ 1-12-0. தபாற்கூலி வேறு.]

**பரல்: ௩.—சரசாங்கி.**

[இந்த ஒரு புதிய தமிழ் **நாடகம்**; ஐந்து அங்கமுள்ளது; காலஞ்சென்ற **திரு-கலசலோசனச் செட்டியார்** இயற்றியது; மக்கள் யாவரும் மகிழ்ந்து படிக்கற்பாலது; நல்ல கடிதத்தில் அச்சிடப்பட்டுளது; 1900-ஆம வருஷத்து எவ்.ஏ., பரீட்சைக்குப் பாடமாயிருந்தது; கலிகோ கட்டடமுள்ளது; விலை: ரூ 1-0-0. தபாற்கூலி வேறு.]

பரல்: ச.—சுகுண சுகேசர் *அல்லது* நட்பும் காதலும்.

[*இஃது ஒருபுதிய தமிழ்* **நாடகம்**; *ஐந்து அங்கமுள்ளது*; **சருக்கை-இராமசாமி ஐயங்கார், பி. ஏ.,** *இயற்றியது; எத்தகைய மக்களும் விருப்பங் குன்றுதவாறு படிக்கத்தக்க இனிமையான நடையி லெழுதப்பட்டுளது; பளபளப்புள்ள கடிதத்தில் அச்சிடப்பட்டுளது;* விலை: *அணு* 0—8—0. *கலிகோ கட்டடமுளதாயின் அணு* 0—12—0. *தபாற்கூலி வேறு.*]

பரல்: ரு.—தசரதன் தவறு.

[*இஃது* **அங்கம்** *என்னும் ஒருவகை நாடகம்; ஓரங்கமுள்ளது; அவலச்சுவை பெரிது முடையது;* **ந-பலராமையர்** *இயற்றியது;* விலை: *அணு* 0—4—0. *கலிகோ கட்டடமுளதாயின் அணு* 0—8—0. *தபாற்கூலி வேறு.*]

பரல்: சு.—இந்துமதி *அல்லது* கற்பரசி.

[*இஃது ஒருபுதிய தமிழ்* **நாடகம்**; *ஆறங்கமுள்ளது; இனிய தமிழ் நடையி னியன்றுளது; யாவரும் வாசிக்கத்தக்கது;* **சருக்கை - இராமசாமி ஐயங்கார், பி. ஏ.,** *இயற்றியது;* விலை: *அணு* 0—12—0. *தபாற்கூலி வேறு.*]

பரல்: எ.—சூர்ப்பணகை.

[*இது* **பிரகசனம்** *என்னும் ஒருவகை நாடகம்; ஈரங்கமுள்ளது; நகைச்சுவை பெரிதும் வாய்ந்தது; எத்தகையோரும் படித்துக் களிகூரத்தக்கது;* **வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி. ஏ.,** *இயற்றியது;* விலை: *அணு* 0—6—0. *விரைவில் வெளிவரும்.*]

பரல்: அ.—மானவிஜயம்.

[*இஃது* **அங்கம்** *என்னும் ஒருவகை நாடகம்; ஓரங்கமுள்ளது; அவலச்சுவை யாற்றவும் வாய்ந்தது;* **வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரியார், பி. ஏ.,** *இயற்றியது;* **விலை:** *அணு* 0—6—0. *விரைவில் வெளிவரும்.*]

பரல் : கூ.— உஷாபரிணயம்.

[இது நாட்டியராசகம் என்னும் ஒருவகை நாடகம் ; நாலங்க முள்ளது ; இனிய நடைவாய்ந்தது; சருக்கை - இராமசாமி ஐயங்கார், பி. ஏ., இயற்றியது ; விலை : அணா 0—8—0. விரைவில் வெளிவரும்.]

பரல் : கo.—முத்திரா ராட்சசம்.

[இது வடமொழியினின்றுந் தமிழில் மொழிபெயர்த்ததோர் நாடகம் ; ஏழங்க முள்ளது ; வி. கோ. சூரிய நாராயண சாஸ்திரியார், பி. ஏ., இயற்றியது ; இராச தந்திரங்களுட் பலவற்றை யினிது விளக்குவது ; விலை : அணா 0—12—0. விரைவில் வெளிவரும்.]

பரல் : கக.—தமயந்தி.

[இஃது ஒரு புதிய தமிழ் நாடகம் ; ஐந்து அங்கமுள்ளது ; இனிமையான தமிழ் நடையி னியன்றுளது ; பெண்பாலாரும் ஆண்பாலாரும் பெரிதும் போற்றிப் படிக்கத்தக்கது ; பி. ஏ. பிரணதார்த்திஹர சிவனூர், பி. ஏ., இயற்றியது ; விலை : அணா 0—8—0. விரைவில் வெளிவரும்.]

பரல் : கஉ.—விக்கிரமோர்வசீயம்.

[இது துரோடகம் என்னும் ஒருவகை நாடகம் : வடமொழியினின்றும் தமிழின் மொழிபெயர்த்தது ; ஐந்து அங்கமுள்ளது ; இன்பச்சுவை பெரிதமியைந்தது ; சருக்கை-இராமசாமி ஐயங்கார், பி. ஏ., இயற்றியது; விலை : அணா 0—8—0. விரைவில் வெளிவரும்.]

பரல் : கங.—

[இஃது ஒரு புதிய தமிழ் நாடகம் ; ஐந்து அங்கமுள்ளது ; இனிய தமிழ் நடை வாய்ந்தது ; கல்துளம்-துப்புசாமி முதலியார், பி. ஏ., இயற்றியது ; விலை : அணா 0—12—0. விரைவில் வெளிவரும்.]

பரல் : கச.—திரிபுர தகனம்.

[இஃது இடிமம் என்னும் ஒருவகை நாடகம்; நாலங்கமுள்ளது: வெகுளிச்சுவை மிக்கது; ந. பலராமையர் இயற்றியது; விலை: அணா 0—8—0. விரைவில் வெளிவரும்.]

பரல் : கரு.—பழிக்குப்பழி.

[இது பிரத்தானம் என்னும் ஒருவகை நாடகம்; ஈரங்கமுள்ளது; சித்தூர் - சுப்பிரமணியாசாரியார், பி. ஏ., எல். டி., இயற்றியது; விலை: அணா 0—6—0 விரைவில் வெளிவரும்.]

பரல் : கசு.—வதூவிஜயம்.

[இஃது ஒரு புதிய தமிழ் நாடகம்; ஐந்து அங்கமுள்ளது; நகைச்சுவை நணணியது; நற்கோள்பல நயம்பெறக்காட்டுவது; தி. அ. சுவாமிநாத ஐயர், எவ். டி. எஸ்., இயற்றியது; விலை: அணா 0—8—0. விரைவில் வெளிவரும்.]

பரல் : கஎ.—ஜோதிமாலை.

[இது நாடிகை யென்னும் ஒருவகை நாடகம்; நாலங்கமுள்ளது; உவகைச்சுவை பெரிது முற்றது; சருக்கை - வரதாசாரியர் இயற்றியது; விலை: அணா 0—8—0. விரைவில் வெளிவரும்.]

பரல் : கஅ.—மிருச்சகடிகை.

[இது பிரகரணம் என்னும் ஒருவகை நாடகம்; வடமொழியினின்றும் மொழி பெயர்த்தது; மனித வாழ்க்கையின இரகசியங்களை யினிதெடுத்துரைப்பது; தி. ரா. ஸ்ரீநிவாச ஐயங்கார், பி. ஏ., யும், டி. எஸ். ஸ்ரீநிவாச ஐயங்கார், பி. ஏ., யும் சேர்ந்து இயற்றியது; விலை: அணா 0—12—0. விரைவில் வெளிவரும்.]

## ꯲. இன்ப வல்லி.



**மலர் : க.—வித்யாரண்யநகரம்.**

[இஃது எளிய நடையில் எழுதப் பெற்றதோர் சர்க்கிர விநோதகதை ; **து ரா. ஸ்ரீநிவாச ஐயங்கார், பி. ஏ.** இயற்றியது ; விலை : அணா 0—8—0. தபாற்கூலி வேறு.]

**மலர் : உ.—மதிவாணன்.**

[இது மிகவும் உயரிய நடையினியன்றுளதோர் புதுமையான செந்தமிழ்க்கதை ; **வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி. ஏ.,** இயற்றியது ; விலை : அணா 0—12—0. தபாற்கூலி வேறு.]

**மலர் : ங.—கமலினி.**

[இஃது ஒரு புதுமையான தமிழ்க்கதை ; கற்றாரும் கல்லாரும் ஒருங்கே படித்துக் களிகூரத்தக்க நடையில் எழுதப்பட்டுளது ; **சருக்கை - இராமசாமி ஐயங்கார், பி. ஏ.,** இயற்றியது ; விலை : அணா 0—8—0. தபாற்கூலி வேறு.]

**மலர் : ச.—இலீலை.**

[இஃது உயர்ந்த செந்தமிழ் நடையி லெழுதப்பட்டுளதோர் புதுமையான கதை ; **ந. பலராமையர்** இயற்றியது ; விலை : அணா 0—8—0. விரைவில் வெளிவரும்.]

**மலர் : ரு.—நன்றியறியாமகன்.**

[இஃது ஒரு புதுமையான தமிழ்க் கதை ; மகளிரும் ஆடவரும் மிக்க மகிழ்ச்சியோடும் படிக்கத்தக்கது ; **து. ரா. ஸ்ரீநிவாச ஐயங்கார், பி. ஏ.,** இயற்றியது ; விலை : அணா 0—8—0. தபாற்கூலி வேறு.]

மலர் : சு.—இன்னுமா ?

[இஃது இனிமையும் புதுமையும் வாய்ந்ததோர் தமிழ்க்கதை; யாவர்க்கும் விளங்கத்தக்கவாறு எளிய தமிழ் நடையில், எழுதப்பட்டுளது; வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் பி. ஏ., இயற்றியது; விலை : அணு 0—8—0. விரைவில் வெளிவரும்.]

மலர் : எ.—சங்கரன்.

[இஃது இனிமையான செந்தமிழ்க்கதை; ஏ. சங்கரலிங்கம் பிள்ளை, பி. ஏ., இயற்றியது; விலை : அணு 0—8—0. தபாற் கூலி வேறு.]

மலர் : அ.—வசந்தவல்லி.

[இஃது ஒரு புதுமையான தமிழ்க்கதை; எளிய இனிய தமிழ் நடையிலியன்றுளது; ந. பலராமையர் இயற்றியது; விலை : அணு 0—8—0. விரைவில் வெளிவரும்.]

மலர் : கூ.—செத்தவன் பிழைப்பனு ?

[இஃது ஓர் இனிமையான தமிழ்க்கதை; ந. பலராமையர் இயற்றியது; விலை : அணு 0—8—0. விரைவில் வெளிவரும்.]

மலர் : ௧0.—வருங்குலம்.

[இஃது அரும் பொருளடங்கியதோர் தமிழ்க்கதை; தி. அ. சுவாமிநாதையர், எவ். டி. எஸ்., இயற்றியது; விலை : அணு 0—8—0. விரைவில் வெளிவரும்.]

மலர் : ௧௧.—ஹிரண்மயி.

[இஃது ஒருதமிழ்க்கதை; இனிய எளிய நடையில் எழுதப்பட்டுளது; தி. அ. சுவாமிநாத ஐயர், எவ். டி. எஸ்., இயற்றியது; விலை : அணு 0—2—0. தபாற்கூலி வேறு.]

**மலர் : கஉ.—இராதாராணி.**

[*இஃது ஒரு தமிழ்க்கதை ; இனிமைவாய்ந்த தமிழ் நடையில் எழுதப்பட்டுளது;* **ஸ்ரீ. அ. சுவாமிநாத ஐயர், எவ். டி. எஸ்.,** *இயற்றியது ; விலை : அணா* 0—3—0. *தபாற்கூலி வேறு.*]

**மலர் : கங.—காதம்பரி.**

[*இது வடமொழியினின்றும் மொழிபெயர்த்துச் சுருக்கிச் செய்யப்பட்டதோர் தமிழ்க்கதை ; யாவர்க்கும் எளிதில் விளங்கத்தக்க இனிய தமிழ் நடையில் எழுதப்பட்டுளது ;* **ஸ்ரீ. அ. சுவாமிநாத ஐயர், எவ். டி. எஸ்.,** *இயற்றியது ; விலை : அணா* 0—12—0. *தபாற்கூலி வேறு.*]

**மலர் : கச.—நீலாம்பா.**

[*இஃது ஒரு புதிய தமிழ்க்கதை ; எளிய தமிழ் நடையில் எழுதப்பட்டுளது ;* **ஐக்கராஜு-ப. வாசுதேவையபந்துலு** *இயற்றியது ; விலை : அணா* 0—8—0. *விரைவில் வெளிவரும்.*]

**மலர் : கரு.—இவ்விரவும் விடியுமா ?**

[*இஃது ஓர் இனிய தமிழ்க்கதை ; யாவர்க்கும் பொருள் விளங்கத்தக்க நடையில் எழுதப்பட்டுளது ;* **சநுக்கை-கி. சுந்தராசாரியர்** *இயற்றியது ; விலை : அணா* 0—12—0. *விரைவில் வெளிவரும்.*]

**மலர் : கசு.—ஜயதரன்.**

[*இது புதுமையும் இனிமையும் வாய்ந்ததோர் தமிழ்க்கதை; எளிய நடையில் எழுதப்பட்டுளது ; இரண்டு பாகங்களுள்ளது ;* **ஐக்கராஜு-ப. வாசுதேவையபந்துலு** *இயற்றியது ; விலை : பாகம் ஒன்றுக்கு அணா* 0—12—0. *விரைவில் வெளிவரும்.*]

**மலர் : கஎ.—உலோபிமகள்.**

[*இஃது ஓர் புதிய தமிழ்க்கதை; இனிய எளிய தமிழ் நடையில் எழுதப்பட்டுளது ;* **சநுக்கை - கி. சுந்தராசாரியர்** *இயற்றியது ; விலை : அணா* 0—12—0. *விரைவில் வெளிவரும்.*]

**மலர் : க௮.—பள்ளியறைப் பிரசங்கம்.**

[இது மிகவும் விநோதமான பிரசங்கங்கள் பல கொண்டது; நகைச்சுவை மிக்கது; இந்துக்கள் வாழ்க்கையை யினிதெடுத்துரைப்பது; **ஐக்கராஜு - ப. வாசுதேவையபந்துலு** இயற்றியது; விலை : அணா 0—8—0. தபாற்கூலி வேறு.]

**மலர் : க௯.—பேர்த்தாள் : ஓர் உழவன் மகள்.**

[இஃது எளியநடையில் எழுதப்பெற்றதோர் சரித்திர விநோத கதை; **து. ரா. ஸ்ரீநிவாச ஐயங்கார், பி. ஏ.,** இயற்றியது; விலை : அணா 0—8—0. தபாற்கூலி வேறு.]

**மலர் : உ௦.—நரபலியீடு.**

[இஃது இனிய தமிழ் நடையில் யாவர்க்கும் பொருள் விளங்கத் தக்கவாறு எழுதப்பட்டதோர் புதிய கதை; **து. ரா. ஸ்ரீநிவாச ஐயங்கார், பி. ஏ.,** இயற்றியது; இரண்டு பாகங்களுள்ளது; விலை : பாகம் ஒன்றுக்கு அணா 0—8—0. விரைவில் வெளிவரும்.]



# ௬. கலா நிதி.



கலை : ௧.—பாரதஸாரம்.

[இஃது ஆங்கிலத்தில் **அனிபெஸன்ட்** அம்மையவர்கள் செய்ததினின்றும் தமிழில் மொழிபெயர்த்துச் செய்யப்பட்டது; தெளிவான தமிழ் நடையில் எழுதப்பட்டுள்ளது; **கல்தூணம் - குப்புசாமி முதலியார், பி. ஏ.,** இயற்றியது; மூன்று பாகங்களுள்ளது; விலை: முதற்பாகம் அணா 0—10—0; இரண்டாம்பாகம் அணா 0—8—0; மூன்றாம்பாகம் அணா. 0—10—0. தபாற்கூலி வேறு.]

கலை : ௨.—ஸ்ரீமணியசிவனார் சரித்திரம்.

[இஃது இடையிடையே வடமொழி மேற்கோள்கள் பெய்யப்பெற்றதோர் சரிதம்; எளிய நடையில் எழுதப்பட்டுளது; சைவமதத்தின் உண்மைபல தெரிப்பது; **வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி. ஏ.,** இயற்றியது; விலை: அணா 0—2—0. தபாற்கூலி வேறு.]

கலை : ௩.—விவேக சந்திரிகை.

[இஃது இளஞ்சிறுவர்கட்கு விவேகப்பிரகாசந் தருவதோர் உறுதிநூல்: கதையின் மூலமாய் நீதி போதிப்பது; எளிய தமிழ் நடையில் எழுதப்பட்டுளது; **தீ. அ. சுவாமிநாத ஐயர் எவ். டி. எஸ்.,** இயற்றியது; விலை: அணா 0—8—0. தபாற்கூலி வேறு.]

கலை : ௪.—நல்லறிவுச்சுடர்.

[இஃது இளஞ்சிறார்கட்கு நல்லறிவு புகட்டுவதோர் உறுதிநூல்: கதையின் மூலமாய் நீதிகள் அறிவுறுப்பது; இனிய நடையில் எழுதப்பட்டுளது; **தீ. அ. சுவாமிநாத ஐயர்,**

எவ். டி. எஸ்., இயற்றியது; விலை : அணா 0—8—0 தபாற் கூலி வேறு.]

கலை : ரு.—தற்பயிற்சி.

[இந்த ஆங்கிலத்தினின்றும் மொழிபெயர்த்துச் செய்யப் பட்டதோர் உறுதிநூல்; உயரிய தமிழ் நடையில் இயன் றுளது; சருக்கை - கி. சுந்தராசாரியர் இயற்றியது; விலை: அணா 0—8—0. தபாற்கூலி வேறு.]

கலை : சு.—இல்லறவியல்.

[இந்த இல்லற மார்க்கத்தினியல்புகளை யினிதெடுத்து விளக் குவதோர் உறுதிநூல்; இனிய தமிழ்நடை வாய்ந்தது; தி. அ. சுவாமிநாத ஐயர், எவ். டி. எஸ்., இயற்றியது; விலை : அணா 0—8—0. தபாற்கூலி வேறு.]

கலை : எ.—வாழ்க்கைப்பயன்.

[இந்த ஆங்கிலத்தினின்றும் மொழிபெயர்த்துச் செய்யப் பட்டதோர் உறுதிநூல்; நல்ல தமிழ் நடையில் எழுதப் பட்டுளது; சருக்கை - வரதாசாரியர் இயற்றியது; விலை. அணா 0—12—0. தபாற்கூலி வேறு.]

கலை : அ.—ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகள் சரிதம்.

[இது ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமிகள் பரம்பரையில் வந்த ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகளது சரித்திரம்; எளிய தமிழ் நடையில் எழுதப்பட்டுளது; தி அ. சுவாமிநாதையர், எவ். டி எஸ்., இயற்றியது; விலை . அணா 0-8-0. விரைவில் வெளிவரும்.]

கலை : கூ.—ஸ்ரீ அப்பைய தீக்ஷிதர் சரித்திரம்,

[இந்த இனிய தமிழ் நடை வாய்ந்தது; சைவ மதத்திற்கு இன்றியமையாத உண்மைகள் பல வுரைப்பது; ந பலரா

**மையர்** இயற்றியது ; விலை : அணா 0-8-0 விரைவில் வெளிவரும்.]

**கலை : க0.—இழிசினர்வழக்குரைவரையறை.**

[இஃது ஆந்திரமொழியில வேதம-வேங்கடராய சாஸ்திரியாரவர்கள் செய்ததினின்றும் மொழி பெயர்த்துச் செயயப் பட்டது ; நாடகங்களில் இழிசினர் வழக்குரை வழங்கு மாற்றைத் தெளிவுறக் காட்டுவது ; நல்ல நடையில் எழுதப் பட்டுளது; **வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி.ஏ.,** இயற்றியது ; விலை : அணா 0-4-0. விரைவில் வெளிவரும்.]

**கலை : கக.—அவ்வையார் சரித்திரம்.**

[இது மிகவும் இனிமைவாய்ந்த செந்தமிழ் நடையில் எழுதப் பட்டுளது ; காலவரையறை வரைந்து சுட்டப்பட்டுளது ; **சித்தூர் - சுப்பிரமணியாசாரியார், பி. ஏ., எல். டி.,** இயற்றியது ; விலை : அணா 0—4—0. தபாற் கூலி வேறு.]



## ரு. ஞானதரங்கிணி.



தரங்கம் : க.—பகவத்கீதை (மூலமும் உரையும்)

[விலை : ரூ 1—4—0 தபாற்கூலி வேறு.]

தரங்கம் : உ.—உத்தரகீதை (மூலமும் உரையும்)

[விலை : அணா 0—4—0. தபாற்கூலி வேறு.]

தரங்கம் : ங.—உபநிஷத்துக்கள்.

[பலபாகங்களுள்ளது; பாகமொன்றுக்கு விலை : அணா 0-8-0. தபாற்கூலி வேறு.]

தரங்கம் : ச.—புராணவாராய்ச்சி.

[விலை : அணா 0—4—0. தபாற்கூலி வேறு.]

தரங்கம் : ரு.—கீதையாராய்ச்சி.

[விலை : அணா 0—4—0. தபாற்கூலிவேறு.]

[இந்த ஞான நூல்களனைத்தும் தி. அ. சுவாமிநாத ஐயர், எவ். டி. எஸ்., மொழிபெயர்த்தனவுஞ் செய்தனவுமாம்; விரைவில் வெளிவரும்.]

தரங்கம் : சு.—வித்தியாவிருத்தி.

[இது சிவ வித்தையைத் தெளிவுறக்கூறுவதோர் அரிய ஞான நூல்; வடமொழியினின்று வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி. ஏ., மொழிபெயர்த்தியற்றியது; விலை : ரூ 1—0—0. விரைவில் வெளிவரும்.]



க. தமிழ்மகண் மேகலை.

உ. நாமகள் சிலம்பு.

ங. இன்பவல்லி.

ச. கலாநிதி.

ரு. ஞானதரங்கிணி.

☞ இவ்வைவகை நூற்றொகைகளுக்கும் பதிப்பாசிரியர் செ
ன்னைக் கிறிஸ்தியன் காலேஜ் தலைமைத் தமிழ்ப்பண்டித
வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், பி. ஏ..





Thompson & Co., Printers, Madras.